உள் அட்டையில் காணும் சிற்பக் காட்சியில் பகவான் புத்தரின் அன்னை மாயாதேவி கண்ட கனவின் பலனை மன்னர் சுத்தோதனருக்கு நிமித்திகர் மூவர் விளக்குகின்றனர். அவர்களுக்குக் கீழே அமர்ந்து அந்த விளக்கத்தை எழுதுகிறார் ஓர் எழுத்தர். எழுதும் கலையைச் சித்தரிக்கும் முதல் இந்தியச் சிற்பம் இதுவாகவே இருக்கலாம்.நாகார்ஜுன மலைச்சிற்பம் கி.பி. இரண்டாம் நூற்றாண்டு.

(பட உதவி: நேஷனல் மியூசியம், புதுதில்லி)

இந்திய இலக்கியச் சிற்பிகள்

வண்ணச்சரபம்

# தண்டபாணிசுவாமிகள்

நெல்லை. ந. சொக்கலிங்கம்



சாகித்திய அகாதெமி

*Vannacharabham Dhandapani Swamigal*: Monograph in Tamil by Na.Chockalingam. Sahitya Akademi, New Delhi. 2007. Rs.25


முதல் பதிப்பு: 2007.

சாகித்திய அகாதெமி

இரவீந்திர பவன், 35, பெரோஸ்ஷா சாலை,
புது தில்லி 110001.

விற்பனை

'ஸ்வாதி' மந்திர் சாலை, புது தில்லி 110 001.

மத்தியக் கல்லூரி வளாகம், பல்கலைக்கழக நூலகக் கட்டடம், டாக்டர் அம்பேத்கார் வீதி, பெங்களூர் 560 001.

குணா பில்டிங்ஸ், 443, அண்ணாசாலை, தேனாம்பேட்டை, சென்னை 600 018.

ஜீவன் தாரா பில்டிங், நான்காவது மாடி, டைமண்ட் ஹார்பர் சாலை, கல்கத்தா 700 053.

172, மும்பய் மராத்தி கிரந்த சங்கிரகாலய சாலை, தாதர், மும்பய் 400 014.

விலை: ரூ. 25

ISBN 81-260-2378-3

அச்சிட்டோர் : ராயல் கலர் பிரிண்டர்ஸ், சென்னை

# முகவுரை

**வ**ண்ணச்சரபம் தண்டபாணிசுவாமிகள்(1839-1898) தமிழ், தமிழ்ச் சமுதாயம், தமிழ்ப் பண்பாடு, தமிழ் இலக்கியம், தமிழ் இலக்கணம், தமிழர் சமயம் எனப் பல்துறைகளில் பணிசெய்து பைந்தமிழை வளப்படுத்திய 'சொல்லேர் உழவர்'. அவர் ஓர் இலக்கண இலக்கியக் களஞ்சியம்! வண்ணப்பாடல்கள் பாடுவதில் வல்லவர் என்பதனால் 'வண்ணச்சரபம்' என்றும், கையில் தண்டத்தைக் கொண்டிருந்தமையால் 'தண்டபாணி சுவாமிகள்' என்றும், முருகனைப் பற்றிய அருட் பாடல்கள் பாடியமையால் 'முருகதாசர்' என்றும், திருப்புகழ்ப் பாடல்கள் பல பொழிந்தமையால் 'திருப்புகழ்ச்சுவாமிகள்' என்றும் அவர் அழைக்கப்பெற்றார். சுவாமிகள்,

*"தமிழ்மொழிக் குயர்மொழி தரணியில் உளதெனில்*
*வெகுளியற் றிருப்போன் வெறும்புல வோனே"*

***(அறுவகை இலக்கணம், 705)***

என்று இலக்கணமுரைத்தவர். அவர் தமிழைப் போற்றித் 'தமிழலங்காரம்' படைத்தவர். திருக்குறள் போல் 'மனுநெறித் திருநூல்', 'வருக்கக்குறள்' இயற்றியவர். சுவாமிகள் அலங்காரம், வகுப்பு, அந்தாதி, பதிகங்கள் திருப்புகழ், முசுகுந்த நாடகம், கீர்த்தனைகள் எனப் பல்லாயிரம் பாடல்கள் பாடியருளிய பெருமைக்குரியர். அவர் 'அறுவகை இலக்கணம்' 'வண்ணத்தியல்பு' என இலக்கண நூல்களையும், தமிழ்ப் புலவர்களின் வரலாற்றைச் செய்யுளில் 'புலவர் புராண'மாகவும் படைத்தளித்த புதுமைப் படைப்பாளி. 'குருபரதத்துவம்' எனத் தன்வரலாற்றைச் செய்யுளில் இயற்றிய முதல்வராவார்; ஆங்கிலேயரின் கொடுமைகளை எதிர்த்து 'ஆங்கிலியர் அந்தாதி' பாடி நாட்டு உரிமை போற்றிய நற்றமிழ்ப் புலவர் ஆவார். சுவாமிகள் ஆதிசங்கரர் வழியில் ஆறு சமயங்களையும் பாடி ஒன்றிணைத்துச் சமய நல்லிணக்கத்திற்கு உழைத்த சான்றோர் ஆவார். இறையுணர்வுப் பாடல்களைப் பாடிய சமயத்துறவியாகிய வண்ணச்சரபர் பெண்மக்களின் கல்வி பற்றியும், கைம்பெண்டிர் மறுமணம் செய்து வாழ்வது குறித்தும் உரத்த சிந்தனையுடன் துணிந்து பேசிய சீர்திருத்த எண்ணம் செழித்த சிந்தனை வள்ளல் ஆவார்.

வண்ணச்சரபம் தண்டபாணிசுவாமிகளின் பன்முகத் திறன்களை நூலாக வடித்துத் தரப்பணித்த சாகித்திய அகாதெமியினர்க்கு மனம் கனிந்த நன்றி.

ஏறத்தாழ ஐம்பதாயிரம் பாடல்கள் பாடிய தமிழ் இலக்கியப் படைப்பாளியைக் குறித்து எழுதுவதற்கு அரிய வாய்ப்பை எனக்கு வழங்குதற்கு உறுதுணையாக இருந்து பேருதவி புரிந்த என் நண்பர் பேராசிரியர் இரா.மோகனுக்கு நெஞ்சார்ந்த நன்றி. இச்சிறு நூலை எழுதுவதற்கு அடிப்படை நூல்களை அவ்வப்போது அளித்துதவிய திருவாமாத்தூர்க் கௌமார மடாலயத்திற்கும், கோவை கௌமார மடாலயத்திற்கும், பேரூர் ஆதீனத்திற்கும் வணக்கம் செறிந்த நன்றி. நூல் எழுதி முடிக்க மனத்தால் எண்ணி உதவிய என் துணைவியார் திருமதி சொ.பிரேமா விற்கும் உள்ளார்ந்த நன்றியைக் கூறி மகிழ்கின்றேன்.

மதுரை-19

இவண்,
**ந.சொக்கலிங்கம்**

# பொருளடக்கம்

# 1
# வாழ்க்கைச் சித்திரம்

*“முருகனருள் பெற்றரிய தமிழ்க்கவிதை*
*மழைபொழியும் முகில்இந் நாட்டில்*
*மருவுபல பதியுடைத் தினியதமிழ்ப்*
*பாவருளி மக்கள் போற்றப்*
*பெருமைபெறு மாமுனிவன் தணடபா*
*ணிப்பெயர்கொள் பெம்மான் வண்ணச்*
*சரபமெனும் சிறப்புடைய திருமுருக*
*தாசர்செய்த தமிழ் தேன்போலும்.”*

***-கி.வா. ஜகந்நாதன், வில்வநல்லூர்ப் பிரபந்தத் திரட்டு***

என்று பெரிதும் வாழ்த்தப் பெறும் சீரும் சிறப்பும் நிறைந்தவர் வண்ணச்சரபம் தண்டபாணிசுவாமிகள். திக்கெட்டும் புகழும் திருநெல்வேலி மாநகரில் 1839- ஆம் ஆண்டு( 28-11-1839) சைவ வேளாளர் மரபில் செந்தினாயகம் பிள்ளைக்கும் பேச்சி முத்தம்மாளுக்கும் மூத்த மைந்தனாகத் தோன்றியவர்தாம் வண்ணச்சரபம் தண்டபாணிசுவாமிகள் ஆவார்.

*“ஈண்டுமா மாடங்கள் மாளிகை*
*மீதெழு கொடிமதியம்*
*தீண்டிவந் துலவிய திருநெல்வேலி”*

என்று திருஞானசம்பந்தர் படம்பிடித்துக் காட்டிய ஊர் திருநெல்வேலி. இவ்வூர் தண்பொருநை ஆற்றின் கரையில் அமைந்திருக்கும். வளமான பச்சைப் படாம் விரித்தது போலும் காட்சி தரும் நஞ்சை வயல்கள் சூழ்ந்த நகரமாகும். அந்நகரில் சுவாமிகள் கலியுகம் 4941 விகாரி ஆண்டு கார்த்திகைத் திங்கள் 16-ஆம் நாள்அத்தநட்சத்திரத்தில் தோன்றினார். இத்தகவலைச் சுவாமிகள்தாமியற்றியுள்ள‘குருபரதத்துவம்’ என்ற நூலில்,

*“ஆறினில்கேது ஏழிடத்தினில் உடுபதி எட்டில்*
*வாதிடும் குரவர் இருவரும் நவத்தில் மால்சனிஎல்ல வன்குளிகன்*
*தீதில் அத்தம் தினம்திரம் தேதியன்ன வாறே”*

***(குருபரதத்துவம், பிரயோக விநோதச் சருக்கம்.6)***

எனச் சுட்டிச் செல்வதும் இங்கே எண்ணத்தகும். குழந்தைக்குச் சாதகம் கணித்தனர் பிள்ளையின் தந்தை செந்தில்நாயகர். பெரியசோதிடர் அப்போது, வல்லதோர் பெருங்குருவெனத் திகழ்ந்தருள் வாழ்வடைந் திடுமென்றான்.''(தண்டபாணி விஜயம், பூருவபாகம்,16) அப்போது சங்கரன்கோவிலில் எழுந்தருளியுள்ள சங்கரநாராயணர், அருச்சகர் உருவிலே வந்து தோன்றி,

*''எனது சங்கர லிங்கமாந் திருப்பெய ரிசைத்துமூ விசைகூவில்*
*உனது சஞ்சலம் அறச்சசு வுய்ந்திடும் உறுதியென் றுரைத்திட்டார்.''*

அவ்வருச்சகரின் அறிவுறுத்துதலுக்கு ஏற்பச் செந்தில்நாயகர் தம் மைந்தனுக்குச் 'சங்கரலிங்கம்' என்று பெயரிட்டழைக்கலாயினார். பிள்ளைப் பருவச் சடங்குகளை எல்லாம் பெற்றோர்கள் சங்கரலிங்கத்திற்கு முறையாகச் செய்து முடித்தனர். இவருக்குப்பின் சித்திரபுத்திரர் என்ற தம்பியும் தோன்றினார். சுவாமிகளுடைய தந்தையார் நெற்கட்டும் செவல் சிற்றரசரிடம் படைத்தளபதியாகப் பணியாற்றியவர் ஆவார்.

ஐந்து வயதிலேயே சங்கரலிங்கம் ஏட்டுக்கல்வி கற்கத் தொடங்கினார். ஏடும் எழுத்தாணியுமே அன்றைய எழுது பொருள்கள் ஆகும். சங்கரலிங்கத்திற்கு ஆறரை வயது ஆகும்போது அன்பிற்கு இனிய தம் தந்தையை இழந்து அவர் தவித்தார். தந்தையை இழந்தமையால் சங்கரலிங்கத்தினுடைய கல்வி தடைப்பட்டது. தென்காசிக்கு அருகில் உள்ள சுரண்டை என்ற ஊரிலே இவருடைய பெரிய தந்தையார் சிதம்பரம் பிள்ளை என்பார் சங்கரலிங்கத்தின் கூர்த்த அறிவாற்றலை வியந்து தம்மோடு அழைத்துச் சென்று சுரண்டையிலேயே அவரைக் கல்வி பயிலுமாறு ஏற்பாடுகள் செய்தார்.

''விளையும் பயிர் முளையிலே தெரியும்' என்னும் பழமொழிக்கு ஏற்பச் சங்கரலிங்கம் நுண்ணறிவும் நூலறிவும் பெற்றிருந்தார். இந் நிலையில் சுரண்டையிலே நடைபெற்ற நிகழ்ச்சி ஒன்று சங்கரலிங்கத்தின் நுண்மாண் நுழைபுலத்தையும் கவிமழை பொழியும் ஆற்றல் நலத்தையும் தமிழ் மக்கள் அறியுமாறு வைத்தது. சுரண்டையைச் சுற்றிச் சித்திராநதி ஓடிச் செழிப்பாக்குகின்றது. அந்த ஆற்றின் கரையிலே 'பூமிகாத்தாள்' என்ற அம்பாள் கோயில் இருந்தது. அவ்வூருக்குத் தலச்சுற்றுலா வந்த பெரியோர்கள் 'பூமிகாத்தாள்' திருக்கோயிலுக்கு வந்து வழிபாடு நிகழ்த்தி யிருந்தனர். அவர்கள், அங்குக்கூடியிருந்த அவ்வூர்ப் பெரியவர்களிடம், 'பூமிகாத்தாள்' என்ற பெயருக்கு விளக்கம் கூறுமாறு வேண்டினார்; விளக்கம் சொல்ல முடியாமல் அப்பெரியவர்களோ அச்சடித்த தமிழ்ப் பதுமையாக நின்றிருந்தனர். அப்போது அங்கே தம்மை யொத்த சிறுவர்களுடன் விளையாடிக்கொண்டிருந்த சங்கரலிங்கம் தாமாகவே முன்வந்து

பூமிகாத்தாளுக்கு ஒரு வெண்பாவிலே விளக்கம் சொன்னாராம். சிறுவன் சங்கரலிங்கம் பாடிய செந்தமிழ் வெண்பா இதோ:

*"அமுதம் கடையுநாள் ஆலம் வெடித்துத்*
*திமுதமெனத் தீயெரித்துச் சென்றது-அமுதமெனத்*
*தீக்கடவுள் உண்டார் திருக்கண்டத் தைப்பிடித்துக்*
*காத்ததனாற் பூமிகாத் தாள்."*

**(தனிப்பாடல் திரட்டு.1)**

நேரிசை வெண்பாவில் புராண மரபுக் குறிப்புடன் விளக்கம் சொன்ன சிறுவன் சங்கரலிங்கத்தைப் பெரியவர்கள் மிகுதியும் வியந்து பாராட்டி வாழ்த்தினர். அப்போது சங்கரலிங்கத்திற்கு எட்டரை வயதிருக்குமாம். திண்ணைப் பள்ளியில் பயின்று வந்த சங்கரலிங்கத்திற்கு ஓதாதுணர்ந்த கல்வி நலம் முன்னமேயே வாய்த்திருந்தது என்பதுதான் உண்மை. 'தோடுடைய செவியன்' என்று மூன்று வயதுப் பிள்ளையாக இருந்த போதே தோணிபுரத்து ஈசனைப் பாடிப் பரவிய திருஞானசம்பந்தரின் அருளாற்றல் இங்கே நினைந்து பார்க்கத்தகும். பேசும் திறம் இன்றி ஐந்து வயதுவரை ஊமைப்பிள்ளையாக இருந்த குமரகுருபரர் திருச்செந்தூர் முருகப் பெருமானுடைய அருளால், 'கந்தர் கலிவெண்பா' ப்பாடிய அருள் திறத்தை வண்ணச்சரபருடைய வெண்பாப் பாடிய திறத்துடன் ஒப்பவைத்து உணரவேண்டும். 'ஏடாயிரம் கோடி எழுதிப் படிக்காதே தன் மனத்தே எழுதிப் படித்த விரகன்' அந்தகக்கவி வீரராகவ முதலியாரின் புலமைவளம் போலும் விளங்கிய புலமைத் திறம்தான் தண்டபாணி சுவாமிகளுடையதும்! 'கருவில் திரு' என்பது இதுதான் போலும்! தந்தையை இழந்த நிலையில் சுவாமிகளின் இளமைக் கல்வி தடைப்பட்டு நின்று விட்டது.

## குருவருள் நோக்கம்

தந்தையின் உற்ற நண்பராகிய சீதாராமநாயுடு என்பவரிடம் சுவாமிகள் இலக்குமி மந்திரம், ஆறெழுத்து மந்திரங்களைக் குருமொழியாகக் கற்றுணர்ந்தார். குருவருளும் திருவருளும் வேண்டும் என்பார்கள். 'குருப் பார்வை கோடிப் புண்ணியம்' அல்லவா! எட்டரை வயதிலேயே சுவாமி களுக்குச் சீதாராம நாயுடு விநாயக மந்திரம், இலக்குமி மந்திரம், ஆறுமுகப் பெருமானின் ஆறெழுத்து மந்திரம் ஆகியவற்றை உபதேசித்தருளினார் எனில் மாணவரின் மனப்பக்குவம் இதனால் தெரியவருகிறது. தண்டபாணி சுவாமிகளுக்குச் சீதாராமரே குருவாக விளங்கினர்.

*"ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்*
*தம்முதற் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்தவிட்டு*
*அந்நியம் இன்மையின் அரன்கழல் செலுமே"*

**(சிவஞானபோதம்,8)**

என்னும் மெய்கண்டதேவநாயனாரின் கூற்றுக்கு ஏற்பச் சுவாமிகள் குருவருளைப் பெற்று இறைவழிபாட்டில் நாளும் தலைப்பட்டார்.

குருவருள் நோக்கில் ஆட்பட்ட சிறுவர் சங்கரலிங்கம் கடல்மடை திறந்த வெள்ளம் போலும், "இம்மென்னு முன்னே எழுநூறும் எண்ணூறும் அம்மென்றால் ஆயிரமும்' பாடி முடிக்கும் காளமேகப் புலவரைப் போலப் பாடும் திறத்தைக் கண்ட இவர்தம் குரு சீதாராமர், இவரை, 'ஓயாமாரி' என்று பாராட்டிப் பெருமைப்படுத்தினார். இவருடைய உபாசனையின் பெருமையினையும் சிறப்பினையும் நன்குணர்ந்த ஊர்மக்கள் இவரை அன்று முதல் 'முருகதாசர்' என்றே அழைக்கலாயினர். 13 வயது நிரம்பியிருந்த சங்கரலிங்கம் அன்று முதல் முருகதாசர் ஆனார்.

### கல்லாடை புனைதல்

முன்னைப் பழவினையின் தொடர்பினாலே முருகதாசர் திருநெல் வேலியிருந்து வள்ளியூருக்குச் சென்றார். அது முருகப்பெருமான் குடியிருக்கும் குன்றுதோறாடலாகும். அம் மலையிலே முருகதாசர் தவமியற்றியிருந்தார். பின்னர் அங்கு எழுந்தருளியுள்ள குகன் சந்நிதியில் கல்லாடை, இலங்கோடு, கௌபீனம் முதலியவற்றை வைத்துப் பூசனை நிகழ்த்தி வழிபட்டார். பின் அவற்றைப் புனைந்து கொண்டு முருகப் பெருமான் எழுந்தருளியுள்ள திருச்செந்தூர் போன்ற திருத்தலங்களுக்கு முருகப்பெருமான் அருட்காட்சி வேண்டித் தலப்பயணம் புறப்பட்டார். முருகப்பெருமானின் அருட்காட்சி காணப்பெறாமல் முருகதாசர் மனம் மிகவும் நொந்து வருந்தினார்.

*"சீல வேதமும் ஆகமகப் பகுதியும்*
*தினம்தினம் பெரிதேத்தும்*
*கால காலனுக் கருள்புரி திருப்புகழ்க்*
*கந்தவேள் கரந்தாங்கும்*
*வேல தேதுணை யெனக்கொடு பற்பல*
*விரைமல ரருச்சிக்கும்*
*கோலம் நீடுறு பூசைமிக் காற்றலே*
*குணமெனக் கொடுவாழ்ந்தேன்."*

**(குருபரதத்துவம், 31)**

என்று சுவாமிகள் கூறுவதால் அவர் வேற்பூசையையே நாள்தோறும் நிகழ்த்தி வந்தமை பெறப்படும். முருகப்பெருமான் முருகதாசருக்குக் காட்சி தராத வேதனை அவருள்ளத்திலே மிகுந்தது. இதனால் உள்ளம் உருகிய முருகதாசர் தென்காசிக்கு அருகில் உள்ள திருமலையின் மேல் எழுந்தருளி யுள்ள குன்றெறிந்த குமரக்கடவுளை வழிபட எண்ணித் திருமலைக்குச் சென்றார்.

## திருமலையினின்றும் உருளுதல்

ஆற்றொழுக்காய் அருந்தமிழ்ப் பாடல்களால் ஆறுமுகப் பெருமானைப் போற்றிப் பாடிவரும் முருகதாசர் திருமலை சென்று பெருமானின் அருட் காட்சிக்கு ஏங்கி நின்றார். முருகப்பெருமானின் திருவிளையாடல்களுள் இதுவும் ஒன்று போலும்! ஏங்கி நின்ற முருகதாசருக்கு முருகன் காட்சி யளிக்கவில்லை. ஏமாற்றம்தான்! இதனை எண்ணிய முருகதாசர் அந்த மலைக்கோயிலின் நேர் கிழக்குத் திசையில் நின்று புதுமைப்பாக்கள் பல புனைந்து விட்டு வடக்குத் திசையில் தம்முடைய தலை அமையுமாறு செய்துகொண்டு ஆழ்ந்தகன்ற நுண்ணிய இறையுணர்வு மேலீட்டுடன் மலை யிலிருந்து கீழே உருண்டார்; மலையிலிருந்து நிலத்திலே வந்து வீழ்ந்தார். உடன் வந்த மாணவராகிய சரவணதாசர் என்னும் அருணாசலத் தொண்டமான் மலையிருந்து உருண்ட சுவாமிகளை உடனே கீழே சென்று ஆறுதல் மொழிகள் பல கூறி வருந்தி நின்றார். மலை மீதிருந்து உருண்டு வீழ்ந்த முருகதாசருக்கு உடம்பில் பெருந்துன்பம் ஏதும்-இழப்பு ஏதும் -ஏற்படவில்லை. உடம்பில் சிறுசிறு சிராய்ப்புகள் மட்டுமே ஏற்பட்டிருந்தன.

*"வடதிசையில் தலைவைத்து மறலிதிசைக் கால்நீட்டி*
*உடலையந்தத் திருமலையின் உச்சிநின் றுருட்டிவிட்டேன்*
*விடலையிடுந் தேங்காய்போல் வேறுபட்டுச் சிதறாமல்*
*மடமடெனச் சென்றங்கோர் மண்தரையில் வீழ்ந்ததுவே"*

***(குருபரதத்துவம், ப.50)***

எனத் தாமியற்றியுள்ள 'குருபரதத்துவம்' என்னும் வாழ்வியல் நூலுள் சுவாமிகள் குறிப்பிடுவது இவண் எண்ணத்தகும். மனம் சலிப்படைந்த முருகதாச சுவாமிகள் செங்கோட்டை சென்று அங்கு தவநிலையில் முருகனை எண்ணி இருந்தார். அப்போது முருகப் பெருமான் அவருடைய மனவெளியிலே தோன்றி,

*"உருண்ட போதுடல் சிதைந்து கைகால் பழுதற் றுயிர் போகாமற்*
*றெருண்ட சிந்தனை யுறுதிமாறா மற்றன் திருவருளாற் காத்தே*
*இருண்ட க்ங்குலின் கனவிலிப் படியுருண் டிடத்துணிந்தனை வீணே*
*மருண்டிறந்திடு வென்செய்வாய் தாங்கினேன் யானென்றான் வடிவேலன்."*

***(தண்டபாணிவிஜயம், பூருவபாகம், 43)***

என்பது முருகதாசருடைய மைந்தரின் வாக்கு. தமக்கு உடலில் துன்பம் ஏதும் ஏற்படாமற் காத்த முருகவேளின் தண்கருணையை முருகதாசர் வியந்து போற்றி மகிழ்ந்தார். தென்காசிக்கு அருகில் உள்ள திருமலைத் திருக்கோயில் முருகன் சந்நிதிக்கு நேர் உள்ள தொண்டுப் பகுதி இப்போது அடைக்கப்பட்டுள்ளது. சுவாமிகள் மலையிலிருந்து உருண்ட செய்தி அங்கே எழுதப்பட்டுள்ளது என்பதும் அறியத்தக்க ஒன்றாகும்.

## முருகன் முற்பிறவியை உணர்த்துதல்

தாமிரபரணி ஆற்றின்கண் ஆற்றிடைக்குறை என்பார்களே அதுபோல அமைந்திருப்பது திருவுருமாமலை என்னும் குறுக்குத்துறை முருகன் திருக்கோயில் ஆகும். அருணகிரிநாதரால் திருப்புகழ்ப் பாடல் பாடப்பெற்ற திருத்தலம் இது. இதன் சிறப்பை,

*"பூவளஞ்சேர் காக்களிலும் பேரார் மனைகளிலும்*
*மாவளஞ் சீருரு மாலையே - மேவளரும்*
*கந்தனத்தன் கொண்டல் கருங்குழலி மாதுமையின்*
*பந்தனத்தன் கொண்ட பதி"*

**(திருவுருமாமலைச் சிலேடை வெண்பா, 1)**

என்ற வெண்பாவின் வழி அறியலாகும். முருகதாசர் இத்திருக்கோயிலில் இருந்துதான் பற்பல பைந்தமிழ்ப் பாடல்களை இயற்றி வந்துள்ளார். பாபநாசத்தில் அணை கட்டப்படாத நிலையில் மழைக் காலங்களில் வெள்ளப்பெருக்கில் அத்திருக்கோயிலே மூழ்கி மிதந்துவிடும். 'ஆடிப்பெருக்கிலே அம்மியே பறக்கும்' என்பதுபோல ஆற்றுவெள்ளத்தில் ஆலமரமே மிதந்துவரும்! அப்படி இருக்கச் சுவாமிகளின் பாடல்கள் புனைந்தெழுதிய பல ஆயிரம் ஏடுகள் வெள்ளத்திற்கு இரையாய்ப் போகாமல் இருக்குமா?

திருவுருமாமலையில் ஒருநாள் மணல் திட்டிலே சுவாமிகள் ஆறெழுத்து மந்திரத்தை உச்சரித்த வண்ணம் தவநிலையில் இருந்தார். அந்நேரம் குழந்தைவேலர் வெண்ணீறு சண்ணித்த மேனியும் குமிண் சிரிப்பும் உடையவராய்த் தவமிருந்த முருகதாசரின் மடியிலே வந்து அமர்ந்து அருட்காட்சி வழங்கினார். உடன் வீரவாகு தேவரும் வந்திருக்கச் சுவாமி களின் தோளிலே கையைச் சுற்றிக் கோத்துக் கொண்டு அமர்ந்திருந்தார். எழில் மிக்க குழந்தையாகத் தம் மடிமீது வந்தமர்ந்த குகவேளிடம் முருகதாசர், "முற்பிறப்பில் தாம் யார்?" எனக் கூற வேண்டினார். அதற்கு அந்த ஆறுமுகப் பெருமான், "நீ நமது அருணகிரியே!" என்று கூறினாராம். "அருணகிரிநாதர் முத்தியடைந்து விட்டாரே" என்று சுவாமிகள் ஐயம் எழுப்ப, வடிவேலனோ, "அது அப்படித்தான்" என்று ஆணித்தரமாக அறுதியிட்டுக்கூறி மறைந்துவிட்டார். இதனைச் சுவாமிகள் தம்முடைய வாய்மொழியாகப் பாடியதிலிருந்து அறிந்துகொள்ள முடிகிறது.

*"வல்லைவந் தன்பரைக் காக்கும்செவ் வேற்கை வரதனைக் கண்டு*
*எல்லையில் லாக்களிப் பாய்மடி மீதில்இருக்கு மென்னைத்*
*தொல்லை அருண கிரிதான்என் றன்னவன் சொன்ன துண்மை*
*இல்லையென் றாற்குமுக்கென்றுவருங் கோடை இடிவிழுமே"*

**(தனிப்பாடல் திரட்டு, 180)**

என்பதே அவர்தம் வாய்மொழிச் சான்றாகும்.

பொருநை ஆற்றின் வெள்ளப்பெருக்கில் சுவாமிகளின் பிரபந்தங்கள் பல அடித்துச் செல்லப்பட்டமைக்கு அவர் மிகவும் வருந்தினர். வருந்தியதோடு நில்லாமல் தாம் இயற்றியிருந்த பிற தமிழ் ஏடுகளையும் கிழித்து எறிந்துவிட்டாராம். இதனைச் சுவாமிகளின் மைந்தன் செந்திநாயக சுவாமிகள் தம்முடைய 'தண்டபாணி விஜயம்' என்ற நூலில் பின்வருமாறு சுட்டிப் போகின்றார்.

*''உருமலைத்திருக் கோயில்வைத்தவே டொக்கவந்த நதிவெள்ளம்*
*பெருகலா லனைத் தழிந்தமை தெரிந்துபல் பிரபந்த முளவெல்லாம்*
*பொருவிலாற்றிடைக் கிழித்தெறிந்திட்டனர் புலமை தவஞானத்*
*திருவுந்தீரவை ராகமுங் கலந்தவர் செயலெவர் தெரிவாரே''*

***(தண்டபாணி விஜயம், பூருவபாகம், 48)***

## *வடதிசை வழிபாட்டுலா*

முற்பிறப்புணர்ந்து முத்தமிழ்ப் பாடல்களை இயற்றி இறை·யுணர்வை வெளிப்படுத்திய முருகதாசர் எனப்பட்ட தண்டபாணிசுவாமிகள் தமிழகத்தின் வடபகுதித் திருக்கோயில்களில் எழுந்தருளியுள்ள தெய்வங்களைத் தீந்தமிழ்ப் பாக்களால் மாலைசூட்டி மகிழ்தற் பொருட்டு நெல்லையை விட்டுப் புறப்பட்டார்.

*''பிழைத்த பிடியைக் காணாதோடிப் பெருங்கை வேழம்*
*அழைத்துத் திரிந்தங் குறங்கும் சாரல் அண்ணாமலை யாரே''*

***(தேவாரம், 746)***

என்று திருவண்ணாமலையின் இயற்கை எழிலை ஏற்றமுறப்பாடுவார் திருஞானசம்பந்தர். இத்தகைய பெருமைக்குரியதும் நினைக்க முக்தி தருவதுமாகிய திருவண்ணாமலைத் திருத்தலத்திற்குச் சென்று அங்குள்ள ஈசானியத் திருமடத்தில் சுவாமிகள் தங்கியருந்தார். அன்று இரவு பெருமான் சுப்பிரமணியக் குருக்களின் உருவில் இவர்தம் மனவெளியில் தோன்றி, ''நீ நமது கோபுரத்திற்கு வருக'' என ஆணையிட்டான். ஆணையை ஏற்ற சுவாமிகள் அண்ணாமலையார் திருக்கோயிலில் இரண்டாவதாக உள்ள வல்லாளன் திருக்கோபுரத்திற்கு மறுநாட் காலையில் சென்றார். முன்பு சந்தமலி செந்தமிழ்த் திருப்புகழ்ப் பாடல்கள் பாடியருளிய பெருமை நிறை அருணகிரிநாதருக்குத் திருக்காட்சி நல்கியருளிய கம்பத்து இளையனாராகிய முருகனுடைய திருமுன் நேர்வாயிலுக்கு முன்னால் பெருஞ்சுவரொன்று எழுப்பப்பட்டிருந்தது. அதன் காரணமாகப் பூசனைகள் அங்கே தடைப்பட்டு நின்றன. இச்செயலை அறிந்த சுவாமிகள் உள்ளம் மிகவும் வருந்தினர். அவ்வூரில் வாழ்ந்த சந்து மண்டி இராமசாமி முதலியார் மற்றும்

இறையன்பர்கள் பலருடைய அன்பினைத் திரட்டி அவர்களின் துணையினால் சந்நிதிக்கு எதிரே எழுப்பப்பட்டிருந்த சுவரை இடித்து நீக்கி விட்டுத் தூய்மைப்படுத்தினார். மேலும் தம் கையிலிருந்த வேலாயுதத்தை அங்கே அணிவித்து நாள் வழிபாடுகள் தங்குதடையில்லாமல் முறையாக நடைபெறவும் சுவாமிகள் வழி வகுத்தார். உழவாரத் தொண்டாற்றிய திருநாவுக்கரசர் வழியிலே திருக்கோயிலைத் தூய்மைப்படுத்தும் திருத்தொண்டினை இவர் நிறைவேற்றியுள்ளமை இதனால் பெறப்படும். கம்பத்து இளையனார் கோவிலில் வௌவால்கள் குடியேறித் தூய்மைக் கேட்டை ஏற்படுத்தி இறையன்பர்கள் முகம் சுளிக்குமாறும் மூக்கைப் பொத்திக் கொண்டு செல்லுமாறும் இருந்த சூழ்நிலையைச் சுவாமிகள் மாற்றியமைக்க முனைந்து அதில் வெற்றியும் கண்டார். மக்கள் நாடோறும் வந்து வழிபாடு நிகழ்த்தும் வகையில் சுவாமிகள் 'சகத்ர தீபம்' என்றொரு நூலையும் இயற்றியருளினார். 'சகத்ர தீபம்' என்பது இப்போது 'திருவிளக்காயிரம்' என இரு தொகுதிகளாக வெளியிடப்பட்டுள்ளது. ஆம்! திருஞானசம்பந்தர் பூம்பாவையை உயிருடன் எழுப்பியபோது இறையருளை வேண்டிக் கசிந்துருகிக் கண்ணீர் மல்கிப் பாடிய,

*"வளைக்கை மடநல்லார் மாமயிலை வண்மறுகில்*
*துளக்கில் கபாலீச் சரத்தான்தொல் கார்த்திகைநாள்*
*தளந்தேந் திளமுலையார் தையலார் கொண்டாடும்*
*விளக்கீடு காணாதே போதியோ பூம்பாவாய்"*

**(தேவாரம், 1973)**

என்பதற்கு இணங்கத் தண்டபாணிசுவாமிகள் 'திருவிளக்காயிரம்' என்னும் புதுமை நூலைப் பாடிப் பரவினர். அவர் பாடியுள்ள ஆயிரம் பாடல்களி லிருந்து இங்கு ஒரு பாடலைக் கண்டு தெளிவோம். இந்நூல் மட்டு மல்லாமல் அவர் 'ஆயிரத்தீபம்' என்ற பதிகமும் பாடினாராம்.

ஒவ்வோர் அதிகாரத்திற்கும் பத்துப் பத்துக் குறட்பாக்கள் திருக்குறளில் அமைந்துள்ளமை போல, ஐங்குறுநூற்றுள் அமையும் பத்துப் பத்துப் பாடல்கள் போல வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் 'திருவிளக்கு ஆயிர'த்துள் அகவற்பத்து, சடாக்கரப் பத்து, திருநீற்றுப்பத்து எனப் பத்துப் பத்துப் பாடல்களாக இயற்றியுள்ளமை இங்கே சுட்டத்தகும்.

*"எண்ணும்வாழ்வு அனைத்தும் அடைந்து இனியவர்தம் குறைதவிர்த்து*
*விண்ணுளார் களும்புகழ விளங்குவதே மிகநாடித்*
*தண்ணுலாம் பொழிலருணைத் தடஞ்சிகரிச் சரவணனை*
*நண்ணுவார் புனைகுவது நனையாவெண் திருநீறே"*

**(திருவிளக்காயிரம், திருநீற்றுப்பத்து, 5)**

### சென்னையில் பிள்ளைத்தமிழ் அரங்கேற்றம்

அரங்கேற்றம் என்பது பழுத்த தமிழ்ப்புலமை பாலித்த தமிழ்ச் சான்றோர் கூடியிருக்கும் அவையிலே நூலியற்றிய புலவர் தம்முடைய நூலை அரங்கேற்றிச் சான்றோர் ஒப்புதல் பெறுவதாகும். இதே போன்று உரையரங்கேற்றமும் தமிழ்ப்புலவர் அவையிலே நடைபெற்றுள்ளமையினை அறிய முடிகின்றது. தில்லை, திருமயிலை ஆகிய திருத்தலங்களை வழிபட்டுப் பின் சென்னையில் சில காலம் சுவாமிகள் தங்கியிருந்தார். அங்கே தங்கியிருந்த காலத்தில் யாழ்ப்பாணத்து நல்லூர் ஞானப்பிரகாசர் வழிவந்த ஆறுமுகநாவலரை நேரிற் கண்டு உரையாடி மகிழ்ந்தார்.

சென்னையில் சுவாமிகள் இருந்தபோது சென்னைக் கந்த கோட்டக் கந்தவேள் மீது பிள்ளைத்தமிழ் ஒன்றைப்பாடி அரங்கேற்றம் செய்தார். "இக்காலத்தில் நூல் மதிப்பீடு செய்யப்படுவதுபோல் நூலை அரங்கேற்றும் வழக்கம் இருந்து வந்தது. நூல் அரங்கேற்றம் என்பது அக்காலத்தில் அவையில் கூடி இருக்கும் புலவர்களின் நன்மதிப்பையும் போற்றுதலையும் ஒரு நூல் பெறுவதாகும். நுண்மாண் நுழைபுலம் சான்ற புலவர்கள் அந்நாளில் அவைக்கு வரும் நூல்களை நுணுகி ஆராய்வர்; அவற்றின் சொற்பொருட் செவ்விகளைத் தம் அறிவென்னும் துலாக்கோலில் இட்டு மதிப்பிடுவர். இங்ஙனம் நூலின் அரங்கேற்றத்தால் நூல்களை நுணுகி ஆராயும் முறையும், சிறந்த பகுதிகள் இவை, சிறவாத பகுதிகள் இவை எனப்பகுத்துக் காட்டும் நெறியும், நூலின் முழுத் தகுதியினையும் காணும் நல்ல ஆராய்ச்சி நெறிமுறையும் அக்காலத்தில் செவ்விதின் நாட்டப் பெற்றன" எனப் பேராசிரியர் இரா. மோகன் (உரை மரபுகள், ப.10) குறிப்பிடுவது இவண் அரங்கேற்றத்தின் நுட்பத்தை எடுத்து விளக்கும். இவ்வாறு நூலை அரங்கேற்றம் செய்யும் போக்கு 18-ஆம் நூற்றாண்டின் இறுதி வரை இருந்துள்ளமைக்குச் சான்று தருவதாக அமைகின்றது தண்டபாணிசுவாமிகளின் சென்னைக் 'கந்தகோட்டத்து முருகன் பிள்ளைத்தமிழ்' நூல் அரங்கேற்றம் எனலாம். அந்நூலை அரங்கேற்றம் நிகழ்த்தும் போது காஞ்சிபுரம் மகாவித்துவான் சபாபதி முதலியார் என்பார் சுவாமிகளிடம் சில வினாக்களை எழுப்பினர். "பிள்ளைத் தமிழில் தாலப் பருவம் 9-ஆம் பாடலில் வரும்,

*"செக்கரும் ஒஞ்சிய செம்மைநிறம் பெறு*
*சேயே தாலேலோ"*

என்னும் அடியில் வரும் 'ஒஞ்சல்' என்பது கடுஞ்சொல், அதற்கு என்ன பொருள்?" என்று வினாவினார். சபாபதி முதலியாரின் வினாவிற்குச் சுவாமிகள், "இச்சொல் பாண்டி நாட்டில் வழங்கும் வெண்சொல். நாணுதல் என்னும் பொருள் உடையது. பாண்டி நாட்டுப் பெண் மக்கள் பேசும்போது

பயன்படுத்தும் சொல் இது'' என்று அமைதி கூறினார். ஆயின் முதலியாரோ இவ்வமைதியை ஏற்றுக் கொள்ளவில்லை. அப்போது சுவாமிகள், ''நமது பாண்டி நாட்டைச் சார்ந்த ஒருவரும் இங்கு இலரோ'' என்று வேண்ட, ''இதோ உள்ளேன். இம்மொழி நமது பாண்டி நாட்டில் உண்டு; அறிவேன்!'' என்று ஒரு சைவ அன்பர் உறுதிப்படுத்தினாராம்.

இந்நூலின் சப்பாணிப் பருவத்தில் வரும் இறுதிப் பாடலில், ''சென்னையில் வைகினை கொட்டுக சப்பாணி'' எனவரும் அடியைச் சுட்டிக்காட்டி, '' 'வைகி' என்னும் சொல்லுக்கு உரிய சந்தம் யாது?'' என முதலியார் மீண்டும் தடை எழுப்பினார். இத்தடைக்குச் சுவாமிகள் 'தய்ய' என்ற சந்தமாகும் என மொழிந்தார். முதலியார் இந்த மறுமொழியை ஏற்கவில்லை. உடனே தண்டபாணி சுவாமிகள், 'மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழில்' குமரகுருபரர் ''வைதிகப் பாட்டினர்'' என்று கூறியது போன்று ''வைகினை'' என்பதனைத் '' 'தய்யன' என்னும் சந்தத்தில் பாடினேன்'' என அமைதி கூறவும் அவரும் ஏற்றுக் கொண்டாராம்.

கந்தகோட்ட முருகன் பிள்ளைத் தமிழ் அரங்கேற்றத்தைப் போலவே தண்டபாணிசுவாமிகள் திருநெல்வேலியில் திருவுருமாமலைத் திருக் கோயிலில் 'அறுவகை இலக்கண' நூலையும் அரங்கேற்றம் செய்து அருந் தமிழுக்கு அணி செய்துள்ளார் என்பதும் இவண் அறியத்தகும் குறிப்பாகும்.

### *பிணக்கில் பிறந்த பிரபந்தங்கள்*

சுவாமிகள் நெல்லையில் இருந்த காலத்தில் கந்தவேள் இவர்தம் கண்முன் காட்சி நல்கி, ''நீ என் மீது பதினாறு பனுவல்கள் பாடுக! பன்னிரண்டு எனக்கு; வள்ளி, தெய்வயானைக்கும் ஒவ்வொன்று; வீரவாகுவுக்கு இரண்டு என்றும் பாடுக; பதினொன்றாம் பனுவலைப்பாடும் போது நமது கந்தலோகத்திலிருந்து திருநீறும், உருத்திராக்கமும் உனக்குத் தருவோம்'' என்று அறிவுறுத்தினான். ஆறுமுகப்பெருமானின் மீது ஆராத காதல் மீக்கூர்ந்த வண்ணச்சரபர் வேலவனின் வேண்டுகோளுக்கு இணங்கப் பிரபந்தங்களைப் பாடத் தொடங்கினார்,. சுவாமிகள் பத்துப் பனுவல்களை முடித்துப் பதினொன்றாம் பனுவலை-காந்தமாலை என்னும் பெயரிய பனுவலையும் பாடிமுடித்தார். ஆனால் வேலவனின் கட்டளையைக் கருத்துடன் நிறைவேற்றியபின் கந்தலோகத் திருநீறும் உருத்திராக்க மாலையும் வரவில்லை. இதனால் சுவாமிகள் முருகப்பெருமானுடன் ஊடல் கொண்டு, தாம் இயற்றியிருந்த பதினொரு பிரபந்தங்களயும் பொருநை ஆற்றிலே கிழித்து வீசினார். அதன் பின்பு சுவாமிகள் பாடல்கள் எதுவும் இயற்றாமல் தியான நிலையில் மூழ்கினார். பின்னர்த் தவநிலை கலைந்தபின்

தம் செயலை எண்ணி மிகவும் வருந்தினார். வருந்திய சுவாமிகள் பதினாறு பிரபந்தங்ளையும் படைத்துத் திருச்செந்தூர் சென்று கற்றவரும் மற்றவரும் கூடியிருந்த அவையில் அரங்கேற்றம் செய்து மகிழ்ந்தார். வெண்பா அந்தாதி, சிலேடை வெண்பா, திரிபந்தாதி, யமக அந்தாதி, பதிற்றுப் பத்தந்தாதி, செந்தினாயக சதகம், உலா, நவரசமஞ்சரி, அகப்பொருட் கோவை, தசாங்க வகுப்பு, கௌமார விசயம், சந்தமாலிகைத் திருப்புகழ், குஞ்சரிமாலை, வள்ளிநாயகி பிள்ளைத்தமிழ், வீரபாகு வாளலங்காரம், வீரபாகு வண்ணப்பதிகம் என்பவையே அப் பதினாறு பிரபந்தங்கள் ஆகும். அரங்கேற்ற முடிவிலே முருகப் பெருமானிடம் ஆழ்ந்த ஈடுபாடுடைய அருச்சகர் ஒருவர் இலைத் திருநீற்றுப் பிரசாதம் வழங்கினார். சுவாமிளும் வேலவனுடன் கொண்டிருந்த ஊடல் நீங்கித் திருநெல்வேலியை அடைந்தார்.

*"சுக்குக்கு மிஞ்சிய மருந்தில்லை*
*சுப்பிரமணியனுக்கு மேலான தெய்வமில்லை!"*

என்னும் பழமொழியை நன்கு உணர்ந்திருந்தவர் தண்டபாணி சுவாமிகள். அதனால் குமரக்கடவுளையும் கௌமார நெறியையும் குறித்து அருட் பாடல்கள் பல பாடி அகம் மிக மகிழ்ந்தார்.

### தமிழையும் தன்மானத்தையும் விட்டுக்கொடா உரம்

நெல்லையிலிருந்து வண்ணச்சரபர் கேரள நாட்டை ஆண்டுவந்த ஆயில்யச் சேர மன்னனை அணுகிப் பொருள் பெறுவதற்குச் சென்றார். திருவனந்தபுரத்தை அடைந்த சுவாமிகள், ஓர் அரண்மனைப் புலவர் வாயிலாக அம்மன்னருக்கு ஒரு மடல் விடுத்தார். மன்னன் அம்மடலைப் பெற்றுச் சிறிதும் பொருட்படுத்தவில்லை. அரசனைக் காணப் போகும்போது வாய்புதைத்துக் கைகளைக் கட்டிக்கொண்டு பேசுதலே முறை என்றும் சுவாமிகளிடம் சிலர் தெரிவித்தனர். இம்முறையைக் கேட்ட சுவாமிகள், மறுமொழி ஏதும் பேசாமல் 'அடக்கம் அமரருள் உய்க்கும்' என்று எண்ணி ஒரு வெண்பாவை இயற்றிவிட்டு அவ்வூரில் எழுந்தருளியிருக்கும் பதுமநாமப் பெருமானை வணங்கிச்சென்று விட்டார். இச்சூழ்நிலையில் வண்ணச்சரபர் வீறுடன் பாடிய தமிழ்ப்பாவின் திறம் இதோ:

*"எங்கும் புதையா திலங்குதமிழ்ப் பாடலென்னும்*
*பொங்கு மதுரம் பொழியும்வாய்-நங்குகவேள்*
*இன்னருள் செய்யான் எனினும்எழிற் கேரளத்து*
*மன்னனிடம் போய்ப்புதைக்கு மா"*

**(தனிப்பாடல் திரட்டு, 271)**

ஆம்! வண்ணச்சரபம் தண்டபாணிசுவாமிகளிடம் காணப்பட்ட தன்னம்பிக்கையும் தளராத தன்மதிப்பும் தமிழ்ப் புலவர்களிடம் வழி வழி வருவதாகும். சங்க கால ஔவையார், பரிசில் தரக் காலம் நீட்டித்தான் என்று கருதிய நிலையில் அதியமான் நெடுமானஞ்சியின் அரணை விட்டு வெளியே புறப்பட்டு வந்து வாயில் காவலர்களிடம் 'கைதொழில் உடைய தச்சர்கள் காட்டுக்குள் சென்றால் அக்காட்டகம் மிகுதியும் பயன்படும்! எமக்கும் யாதொரு திசைக்கண் சென்றாலும் அத்திசைக்கண் சோறு கிடைக்கும்!'' என்ற மனஉறுதியுடன் கூடிய தன்மதிப்புணர்வின் எழுச்சியைச் சுவாமிகளிடம் காண்கிறோம்.

*''கடுமான் தோன்ற னெடுமா னஞ்சி*
*தன்னறி யலன்கொல் என்னறி யலன்கொல்*
*அறிவும் புகழும் உடையோர் மாய்ந்தென*
*வறுந்தலை யுலகமும் அன்றே அதனாற்*
*காவினெங் கலனே சுருக்கினெங் கலப்பை*
*மரங்கொல் தச்சர் கைவல் சிறாஅர்*
*மழுவுடைக் காட்டகத் தற்றே*
*எத்திசைச் செலினும் அத்திசைச் சோறே''*

**(புறம். 206)**

என்னும் ஔவையின் மனத்துணிவு போல நம் சுவாமிகளுக்கும் உள்ளத் துணிவு இருந்தமையினை உணரமுடிகிறது. ''பெரிதே உலகம் பேணுநர் பலரே''(புறம்.207) என்னும் புறநானூற்று வழி வந்த சுவாமிகளின் மனஉரம் புலவர்களுக்கே உள்ள வறுமையிற் செம்மைத்திறம் என்பதில் ஐயமில்லை! சுவாமிகள்புலமைத்துணிவும்தமிழ்த்துணிவும் நிரம்பப் பெற்றிருந்தார். புலமையைவிற்று வாழ்வதும்,பொருளுக்காகப்பாடல் பாடுவதும் கூடாது என்றஅழுத்தமான எண்ணம் அவருக்குஇருந்தது. எனவேதான் அவர்,

*''உன்றனது கேரளநா டொன்றுமே இங்கிலகும்*
*என்றனது நாடுலகம் எங்குமே-பொன்தரநீ*
*மாட்டாயோ சேர மகராச னேமதுரப்*
*பாட்டாசை யின்றோ? பகர்''*

**(தனிப்பாடல் திரட்டு, 272)**

என்று பாடித் திருவனந்தபுரத்திலிருந்தும் புறப்பட்டார். ''அதூஉம் சாலும் தமிழ்முழு தறிதல்'' என்னும் மோசிகீரனார் வழியில் வந்தவர் வண்ணச் சரபர் என்பது இதனால் புலனாகின்றது. திருவனந்தபுரத்திலிருந்து திருநெல்வேலி வரும் வழியில் கொங்குநாட்டு ஊற்றுக்குழி என்ற ஊருக்கு அவர் வந்தார். அவ்வூரைத் தலைமை இடமாகக் கொண்டு ஆண்டுவந்த ஒரு சிற்றரசரைக் கண்டுவரச் சுவாமிகள் கருதினார். தக்க ஒருவர்

வாயிலாகக் கடிதம் கொடுத்தனுப்பினார்; சிற்றரசனோ மறுமொழி ஏதும் கூறவில்லை.

*''ஊற்றுக் குழியில் ஒருகணக்கப் பிள்ளைசெய்த*
*ஆற்றல் அளவும் அரண்மனையார் செய்யவில்லை.*
*ஏற்ற மிகுபழனிக் கேகென்று இரவிசொலத்*
*தோற்றியது வேலனருள் செய்யும்விதம் தேர்ந்திலனே.''*

**(தனிப்பாடல் திரட்டு, 37)**

மனித மனங்களைத் தண்டபாணிசுவாமிகள் நன்கு அளந்து அறிந்து வைத்திருந்தார் என்பதும் தன்மதிப்பு மிகவும் உடையவர் என்பதும் தமிழை விற்றுப் பிழைப்பது கூடாது என்ற அழுத்தமான எண்ணம் கொண்டவர் என்பதும் மேற்கண்ட நிகழ்ச்சிகளால் உறுதிப்படுகின்றன.

## பழனித் திருவாயிரம் படைத்தல்

ஊற்றுக்குழியிலிருந்து சுவாமிகள் முருகப்பெருமான் எழுந்தருளியுள்ள பழனிக்கு அருகில் ஆவினன்குடிக்கு வந்து தங்கினார். அவர் பழனி மலையில் குடியிருக்கும் குகவேளைக் கண்டு வழிபடச் சென்றார். செல்லும் வழியிலே இடும்பன் கோவில் இருப்பது கண்டார். அங்கு உயிர்ப்பலி இடுவதாக இறையன்பர்கள் கூறக் கேட்டுச் சுவாமிகள் மனம் மிகவும் வருந்தினர். இடும்பனைக் கண்டு அறிவுறுத்தும் வகையில் உயிர்க் கொலையைத் தவிர்க்குமாறு ஒரு வெண்பாப் பாடி, மலை முகட்டில் உள்ள தண்டபாணிக் கடவுளை வழிபட்டுச் சிலகாலம் பழனி அடிவாரத்திலேயே தங்கியிருந்தார். அவ்வமயம் 'பழனித் திருவாயிரம்' என்ற நூலைப்பாடி மகிழ்ந்தார்.

## தமிழ் நட்பு

சுவாமிகள் பழனிமலை அடிவாரத்தில் தங்கியிருந்தார். அக் காலத்தில் அப்பகுதியில் மாம்பழக்கவிச்சிங்க நாவலர் மடக்குப்பாடிப் பலரை அடக்குவித்த ஆற்றல் சான்ற புலவராக விளங்கி வந்தார். இவர்தம் முன்னோரால் உருவாக்கப்பட்ட மண்டபமே இன்று ''புதுமண்டபம்' என்று அழைக்கப்படுகிறது. அச்சிற்பியின் வழித்தோன்றலாகிய மாம்பழக் கவிச்சிங்க நாவலர் பார்வை இழந்தவராயிருந்தும் பைந்தமிழ்ப் பாவலராகத் துலங்கினார். பெற்றோர் இட்ட இயற்பெயர் எதுவாயிருந்தாலும் விருதுக் குரிய பெயரை வைத்து அழைப்பது தமிழ் மரபாக இருந்து வந்துள்ளது. 'வெண்பாப்புலி' 'சந்தச்சரபம்', அட்டாவதானி, 'கவிக்குஞ்சரம்' 'சர்க்கரைப் புலவர்' என விருது பெயரையே கொண்டு அக்காலப் புலவர்களை அழைத்துப் பெருமைப்படுத்தியமை போல 'வண்ணச்சரபம்' எனத்

தண்டபாணி சுவாமிகள் அழைக்கப்பெற்றார். பழனிமலை அடிவாரத்தில் சுவாமிகள் தங்கியிருந்த நாளில் பைந்தமிழ்க் காதலால் மாம்பழக்கவிச்சிங்க நாவலரும் வண்ணச்சரபரும் நெருங்கிய நட்புடையவராய் விளங்கினார்.

*"தென்பழநி மலையில் வளர்*
*தண்டா யுதக்குமர*
*தேசிகன் பத சேகரம்"*

*"தடவிரண மணிமகுட*
*சரவண பவானந்த*
*சண்முகன் அருட்பிரவாகம்"*

என முருகனைப் பைந்தமிழ்ப் பாக்களால் பாடிக் கௌமார நெறியை வளர்த்த மாம்பழக்கவிச்சிங்க நாவலரும் குமரனைப் போற்றுவதே வாழ்வின் குறிக்கோள் என வாழ்ந்த தண்டபாணிசுவாமிகளும் தமிழால் நட்புக் கொண்டதிலே ஓர் ஒற்றுமையைக் காணமுடிகிறது.

*"தண்டணி கரத்தெம் கோமான் தறுகிய சயிலப் பாங்கர்*
*வண்டமிழ்ப் புலமை சான்ற மாம்பழக் கவிச்சிங் கம்தான்"*

**(புலவர்புராணம், 2991)**

என்ற சுவாமிகளின் புகழ்மொழி இங்கே நினையத்தரும்.

### சேதுபதியைக் காணவிழைதல்

பழனியிலிருந்து இராமநாதபுரம் சென்ற வண்ணச்சரபர் சேதுபதி மன்னரைக் காண விரும்பினார். ஆனால் அச்சந்திப்புக்குத் தடை ஏற்பட்டது. அப்போது மன்னரிடமிருந்து வெண்பாவின் ஈற்றடி கொடுத்துப் பாடும் வண்ணம் ஓர் ஓலை வந்தது. சுவாமிகளின்பால் அழுக்காறு கொண்ட புலவர்கள் சிலர் மன்னரால் வெண்பாவின் ஈற்றடி தரப்பட்டது என்று சுவாமிகளிடம் பொய் கூறினர். சுவாமிகள் மன்னரைக் காணாத வண்ணம் அழுக்காறு கொண்ட புலவர்கள் செய்த இழி செயல் அது என்பதனை அறிந்துகொண்டார். சுவாமிகள் அதனைப் பொருட்படுத்தாமல் 'வண்ணம் பாடும் எனக்கு இது மிக எளிதாகும்" என்று அந்தப் புலவர்களுக்கு அறிவுறுத்திவிட்டு "இதோ! ஒரு கலை பாடித் தருகிறேன். நீங்களோ அரசரோ அதனை முடித்துப் பாடுங்கள்" என்று அறைகூவலும் விடுத்தார். மன்னர் தந்ததாகச் சொல்லப்பட்ட வெண்பாவின் ஈற்றடி,

*"கண்விண்பெண் பொன்பண் கனி"*

என்பதாகும். மேற்கண்ட ஈற்றடிக்கண் வரும் ஆறு சொற்களுக்கு முறைப்படி முருகனுக்குப் பொருந்தி வருமாறு ஒரு வெண்பாவை அவர் பாடினார். அறைகூவலாக இயற்றப்பட்ட வெண்பா இதோ:

*''முருகனுக்கு மூவாறு, முன்புதொட்டுக் காத்தல்*
*உருமயல் ஈதல் உறுபூண்-பெருகுசெவி*
*உண்மகிழ்ச்சி சேர்ப்ப துலகதனைச் சூழலிடல்*
*கண், விண் பெண், பொன், பண், கனி''*

**(தனிப்பாடல் திரட்டு, 314)**

இவ்வெண்பாவை நிரல்நிறைப் பொருள்கோளாக அமைத்துப் பாடிய சுவாமிகளின் புலமைத் திறம் எண்ணி மகிழ்தற்கு உரியதாகும்.

### வள்ளலாரும் வண்ணச்சரபரும்

திருக்குறளைப் போதிக்கக் குறள் வகுப்புகளைத் தமிழகத்தில் முதன் முதலில் நடத்தியவரும், முதன்முதலில் முதியோர் கல்வித் திட்டத்தைத் தொடங்கி வித்திட்டவரும், மும்மொழிப் பாடசாலையைத் தொடங்கிய வரும் உயிரிரக்கமே உயர்ந்த கோட்பாடு என்று உரத்த குரல் கொடுத்தவரும் வடலூர் வள்ளல் இராமலிங்கசுவாமிகளே (1829-1874) ஆவார். வள்ளலாரை வண்ணச்சரபர் மூன்றுமுறை நேரிற்கண்டு பேசி உரையாடி யுள்ளார். இதனை வலியுறுத்துவதாக அமைகிறது சுவாமிகளின் பின்வரும் பாடல்:

*''அவனுடன் மூன்று காலம் அளவளாய்ப்பேசியுள்ளேன்*
*எவளவும் பேதமின்றி என்கருத்திசைந்தே சொன்னான்.''*

**(புலவர் புராணம்,2996)**

பழனிப்பதிலிருந்து சுவாமிகள் கூடலூர் சென்றார் அங்கே ஒரு செட்டியாரின் இல்லத்திலே தங்கியிருந்தார். அவ்வமயம் அவர் வீட்டு வேலியில் இருந்த முள்ளொன்று சுவாமிகளின் காலில் தைத்துத் துன்புறுத்தியது. இதனைக்கண்ட செட்டியார் சுவாமிகளுக்குப் பாதுகை அளித்து உதவினார். கூடலூரில் சுவாமிகள் தங்கியிருந்த காலத்தில் வடலூர் இராமலிங்க சுவாமிகள் அன்பர் ஒருவருடைய வீட்டில் தங்கியிருப்பதாக அறிந்து அவரைக் காணச் சென்றார். இருவரும் நெடுநேரம் அளவளாவித் தங்களுடைய இறையன்பையும் நட்பையும் வெளிப்படுத்திக் கொண்டனர். அப்போது வடலூராரிடம் சுவாமிகள், ''தாங்கள் முன்னைப் பிறப்பில் தாயுமானவராக இருந்தவர்'' எனக் கூறினர். அதற்கு அவர், ''இருக்கலாம்''என மறுமொழி கூறினராம்.

*''அருமைத் தமிழ்த்தாயு மானபிள்ளை தாமே*
*பெருமை இராமலிங்கம் பிள்ளை-பொருவிலதாக்*
*கூறும் உரையாற் குலவுநச்சி னார்க்கினியர்*
*ஆறு முகநா வலர்.''*

**(தனிப்பாடல் திரட்டு, 282)**

அவ்விருவருக்கும் இடையே இறையுணர்விலும் சமுதாய நலத்திலும் நல்ல அழுத்தமான ஒற்றுமைகள் காணப்பட்டன. வள்ளலார்.

*"உயிர்க்கொலையும் புலைப்புசிப்பும் உடையவர்கள் எல்லாம்*
*உறவினத்தார் அல்லர் அவர்புற வினத்தார்"*

**(அருள் விளக்கமாலை, 18)**

என்று பாடிய செந்தண்மையாளர். இதே போன்று வண்ணச்சரபம் தண்டபாணிசுவாமிகளும்,

*"என்றும் இதயத் திரக்கமில ராய்உயிர்கள்*
*கொன்றுதின்பார்க் கஞ்சிக் குலைவேனோ"*

**(பழனித் திருவாயிரம், வெண்பாமாலை, 15)**

என்று மனம் வெதும்பிப் பாடிய மனநலம் மன்னுயிர்க்கெல்லாம் ஆக்கம் தரும் நலமன்றோ!

### செட்டிநாட்டில் செந்தண்மை

ஒருமுறை சுவாமிகள் தேவகோட்டைக்குச் சென்று அங்கு கறுப்பன்செட்டியாரின் தவச்சாலையில் தங்கியிருந்தார். அப்போது மேலவீடு சிதம்பரம் செட்டியாரின் வேண்டுகோளை ஏற்றுச் சுவாமிகள் அவருக்கு உதவிபுரிந்தார். செட்டியார் தமக்குக் குழந்தைச் செல்வம் இல்லாத குறையைச் சுவாமிகளிடம் எடுத்துச் சொல்லி முறையிட்டார். இந்நிலையில் சுவாமிகள் அவரிடம், 'எனக்கு இப்போதுள்ள பொருட்கடன் தீர உதவினால், முருகப்பெருமான் உமது மனைவியின் வயிற்றில் ஆண்மகவு தோன்றச் செய்வான்'' என்று உறுதி கூறித் திருநீற்றைச் செட்டியாருக்கு வழங்கினர். ''ஆம்' ''மந்திரமாவது நீறு வானவர் மேலது நீறு'' அல்லவா! இதனைக் கேட்டு உள்ளம் மகிழ்ந்த சிதம்பரம் செட்டியாரும் ஆயிரம் ரூபாயைத் திருநெல்வேலிக்கு அனுப்பித் தண்டபாணிசுவாமிகளின் தீராக் கடனை அடைத்தாராம். இதன்பின்பு வண்ணச்சரபர் தேவகோட்டைச் சிவன் கோயிலில் உள்ள தண்டபாணிக் கடவுளின்மேல் பிள்ளைத் தமிழ் திரிபந்தாதி, திருப்புகழ், பதிகம், எனப் பல பாடல்கள் பாடி வேலவனின் திருவருள் செட்டியாருக்குக் கிட்டும் வண்ணம் முறையிட்டார். சில நாள் கழிந்த பின்னர்ச் சிதம்பரம் செட்டியார் ஆண் குழந்தையைப் பெற்று மகிழ்ந்தார். இதனால் வண்ணச்சரபரின் வாக்கு மந்திரவாக்கு என்பதை எண்ணிச் செட்டியார் மனம் மிக மகிழ்ந்தார். திருஞானசம்பந்தர் முதலை யுண்ட பாலனை உயிருடன் மீட்டுத் தந்த மந்திரம்போல் வண்ணச்சரபரும் பிறருக்குதவும் பெருந்தகைமை உடையவர் என்பது தெளிவாகின்றது.

பின்னர் சுவாமிகள் காரைக்குடிக்கு அருகில் அமைந்துள்ள குன்றக்குடிப் பெருமான் மீது கலம்பகம் ஒன்று பாடினார். காரைக்குடி நகரில் சில காலம்

சுவாமிகள் தங்கி இருந்தார். அப்போது அந்நகர் முருகன் மீது முப்பத்தாறு திருப்புகழ் பாடி அரங்கேற்றமும் செய்து மகிழ்ந்தார். அந்நகரில் ஒரு வேதியர் வீட்டுத் திண்ணையில் ஒரு பெரியவர் அருணகிரிநாதர் இயற்றிய திருப்புகழ்ப் பாடல் ஒன்றை இளஞ்சிறுவனுக்குப் பயிற்றுவித்துக் கொண்டிருந்தார். இதை கண்ட வண்ணச்சரபர் அப்பெரியவரிடம் சென்று "இச்சிறுவனுக்கு இப்பாடலைப் பயிற்றுவது பிரயாசை" என்று கூறினார். பாடம் கற்பித்துக் கொடுத்தவர் அட்டாவதானம் பாலசுப்பிரமணிய ஐயர் என்பவராவார். இந்நிகழ்ச்சிக்குப் பின் இருவரும் நட்புக்கொண்டு பழகினர். சுவாமிகளின் நட்பினால் ஐயரவர்கள் வண்ணப் பாடல்களை இயற்றும் அளவிற்குப் பெரும்புலமைநலம் பெற்றுத் திகழ்ந்தார்

## *காரைக்குடியில் முருகன் செட்டியுருக்காட்டி அருளல்*

குன்றக்குடி முருகப்பெருமான்மீது வண்ணச்சரபர் ஆறு வகுப்புகளும் வண்ணமும் பாடி அரங்கேற்றினார். இச்செய்தியை அறிந்த வணிகப் பெருமக்கள் சுவாமிகளுக்கு ஐந்நூறு ரூபாய் நல்கிச் சிறப்புச் செய்தனர். இத் தருணத்தில் காரைக்குடியில் ஓர் அதிசயம் நடை பெற்றது. செட்டியாரைப் போன்று உருவெடுத்து வந்த முருகப் பெருமான் வண்ணச்சரபரிடம் சற்றுநேரம் பேசி இருந்து மறைந்து விட்டான். இந்நிகழ்ச்சியைச் சுவாமிகள் "காரைநகர்ச் செட்டியுருக் காட்டினானே" என்று ஒரு பதிகத்துள் பாடிப் பதிவு செய்துள்ளார். திருநெல்வேலியில் கிணறு தோண்ட வேண்டிச் சுவாமிகள் கடன்பட்டார். இக்கடனைத் தீர்ப்பதற்கு அவர் ஊர் ஊராய்ச் சென்று அலைந்துதிரிந்தார். இவ்வலைச்சலையே எண்ணிப் பதிகம் பாடியதாக அறியப்படுகிறது. இவ்வுண்மை நிகழ்ச்சியை,

*"துட்டேமெய்த் தெய்வமெனச் சுழல்வேனைச்*
*சீடனெனச் சொன்னாய் கொல்லோ?*
*மட்டேயும் பொழிற்குன்றக் குடியானே*
*என்னப்பதிகம் வரைந்தேன்"*

***(குருபரதத்துவம், குன்றக்குடிச் சுருக்கம். 18)***

எனக் கூறுவதால் அறிந்துகொள்ள முடிகின்றது. பல தலங்களுக்குச் சென்று சுவாமிகள் வழிபாடுகளும் சொன்மாலையாம் பாமாலைகளும் இயற்றி வேம்பத்தூரில் வாழ்ந்த அந்தணப் புலவராகிய ஆசுகவி வெண்பாப்புலி பிச்சுவையரைக் கண்டு கலந்துரையாடினார். இருவரும் இனிய தமிழில் இரண்டிரண்டடிகளை எடுப்பாகப் பாடிய நிகழ்ச்சி இடைக்காலத்து வாழ்ந்த இளஞ்சூரியர், முதுசூரியராகிய இரட்டைப் புலவர்களை நினைவுறுத் துவதாக அமைகிறது. ஒருவர் வெண்பாவின் முன் இரண்டடிகளைப் பாடுவார். மற்றவர் அவ் வெண்பாவின் அடுத்த இரண்டடிகளைப்பாடி நிறைவு செய்வாராம்.

*"அப்பிலே தோய்த்திட் டடுத்தடுத்து நாமதனைத்*
*தப்பினால் நம்மையது தப்பாதோ-அப்படியே"*

என்று ஒருவர் பாடிய உடனே மற்றவர்,

*"இக்கலிங்கம் போனாலென் ஏகலிங்க மாமதுரைச்*
*சொக்கலிங்கம் உண்டே துணை"*

என்று முடித்தாராம். இரட்டையர் வழியிலே வெண்பாப்புலியும் வண்ணச் சரபமும் வெண்பாவை இயற்றித் தங்கள் புலமையை வெளிப்படுத்தினர். இதோ அப்பாடல்:

*"பூமிக்குள் மிக்க புகழ்முருக தாசரெனும்*
*சாமிக்கு நைவே தனமெங்கே?"*

என்று வேம்பத்தூரார் வினவினார். உடனே நெல்லையூரார்,

*"....தேமிக்க*
*செந்தமிழின் சீரும் திருக்கைவேல் ஏந்திவரும்*
*கந்தனன்பும் உள்ளமனைக் கண்"*

***(தனிப்பாடல் திரட்டு, 211)***

என்று விடைகூறி வெண்பாவை முடித்து வைத்தாராம்.

### பசிவந்திடப் பத்தும் பறக்கவில்லை

நெடுங்குளம் என்ற ஓர் ஊருக்குச் சுவாமிகள் ஒரு முறை செல்ல நேர்ந்தது. நண்பகற்பொழுது நல்லபசி நற்றமிழ் வல்லவரை வாட்டியது. "பசி வந்துவிட்டால் பத்தும் பறந்து போகும்' என்ற பழமொழியைச் சுவாமிகள் நன்கு அறிந்தவர்தாம்!

நெடுங்குளத்தில் உள்ள ஒரு வீதியில் நான்கே வீடுகள் இருந்தன. மூன்று வீடுகளை விட்டு விட்டு நான்காவது வீட்டை நோக்கிச் சுவாமிகள் சென்றார். அவ்வீட்டின வாயிலிலே நின்றார். வீட்டின் உள்ளிருந்த ஓர் அம்மையார் வேகமாக வந்து, "சுவாமி! என்ன பார்க்கிறீர்கள்?" எனக் கேட்டார். அவரும் "இவ்வேளைக்கு வேண்டிய உணவு குறித்து வந்தேன்" எனச் சொன்னார். அந்த அம்மையாரும் இன்முகத்தோடு சுவாமிகளை வீட்டினுள் வருமாறு அழைத்து அன்பொழுக உணவு பரிமாறி இன்புற்றார். ஆம்! 'ஈத்துவக்கும் இன்பம்' அம்மையார் முகத்தில் தெரிந்தது. சுவாமிகள், தாம் உண்ட பின்பு இடத்தைத் தூய்மைப் படுத்தி விட்டு உணவுக்குரிய பணத்தைக் கொடுக்க முனைந்தார். ஆனால் அந்த அம்மையாரோ "என் கணவர் இட்ட கட்டளைப்படியே தங்களுக்கு உணவு கொடுத்தேன்; பணத்துக்காக இல்லை" என்று மறுமொழி கூறி மறுத்துவிட்டுச்

சுவாமிகளிடம் இரண்டு ஐயங்களைத் தீர்த்து விளக்கம் தருமாறு பணிந்து கேட்டார். அவர் எழுப்பிய ஐயங்கள்.

(1) தருமம் என்பதன் உண்மையான வடிவம் எது?

(2) உயிர்கள் இறைவனிடம் பெறும் பயன்களுள் மேலானது எது?''

என்பனவாகும் சுவாமிகளும்''(1) தன்னைப் போன்ற உயிர்களிடத்துப் பதில் உதவியை விரும்பாமல் உதவுவதே உயர்ந்த தருமம் (2) மற்றொரு தாய் வயிற்றில் பிறவாமல் ஒன்றுபடுகின்ற பரமுத்தியே தெய்வத்தால் பெறப்படும் பயனில் மேலானது'' என்று விளக்கம் தந்து பின் திருநெல்வேலிக்குப் புறப்பட்டார்.

## அருந்தமிழ் நூல்களை அரங்கேற்றுதல்

சுவாமிகள் நெல்லையில் தங்கியிருந்த காலத்தில் ஆறுமுகனின் அருளைப் பெற்ற அருணகிரிநாத சுவாமிகளின் மேல், தாம் பாடிய அருணகிரிநாத சுவாமிகள் புராணத்தை 450 விருத்தப்பாக்களில் பாடிப் புலவர் அவையிலே அரங்கேற்றினார். இதனைப் போன்றே தெய்வ அருள் பெற்ற தமிழ்ப் புலவர்களின் வரலாற்றை 72 சருக்கங்களாக அமையுமாறு 3005 பாடல்கள் பாடிப் 'புலவர்புராணம்' என்ற நூலை அரங்கேற்றி அரிய தமிழ்ப்பணி செய்தார். தொல்காப்பியர் முதலாகக் கண்கண்ட புலவர் சருக்கம் ஈறாக 72 சருக்கங்களில் நற்றமிழ்ப் புலமையாளர்களின் வரலாற்றைப் பாடி அரங்கேற்றியுள்ளார். இந்நூலின் பெயர் இயற்றப்பட்ட இடம், நிமித்தம், சான்று ஆகியன பற்றிச் சுவாமிகள் பின்வருமாறு கூறித் தெளிவுறுத்தியுள்ளார்.

*''நூற்பெயர்யா தெனில்உண்மைப் புலவர்புரா ணமதாம்*
*நுவலுமிடம் திருநெல்லை நகர்; நுவலும் நிமித்தம்*
*ஏற்பவருக் கீவார்தம் பெருநலமும், ஈயார்*
*இடும்பையும் செந்தமிழ்ப் புலவோர் எழிற்புகழும் விளக்கி*
*நாற்பொருளும் பெறவிரும்பல்; ஆதாரம் உலகோர்*
*நவில் மொழியும், கலைவாணி நடம்புரியும் நாவும்*
*வேற்பிடித்து மலைதொறும் போய்த் திருவருட்பே ராடல்*
*விளைக்கும்முழு துணர்புலவன் விரைமலர்த்தாள் ஆளுமே''*

***(புலவர் புராணம், 25)***

'புலவர் புராண'த்தைத் தொடர்ந்து சுவாமிகள் திருவாமாத்தூர்த் தலபுராணத்தை வடமொழியிலிருந்து தமிழில் மொழியாக்கம் செய்து 1000 பாடல்களாகப் பாடி அரங்கேற்றினார். இதனால் இவருடைய வடமொழிப் புலமையும் மொழிபெயர்க்கும் ஆற்றலும் நன்கு புலப்படும்.

### தலைதப்பியது தம்பிரான் புண்ணியம்

வண்ணச்சரபர் கொங்குநாட்டுத் தலங்களுக்குச் சென்று வழிபட்டு விட்டுச் சேலம் நகரை அடைந்தார். சேலத்திலுள்ள சிவன் கோயிலில் சிலநாள் தங்கிப் பல அருட்பாடல்கள் பாடினார். பின் அங்கிருந்து சோழவந்தான் கந்தசாமி சுவாமிகளுடன் (சுவாமிகளின் 'வருக்கக்குறள்' நூலின் உரையாசிரியர்) தண்டபாணிசுவாமிகள் சென்னைக்குப் புறப்பட்டார். வண்ணச்சரபர் முன்னே செல்லவும் கந்தசாமி சுவாமிகள் தொடர்ந்து பின்னே வரவும் புகையூர்தி நிலையத்திற்குச் சாலையிலே நடந்து சென்று கொண்டிருந்தனர். அப்போது மண்டபத்தின் மேலிருந்த ஒரு சிற்றாள் இவ்விருவரின் வருகையை உற்று நோக்காமல் பெரியதொரு கருங்கல்லைக் கீழே எறிந்தான். பின்னால் வந்து கொண்டிருந்த கந்தசாமி சுவாமிகள், மேலேயிருந்து கருங்கல் வீழ்வதைக் கண்டு அச்சத்தால், ''சுவாமி!'' என்று பெருங்குரல் எழுப்பி, அதிர்ச்சியில் மயக்குமுற்று வீழ்ந்தார். கருங்கல்லோ சுவாமிகளின் தலையில் போட்டிருந்த துண்டின் மீது பட்டுக் கீழே வீழ்ந்தது. சுவாமிகளுக்கு எவ்வகைத் துன்பமும் ஏற்படுத்த வில்லை! ஆம்! சுவாமிகளின் தலை தப்பியது தம்பிரானாகிய முருகப் பெருமானின் புண்ணியத்தில் தான்! குகவேளின் தண்கருணைத் திறத்தை எண்ணிச் சுவாமிகள் நனி மகிழ்ந்தார். இருவரும் சென்னை செல்லும் புகை வண்டியில் ஏறி அமர்ந்தனர். சுவாமிகள் அப்போது, ''கல்விழுந்திடாதபடி காத்த தெய்வம் துணையே'' என ஈற்றடிகள் அமையும்படி பதிகம் ஒன்றைப் பாடினாராம். அதில் ஒரு பாடல்:

*''சேலநகர்ச் சிவன்கோவில் மண்டபத்துற் றொருவன்*
*தெரியாமை யாலெறிந்த திரள்கருங்கல், தலைமேல்*
*காலமிருத் தாகிவிழா தணுவளவில் விலக்கிக்*
*காத்ததெய்வந் தனைநாடிக் களித்துநெல்லை யூரான்*
*மாலனையார் மலிசென்னை நகர்க்கேகும் வழியில்*
*மருவுபுகை வண்டியிடை வரைதருமிப் பாடல்*
*சாலநலம் எனக்கொண்டு படிக்கின்றோர்க் கெல்லாம்*
*சற்றேனும் அவமிருந்து சாராது நிசமே''*

**(தெய்வத்துணைப் பதிகம், 11)**

சுவாமிகளின் சமகாலத்தில் வாழ்ந்த பாம்பன் குமரகுருபரதாசரின் (1853-1929)

*''வானம் இடிந்து தலையில் வீழும்படி*
*வம்பு வந்தாலும் என்னை - அந்தக்*
*கானமயில் முருகையன் திருவருள்*
*கைவிட மாட்டாதே!''*

**(பாம்பன் சுவாமிகள்)**

என்ற நம்பிக்கையைப் போல் வண்ணச்சரபர்க்கு வடிவேல் முருகன்பால் அழுத்தமான நம்பிக்கை இருந்தது. அந்த இறை நம்பிக்கையே சுவாமிகளைக் காப்பாற்றியது எனல் வேண்டும்.

## இல்லறம் ஏற்றல்

புதுச்சேரியில் வேலாயுதம்பிள்ளை என்ற ஒரு சைவப் பெருமகனார் வாழ்ந்து வந்தார். அன்னாரின் மனைவி திருமலையம்மை என்பவராவார். இவ்விருவருக்கும் தோன்றிய மகளாகிய சுந்தரத்தம்மையைத் தண்டபாணி சுவாமிகளுக்குத் தத்தம் செய்து தருமாறு முருகன் ஆணையிட்டான். இதனைக் கேட்ட சுவாமிகள் இதுவும் தெய்வச் செயலே என்று ஏற்றுக் கொண்டார். தாமரை இலைத் தண்ணீர்போல இல்லறம் துறவறம் என்ற இருநிலைகளிலும் அவர் வாழ்ந்தார். அக்கினிச் சான்றை விடத் தெய்வச் சான்றே சிறப்புடையது என்று எண்ணிய சுவாமிகள் மயிலம் திருமுருகன் சந்நிதியில் ஆறுமுக உருத்திராக்கத்தையே மங்கல நாணாக மணமகளாகிய சுந்தரத்தம்மைக்கு அணிவித்து இல்லற நெறியில் புகுந்தார். சுவாமிகளின் அருள் வாழ்க்கைத் துணவியாரும் இனிய தமிழ்ப் புலவராவார். இவர் பாடிய 'பெண்மாட்சி' என்ற நூலுக்குச் சுவாமிகள் பாடிக்கொடுத்த வாழ்த்துப்பாவே நமக்குச் சான்றாக அமைகின்றது.

*''மலைமீ திருந்துருண்டும் வாழஎனைக் காத்தாண்டு*
*இலைவேற்கைச் சண்முகவேள் ஈந்த - கலைமானேர்*
*சுந்தரப்பேர்த் தோகை துணிந்துரைத்த பெண்மாட்சி*
*அந்தரத்தோர் ஆரமுதொப் பாம்.''*

**(தனிப்பாடல் திரட்டு, 178)**

## தில்லையில் நூல்அரங்கேற்றம்

சுவாமிகள் ஆனந்தத் திருநடனமாடும் பொன்னம்பலவாணரை வழிபடத் தில்லைக்குச் சென்றார். அப்போது அங்கிருந்த அமபலவாண சுவாமிகள் என்பார் ''முருகனையே நாளும் பரவிப் பாடும் தாங்கள், எங்களப்பன் தில்லைக் கூத்தனையும் பாடக்கூடாதா?'' என வேண்டுகோள் விடுத்தார். இதற்குச் சுவாமிகள், ''உங்களப்பன் இவன் விரும்புமாறு சிற்றுண்டியை எவ்வித முயற்சியுமின்றிக் கொடுப்பானேல் ஆயிரம் பாடல்கள் பாடுகின்றேன்'' என உறுதியளித்தார். சுவாமிகளின் விழைவின் படி நிவேதனப் பிரசாதம் கிடைத்தது. சில நாள் சென்ற பின்பு சுவாமிகள் 'தில்லைத் திருவாயிரம்' என்ற நூலைப் பாடி அதனைச் சென்னையில் அரங்கேற்றினார். சென்னையில் காசிவிசுவநாதர் திருக்கோயிலில் அரங்கோற்றினார். அப்போது ஒருநாள் பூவை. கலியாணசுந்தர

முதலியாருடைய மாணவர்களோடு சுவாமிகள் வீதியில் சென்று கொண்டிருந்தார். அவ்வமயம் எதிரே வந்த வண்ணச்சரபரின் பன்முகப் புலமையைக் கேள்விப்பட்டிருந்த பூண்டி அரங்கநாத முதலியார், சுவாமிகளின் திருவடிகளிலே வீழ்ந்து வணங்கினர். இவருடன் வந்த காஞ்சி நாகலிங்க முதலியார் சுவாமிகளிடம் ஆறெழுந்து உபதேசம் பெற்றோடு, 'வண்ணக்களஞ்சியம்' என்ற சிறப்பு விருதையும் பெற்றார். அதன்பின் சுவாமிகளுடன் அப்புலவர்கள் யாவரும் நட்பு மிகுந்தவர்களாய் விளங்கினர்.

## இலங்கை செல்லல்

வண்ணச்சரபர் திருநெல்வேலியிலே தவச்சாலை ஒன்று நிறுவ எண்ணினார். பிறரிடம் கடன் வாங்கித் தவச்சாலை அமைப்பது இயலாத ஒன்று. எனவே சுவாமிகள் மனக்கலக்கமடைந்திருந்தார். அன்று இரவிலே இவருடைய கனவிலே ஆறுமுகப்பெருமான் தோன்றி, 'கப்பல் ஏறிக் கொழும்பிற்குச் செல்லுமாறும் உடன் பயணம் செய்யும் செட்டிமார்கள் சிலர் உதவுவார்கள்' என்றும் அறிவுறுத்தினான். அவ்வறிவுறுத்தலைத் தலை மேற்கொண்டு தண்டபாணி சுவாமிகள் தூத்துக்குடியிலிருந்து கடல் வழியே இலங்கைத் தலைநகர் கொழும்பிற்குப் புறப்பட்டார். சுவாமிகள் காலத்தில் கொழும்பிற்குக் கப்பல் போக்குவரத்து இயல்பாக நடந்து கொண்டிருந்தது. நெருக்கடிகள் ஏதும் அன்று இல்லை. எனவே எவ்வகை இடர்ப்பாடும் இன்றிச் சுவாமிகள் கொழும்பிற்குச் செல்ல முடிந்தது. கப்பலில் செல்லும் போது தமக்கும் பிறபயணிகளுக்கும் ஏற்பட்ட இன்னல்களை எல்லாம் சுவாமிகள் தம்முடைய 'குருபரதத்துவ' நூலுள் கொழும்புச் சருக்கத்துள் மிகவும் ,விரிவாக எடுத்துரைக்கினறார். கொழும்பில் சுவாமிகளைச் செந்தண்மையும் ஈகைப்பண்பும் ஒருங்கே அமையப் பெற்ற குப்பன்செட்டி மற்றும் பலர் வந்து வரவேற்று மகிழ்ந்தனர். செட்டிமார் கட்டியிருந்த முருகன் ஆலயத்தில் சுவாமிகள் பன்னாட்கள் தங்கிச் சமயப் பொழிவுகள் பல நிகழ்த்தி இறையுணர்வைப் பரப்பினார். பின், அவர் கண்டி, கதிர்காமம் ஆகிய இடங்களுக்கும் சென்று வடிவேலனை வணங்கி வந்தார். குப்பன்செட்டியார் 1050 ரூபாய் தந்து சுவாமிகள் மடம் நிறுவ எண்ணிய எண்ணத்திற்கு உறுதுணையாகினார். அத்தொகையுடன் வண்ணச்சரபர் தூத்துக்குடி வழியாக நெல்லைக்கு வந்து சேர்ந்தார்.

## தவச்சாலையும் தடங்கலும்

திருநெல்வேலி நகரில் சுவாமிகள் தம் பெயரில் தவச்சாலை ஒன்று தொடங்க எண்ணினார்; மேலும் நந்தவனம் உருவாக்கத் தம்முடைய

வயலைச் சீர்திருத்திச் செப்பனிட்டார். அவ்விடத்தில் கிணறு தோண்ட வேண்டி வெடிவைத்துத் தகர்க்க ஏற்பாடுகள் செய்தார். முப்பது அடி ஆழம் தோண்டிய பின்பும் கிணற்றில் நீர் சுரக்கவே இல்லை; சுவாமிகள் துவண்டு போனார்; பணம் மிகவும் செலவாயிற்று; பெருங்கடனாளியாகிச் சுவாமிகள் மிகவும் வருந்தி மனம் உளைந்தார். மேலும் மேலும் தோண்டியும் வெடி மருந்தால் தீவிபத்து நேர்ந்ததுதான் பயன். ஆயின் தண்ணீர் சுரக்கவே இல்லை. உள்ளம் வருந்திய சுவாமிகள் பொதியமலைக்குச் சென்று தவம் மேற்கொள்ளத் துணிந்தார். வெடிமருந்து வெடி வெடித்தும் பயனில்லை. என்றிருந்தார். பாறைக்கிணற்றை எண்ணிச் சுவாமிகள் பலவாறு வருந்தினார். 'கிணறு வெட்டப்பூதம் கிளம்பியது' என்பார்களே அது சுவாமிகள் வாழ்க்கையிலே நடந்தே போய்விட்டது. கிணற்றில் நீர் ஊறாமையை எண்ணி மனம் வருந்திய வண்ணச்சரபர், இதனைத் தம்முடைய வாழ்விலே ஏற்பட்ட பெருந் துன்பமாகக் கருதித் தாம் இயற்றியுள்ள பல நூல்களிலும் சுட்டிக் காட்டுவதனைக் காண்கின்றோம்.

*''ஊரில் யாவரும் உணருமென் கற்கிண றுலவா*
*நீரினால் உயர் வுறும்படி அனுத்துணை நிற்பாய்''*

***(கணபதி ஆயிரம், 268)***

இப்படிச் சுவாமிகள் தம் மன வெளிப்பாடாகப் பல நூல்களில் கற்கிணறு பற்றிய எண்ணத்தை வெளிப்படுத்திப் போகிறார். இது தம் வாழ்வில் ஏற்பட்ட ஒரு சறுக்கல் என்றே கருதி வாழ்ந்துள்ளார் என்பது பெறப்படும்.

பொதிகை மலை அடிவாரத்தில் அகத்திய மாமுனிவரின் அருளை வேண்டித் தவ நிலையில் அமர்ந்த சுவாமிகளுடன் அகத்திய ஐயர் என்னும் பெயரிய சிறுவனும் துணையாக இருந்தான். சிறிது நேரம் கழித்துச் சுவாமிகள் வெளிவந்தபோது, மன்னார்கோவிலைச் சார்ந்த அண்ணன் தம்பியாகிய இருவர் அவருக்கு எதிரே வந்து தோன்றினர். அவ் விருவருக்கும் இடையே சிறு பூசல் உண்டாயிற்று. அது குறித்து அவர்களிடம் சுவாமிகள் வினவினார். இளையவர் சுவாமிகளிடம், ''அதை ஏன் நீர் கேட்கிறீர்?'' என்று சினம் பொங்கக் கூறினார். மூத்தவர் தம்பியைத் தக்க சமாதானம் கூறிச் சுவாமிகளிடம், ''திருமாலை மனதார வேண்டி எங்களுடைய வறுமையைப் போக்குமாறு இறைவனின் அருள் நோக்கினை எண்ணி இந்த மலையிலே தவம் இயற்றினோம். உணவு அருந்தி 4 நாட்கள் ஓடிவிட்டன. இந்நிலையில் தம்பியின் மனவெளியிலே திருமால் தோன்றிச் சில செய்திகளைச் சொன்னார். ஆனால் 'கைக்கு எட்டியது வாய்க்கு எட்டவில்லை' என்ற கதை போலாயிற்று. பின் தம்பியிடம் மாலவன், ''சுவாமிகளிடம் நீ கண்ட காட்சியைச் சொல்'' என்றாராம். ''யாரோ முருகனடியவராம்! கிணறோ குளமோ வெட்டி அதில் நீர்ப்பெருக்கம் வேண்டி விரும்பியுள்ளானாம். அவனைக் கண்டால் எங்கள் துன்பம்

நீங்குமாம். இத்தனையும் சொன்ன தெய்வம் அவன் இருக்குமிடத்தைச் சொல்லவில்லை! இன்னும் மலைமேற் சென்று தவம் இருந்து விளக்கம் பெறவேண்டும்; விளக்கம் கிடைக்கவில்லை என்றால் உயிரைவிடவும் துணிந்து விட்டோம்!'' எனக் கூறினான். இதனைச் செவிமடுத்த சுவாமிகள் வியப்பிலே ஆழ்ந்து, ''அந்தப் பாவி நான்தான்! தங்களுக்கு உதவ முழு விருப்பம். ஆனால், தவச் சாலையில் கிணறு தோண்டுவதில் பணம் செலவாகிக் கடன்பட்டுத் துன்பத்தில் துவள்கின்றேன்'' என்று தம் நிலையை எடுத்துரைத்தார். அப்போது அவ்விருவரும் ''தாங்கள் செய்த தவம் நிறைவேறி விட்டது'' என்று சொல்லி மகிழ்ந்தனராம். பிறகு தண்டபாணி சுவாமிகள் அவ்விருவரையும் விருந்து பேணிப் பொருளும் கொடுத்து அனுப்பியதாகக் காண்கின்றோம். முதிரமலைக் குமணன் தமக்கு வழங்கிய பொருளைப் பெருஞ்சித்திரனார் தம்முடைய மனைவியிடம் கொடுத்து ''எல்லோர்க்கும் கொடுமதி மனைகிழ வோயே'' என்று கூறியது இங்கு நம் நினைவிற்கு வருகிறது. இதுதான் 'வறுமையிற் செம்மை' என்பது போலும்!

இதன் பின்னர் சுவாமிகள் இறையருளை எண்ணிக் 'கங்கை யந்தாதி', 'பாறைக் கிணற்றந்தாதி' ஆகிய நூல்களை இயற்றினார்; இருப்பினும் அவர் தோண்டிய கிணற்றில் தண்ணீர் ஊறவே இல்லை! இந்நிலையினால் பலருடைய ஏளனத்திற்குச் சுவாமிகள் ஆளாக வேண்டியிருந்தது. பொதிய மலையினின்றும் புறப்பட்ட சுவாமிகள் நெல்லைக்கு வந்து திண்டுக்கல், திருவரங்கம் ஆகிய ஊர்களுக்குச் சென்றுவிட்டுப் பழனிக்குப் புறப்பட்டார். பழனிக்கு வரும் வழியில் தும்மிச்சம்பட்டி என்று ஓர் ஊர் வந்தது. தீராத வயிற்று வலியினால் துன்பப்பட்ட ஒருவனுக்காக ஓர் ஆட்டை சந்நியாசி யப்பனுக்குப் பலியிட வீதியில் இழுத்து வந்தனர். இதனைக் கண்ட வண்ணச்சரபர் அவர்களுக்கு அறிவு கொளுத்தி ஆறுமுகன் அருளை நினைந்து போற்றித் திருநீற்றை வழங்கி அவன்றன் வயிற்று வலியை ஒரு வெண்பாப் பாடிப் போக்கினார்; ஆட்டையும் உயிருடன் காப்பாற்றினாராம்.

### *ஆவினன் குடியில் தண்டபாணித் திருமடம்*

பழனிமலை அடிவாரத்திலே சரவணப் பொய்கையின் அருகிலே சுவாமிகள் தண்டபாணித் திருமடம் ஒன்றை உருவாக்கித் தங்கியிருந்தார். அப்போது மாந்திரீகன் ஒருவன் மக்களைத் தன் ஆற்றலால் அச்சுறுத்தி வந்தான். அவனுடைய கொலைவெறி அடங்கவும், கறுப்பன் சிலை நொறுங்கவும் இவற்றுக்கு ஆதரவாக இருந்த பனைமரம் ஒடிந்து சாயவும் சுவாமிகள் உளமார முருகனை வேண்டினார். 'வேண்டத்தக்கது அறிந்து வேண்ட முழுதும் தருவோனாகிய' கந்தவேள் அருள் தந்து அவரையும் மக்களையும் காத்தருளினான்.

## முதன்மை மாணவர் இராமானந்தர்

ஆவினன்குடியில் தங்கியிருந்த நாளில் கோவை சரவணம்பட்டிக்கு வடக்கில் உள்ள சாமக்குளத்தைச் சார்ந்த வேங்கடரமண தாசருக்கு வண்ணச் சரபருடன் நெருக்கமான நட்பு ஏற்பட்டது. சாமக்குளத்தார் நல்ல இசைச் சொற்பொழிவாளராகவும் திகழ்ந்தார். இதற்கு முன்னால் அவர் சுவாமிகளை நெல்லையிலே கண்டு பேசி மகிழ்ந்துள்ளார். அச்சந்திப்பின் போது சுவாமிகள் அவருக்குத் தாம் படைத்த 'தியானா நுபூதி' நூலை வழங்கினார். ஊர் திரும்பிய வேங்கடரமணதாசர் இந்நூலை இராமானந்தரிடம் கொடுத்தார். அவரும் அந்நூலை ஆழமாகக் கற்றுணர்ந்து வண்ணச்சரபரே தமக்குக் குருவாக அமைதல் வேண்டும் என எண்ணி வாழ்ந்தார். இந் நிலையில் சுவாமிகள் ஆவினன்குடி வருகையைச் சாமக்குளத்தாருக்கு அறிவிக்கவே, அவரும் இராமானந்தருக்கு வண்ணச்சரபரின் வருகை குறித்து அறிவுறுத்தினார். இராமானந்தர் ஆவினன்குடியை அணுகித் தண்டபாணிசுவாமிகளை மிகவும் பணிந்து வணங்கி நின்று தம்முடைய விருப்பத்தினை அவரிடமே நேரில் வெளியிட்டார். பக்குவம் நிறைந்த இராமானந்தரின் ஒளிமிக்க முகப்பொலிவினைக் கண்டுணர்ந்த வண்ணச்சரபர் அவரைத் தம் முதன்மை மாணவராக ஏற்றுக்கொண்டார்.

''ஆசாரியன் மாணாக்கனை மூன்று, ஆறு, ஒன்பது, பன்னிரண்டு என்னும் ஆண்டுகள் வரை சோதித்துப் பின்பு தீக்கை பண்ண வேண்டும் என்பது பொதுவிதி. இவ்விதியை இகந்து தீவிர பக்குவ சீடனுக்கும் அதிகாரியான ஆசாரியனுக்கும் கண்ட கணமே அனுக்கிரகம் பண்ணுதல் முறை என்ற சிறப்பு விதிக்கு இலக்கியமாய் (இராமானந்த விஜயம், கையெழுத்துப்படி,ப.65) இராமானந்தருக்கு உபதேசிக்க விரும்பினாராம்'' (தவத்திரு. இராமானந்த அடிகளார் வரலாறு, ப.வெ.நாகராசன்,பக்.28-29)

தண்டபாணிசுவாமிகள் இராமானந்தரின் வலச் செவியில் ஆறெழுத்து மந்திரத்தை உபதேசித்துத் தலையின் மீது தம் வலக்கையை வைத்தும் கண்களால் அருள் சொட்டப் பார்த்து, மேற்குத் திசையை நோக்கி நின்று கொண்டு தண்டாயுதத்தையும் சின்முத்திரையும் உடைய கைகளை உடையவராய் காட்சி தந்தருளினாராம். அவருக்குத் திருநீறு, உருத்திராக்கம் அளித்துச் சமயச் சின்னங்களை அணியச் செய்தார் வண்ணச்சரபர். மேலும் இராமானந்தாருக்கு ஆறு பேதங்களையும் சமய இணக்கத்தையும், சமயாதீதத்தையும் எல்லாச் சமயங்களும் கௌமாரத்திற்கு உடன்பாடே என்பன போன்ற கோட்பாடுகளையும்- நடைமுறைகளையும் எடுத்துக் கூறித் தொன்று தொட்டு வரும் கௌமார நெறியைப் பரப்புமாறு அறிவுறுத்தினார். குருவின் அன்புரைகளை ஏற்ற இராமானந்தர் கோவையில் சின்னவேடம்பட்டியில் கௌமார மடாலயம் அமைத்துக் கௌமார

நெறியைப் பரப்ப முற்பட்டார். வண்ணச்சரபரின் எண்ணத்தை முற்ற முழுக்கப் போற்றும் இராமானந்தரின் பணி இன்னும் கொங்கு நாட்டில் ஆல் போல் பரவி நிற்கிறது.

*"சந்தமார் முருக தாசனாய் வண்ணச்*
*சரபனாய் வயங்கிய தூயோன்*
*சொந்தமார் சீடன் ஆதிநற் சிரவைத்*
*தொண்டருக் காம்மடம் சமைத்தோன்*
*அந்தமாய் மறைசொல் அறுவகைச் சமயம்*
*அகப்படு கௌமார சபையைத்*
*தந்தமா ராமா னந்தரின் பாத*
*தாமரை அநுதினம் தொழுவாம்"*

**(புலவர் ப.வெ.நாகராசன், சிரவையாதீனக் குருமரபு வாழ்த்து,4)**

### திருவரங்கனைப் பாடி வழிபடல்

வண்ணச்சரபருக்கும் வடிவேல் முருகனுக்கும் இடையே சிறு ஊடல். இவ்வூடலால் சுவாமிகள் ஆறுமுகப்பெருமானுடைய தாய்மாமன் திருவரங்கத்தானைப் பாடிப் பரவப் புறப்பட்டு அங்கே சென்றார். 'திருவரங்கத் திருவாயிரம்' நூலை இயற்றித் தக்க முறையில் வைணவச் சான்றோர்கள் முன்னிலையில் தண்டபாணிசுவாமிகள் அரங்கேற்றம் செய்ய முற்பட்டார். திருவரங்கத்தில் ஆயிரக்கால் மண்டபத்தில் கருடாழ்வாருக்கு முன்பாகச் சுவாமிகளுடைய மாணவராகிய கந்தசாமிப் புலவர் கையேடு படிக்க அரங்கேற்றம் தொடங்கியது. அவ்வமயம் பெருமானின் அன்பைப் பெற்ற வேதியர் ஒருவரின் மகள் நல்லபாம்பு தீண்டியதால் இறந்தாள். இத்தகவலைக் கேட்ட வேதியர் உற்ற துன்பத்திற்கு எல்லையே இல்லை! இவ்வவலச் சூழலை உணர்ந்த சுவாமிகள் தம் நூலரங்கேற்றத்தை நிறுத்திவிட்டு அப்பெண்ணின் பொருட்டு இறைவனிடம் அன்புருகி வேண்டினார்; முறையிட்டார். விடம் தீண்டப்பட்டு இறந்த மூத்த திருநாவுக்கரசைத் திருநாவுக்கரசர் பதிகம் பாடி உயிர்பெற்று எழுமாறு செய்தவாறு வண்ணச்சரபரின் முறையீட்டிற்கும் வழி ஏற்பட்டது; அந்தப்பெண் உயிர்பெற்று எழுந்தாள். அதன்பின் 'திருவரங்கத்திருவாயிர' அரங்கேற்றம் சிறப்புற நிகழ்ந்தது.

### அல்லிக்கேணியிலே அதிசயம்

வண்ணச்சரபர் சென்னையில் திருவல்லிக்கேணி பார்த்தசாரதி கோயில் சந்நிதியில் எழுகூற்றிருக்கைப் பாடலைப் புனைந்து அரங்கேற்றினார். அரங்கேற்றத்தின் போது அத்தலத்தில் உள்ள பள்ளிகொண்டபெருமான்

பாகவதர் வடிவிலே தோன்றி ஒரு சீட்டைக் கொடுத்தாராம். அச்சீட்டில் 'எழு கூற்றிருக்கைப் பாட்டுக்காக எழுநூறு பொன் கொடுக்கக் கடமைப் பட்டுள்ளேன்' என்று கடனாகச் சீட்டெழுதிக் கொடுத்துச் சென்றாராம். குமரகுருபரருக்கு 'மீனாட்சி யம்மை பிள்ளைத்தமிழ்' பாடிய பெற்றிமையை வியந்து, அம்மையே சிறுபெண் உருவம் கொண்டுவந்து பொன் அணிகலனைப் பரிசாய்த் தந்தமையைக் குமரகுருபரர் வரலாறு நமக்கு அறிவுறுத்தும். அது போன்று வண்ணச்சரபர் வாழ்விலே நடைபெற்ற இது மருட்கை தரத்தக்க நிகழ்ச்சியாகும்.

## ஆமாத்தூருக்கு வருதலும் எல்லை தாண்டாதிருத்தலும்

தமிழகத்தில் உள்ள பல்வேறு திருத்தலங்களுக்கும் சென்று சமய குரவர் நால்வர் வழியிலே - தீந்தமிழில் திருப்புகழ் பாடிப் பரவிய அருணகிரிநாதர் போலே - வண்ணச்சரபம் தண்டபாணிசுவாமிகள் சமய வழிபாட்டுடன் பதிகங்களும் பல்வேறு பனுவல்களும் பாடிப் போற்றினார்.

இறுதிக் காலத்தில் சுவாமிகள் மதுரப்பாக்கம் வந்து சேர்ந்தார். அங்கிருந்து விழுப்புரத்திற்கு வடமேற்கே ஏறத்தாழ மூன்று கல் தொலைவில் உள்ள பாடல் பெற்ற தலமாகிய திருவாமாத்தூருக்கு இறையன்பர்கள் புடை சூழ வந்தார். அவ்வூருக்கு வருவதற்கு முன்பே ஆமாத்தூரில் உள்ள அரிகர புத்திர முதலியாரின் கனவிலே ஆறுமுகப் பெருமான் தோன்றித் தன் அடிய வராகிய வண்ணச்சரபரை வரவேற்றுப் போற்றிப் பணிசெய்யும் வண்ணம் ஆணையிட்டான்; இம்மட்டோ! ஒருத்தூரைச் சார்ந்த சின்னுரெட்டியாரின் கனவிலேயும் தோன்றி இவ்வாறே ஆணையிட்டருளினான். அரிகர புத்திரரும் சின்னுரெட்டியாரும் வேலவனின் ஆணைப்படி சுவாமிகளை மனம் கனிந்து வரவேற்றனர். ஓலை வேயப்பட்டிருந்த திருமடத்திலே சுவாமிகள் தங்கவும் அவ்விருவரும் தக்க ஏற்பாடுகளைச் செய்தனர்.

பம்பை ஆற்றின் கரையில் அமைந்த ஊர் ஆமாத்தூர். பழங்காலத்தில் ஆவினங்களுக்குக் கொம்புகள் இல்லையாம். ஆகவே ஆவினங்கள் யாவும் அவ்வூர் இறைவனை வழிபட்டுத் தற்காப்புக்குரிய கொம்புகளைப் பெற்றன என்கிறது ஆமாத்தூரின் தலபுராணம். சுவாமிகளும் கூடத் 'திருவாமாத்தூர்த் தலபுராணம்' ஒன்று பாடியுள்ளார் என்பது இவண் சுட்டத்தகும். தேவார மூவருமே பாடிப் போற்றிய திருத்தலம் திருவாமாத்தூர் என்பது பெருமைக்கு உரிய ஒன்றாகும். திருஞானசம்பந்தர் போற்றிய திருநெல்வேலியில் பிறந்து, அறுசமய நல்லிணக்கத்தையும் கௌமார நெறியையும் பெரிதும் பரப்பிய வண்ணச்சரபர் தம்முடைய வாழ்நாளின் இறுதிக் காலத்தில் தேவாரமூவர் போற்றி வழிபட்டுப் பதிகம் பாடிச் சிறப்பித்த திருவாமாத்தூரில் திருமடம் ஒன்றை நிறுவி வாழ்ந்தமை போற்றற்குரிய ஒன்றாகும்.

*"சந்தி யானைச் சமாதி செய்வார் தங்கள்*
*புந்தி யானைப் புத்தேளிர் தொழப்படும்*
*அந்தி யானை ஆமாத்தூ ரழகனைச்*
*சிந்தி யாதவர் தீவினை யாளரே"*

**(தேவாரம், 5665)**

என்று திருநாவுக்கரசர் பெருமானால் போற்றப்பட்ட திருத்தலம் இது

"ஆவினங்களுக்குத் தாய்வீடு எனத் தக்க இத்திருத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவனே! உம் மீது ஆயிரம் பாடல்கள் பாடிப் பரவுவேன். சமயகுரவர்களுக்கு வழங்கிய திருவருளை எனக்கும் வழங்கிக் காத்தருள வேண்டும்" எனச் சுவாமிகள் வேண்டினார். ஆமாத்தூர் அழகனோ இவர்தம் தவநிலையில் தோன்றிக் "கவிபாடுவதனைப் பின்னால் பார்க்கலாம்; இறைவன் அருளைப் பெறுகின்ற முயற்சியில் தலைப்படுக" என அருளினான். வண்ணச்சரபரும் இதனை ஏற்றுப் "பெருமானே உமதருளைப் பெறும் வரையிலும் இவ்வூர் எல்லையைத் தாண்ட மாட்டேன்" என்ற மன உறுதியோடு ஆறெழுத்து மந்திரத்தை ஒரு கோடி முறை சொல்ல முனைந்தார். மந்திரம் சொல்லும்போது செபமாலையைச் சுழற்றி விரல்களினால் எண்ணுவது மரபு. அப்படி எண்ணுவதற்குச் செப மாலையை எடுக்க முனைந்தபோது ஒரு கருந்தேள் அவருடைய கைவிரலிலே கொட்டித் துன்புறுத்திற்று. இத்துன்பத்தை எண்ணிய சுவாமிகளுக்கு அப்போது மனத்திலே ஒரு தெளிவு ஏற்படவே, ஜபமாலை இன்றி மனத்துக் குள்ளேயே எண்ணுவது என்ற முடிவிற்கு வந்தார். சரவணனின் ஆறெழுத்து மந்திரத்தை உச்சரிக்கத் தொடங்கினர்.

### மடம் நிறுவ இடம் கிடைத்தமை

விழுப்புரத்தில் வட்டாட்சியாளராகப் பணியாற்றிய சண்முகம்பிள்ளை என்பார் கடும் வயிற்று வலியினால் துன்பமுற்று வருந்தினார். அரசினர் பணியில் இருந்த அவருக்குச் சமுதாயத்தில் மதிப்பும் சிறப்பும் மிகுதியாக இருந்தன. அவர் திருவாமாத்தூரில் தங்கியிருந்த வண்ணச்சரபரிடம் தம்முடைய வயிற்றுவலியைத் தீர்த்து வாழ்விக்க வேண்டும் என முறையிட்டார். தண்டபாணிசுவாமிகளும் அவர் துன்பத்தைப் போக்க அருள் உள்ளம் கொண்டு, "விநாயகர் வழிபாட்டை நாள்தோளும் வீட்டில் செய்து விட்டுப் பிள்ளையார் கோயிலுக்குச் சென்றும் வழிபட்டு வருக" என்று பணித்தார். மேலும் சுவாமிகள் தாமே விநாயகப் பெருமான் மீது ஒரு பாடல் இயற்றிச் சண்முகம்பிள்ளையிடம் கொடுத்து மனப்பாடம் செய்து ஓதுமாறு வலியுறுத்தினார். வேழ முகத்தவனைப்பாடி வேண்டியதனால் அவருக்கு வயிற்றுவலி நீங்கி நலம் பெற்றார்.

சுவாமிகளின் நல்லுள்ளத்தையும் பிறர் துன்பத்தை அறிந்து போக்கும் மன நலத்தையும் கண்டு வட்டாட்சியர் மிகவும் மகிழ்ந்தார் உள்ளம் மகிழ்ந்த சண்முகம்பிள்ளை திருவாமாத்தூரில் புறம்போக்கு நிலத்தில் சுவாமிகள் திருமடம் நிறுவிச் சேவை செய்யும் வகையில் நிலம் வழங்க ஏற்பாடு செய்து தம் நன்றியைத் தெரிவித்துக் கொண்டார். அவ்வூரில் வாழ்ந்த இறையன்பர்களும் திருமடம் நிறுவிப் பலருக்கும் அருள் உதவிகள் செய்யும் வண்ணம் சுவாமிகளிடம் பணிந்து வேண்டினர். சுவாமிகளும் அன்பர்களின் வேண்டுகோளை ஏற்றுக்கொண்டு இசைவளித்தார். இதனிடையே சுவாமிகளிடம் பேரன்பு கொண்டிருந்த வீரகேரளம்புதூர் சமீன்தார் இருதாலயமருதப்பத்தேவர் திருமடம் அமைப்பதற்குப் பொருளுதவி செய்து புரந்தார். திருவாமாத்தூரிலே கௌமார மடாலயம் பெருஞ்சிறப்புடன் வீறுகொண்டு எழுந்தது. இதனைச் சுருக்கமாகச் சொல்கிறது கீழ்வரும் செந்தினாயகரின் பாடல் ஒன்று:

*"அதன்பினணி மாதைநக ரிடையிவர்பே*
*ராலொர்மட மமைக்க வேண்டி*
*யிதம்பெறப்பல் லோர்விரும்பி முயன்றார்நெல்*
*லையிலிருந்தங் கியன்ற வாய்மைப்*
*பதம்பெறுசண் முகப்பெயர்வே ளாளர*
*சுரிமையினாற் பதிவாந்தானஞ்*
*சுதந்தரமாக் கினைபலமெய் யன்பர்பொரு*
*ளுதவியுஞ்செய் தொழிலுங் கொண்டு!"*

**(தண்டபாணி விஜயம், உத்தரபாகம், 122)**

## வீடுபேறு

வண்ணச்சரபர் வடிவேல் முருகனிடம்,

*"உலகைப் பொருளாமென்று உன்னும் மதியான்*
*கலகம் பெருகிக் கவன்றேற் - கிலகு*
*திருவருட்பே றென்றருள்வாய்? செல்வப்பழனி*
*மருவும் குருபரதே வா"*

**(பழனித் திருவாயிரம் - வெண்பாமாலை, 21)**

என வேண்டுவார். விளம்பி ஆண்டு பிறந்தபோது சுவாமிகள் 'ஐயாயிரப் பிரபந்தம்' என்றொரு பெருநூலை இயற்ற முனைந்தார். அவ்வாண்டுக்குள் ஐயாயிரத்தையும் முடித்துவிட உறுதி பூண்டார். நாளொன்றுக்குப் பதினான்கு பாடல் எனப்பாடி முடிக்க எண்ணினார். சுவாமிகள் முற்பகற் பொழுதிலே கவிதை இயற்றிவிட்டு உச்சிப் போதில் மந்திர உச்சாடனம் செய்து பிற்பகலில் நீராடித் திருநீறு, திருமண், குங்குமம் அணிந்து

கொள்வார். எந்நேரமும் இறை யுணர்வுடனேயே தம் எண்ணத்தை - செயலைக் கழித்து வந்தார். இச்செயல்கள் நாளுக்கு நாள் பெருகி வளரலாயின. இதனால் சுவாமிகளின் உடற்கூடும் அதற்கு ஏற்பவே கூடிற்று; உடற் சூட்டினால் தளர்ச்சி ஏற்படலாயிற்று. ஐயாயிரம் பாடி முடிக்கு முன்னே வண்ணச்சரபரை வடிவேல் முருகன் தம் திருவடியில் அழைத்து அருள்பாலிக்க விரும்பிவிட்டான் போலும்!

பல்லாயிரம் பாடல்களைக் கொட்டித் தீர்க்கும் மழை முகிலென - கடல் மடை திறந்த வெள்ளமென உயிர்க்கொலை கூடாது என்றும், எல்லாச் சமயங்களும் ஒன்றே என்னும் உண்மையை உணர்த்திய முருகப் பெருமானின் அடியவர் வண்ணச்சரபம் தண்டபாணிசுவாமிகள் விளம்பி ஆண்டு ஆனித் திங்கள் 23-ஆம் நாள் (1898) செவ்வாய்க்கிழமை துவிதியைத்திதித் திருவோணவிண்மீனும் கூடிய நாளில் வீடுபேறடைந்தார். சுவாமிகளுக்கு அப்போது 59 வயதாயிற்று.

### *தலைமாணாக்கரின் தனித்தொண்டு*

கொங்குநாட்டுக் கௌமார மடாலயத் தலைவரும் வண்ணச்சரபரின் முதன்மை மாணாக்கரும் ஆகிய இராமானந்த சுவாமிகள் தம்முடைய குருவின் பிரிவுக்குப் பெரிதும் வருந்தினார். அன்னாரின் உடல் நல்லடக்கம் செய்யப்பட்ட இடத்தில் திருவாமாத்தூர்த் திருமடத்தில் தண்டபாணிக் கடவுளின் திருவுருவைப் பிரதிட்டை செய்து நாள் வழிபாடுகள் முறையாக நடைபெறவும் தகுந்த ஏற்பாடுகளைச் செய்து முடித்தார். வண்ணச்சரபரைத் தொடர்ந்து செந்தினாயக சுவாமிகளும், அவருக்குப் பின் முருகதாசரும், இப்போது தண்டபாணி ஐயாவும் உரிய நடவடிக்கைகளைச் செய்து வருகின்றனர். வண்ணச்சரபர் வழங்கிய அச்சேற்றப் பெறாத ஏட்டுச் சுவடிகள் பலவும் கொங்குநாட்டுக் கௌமார மடாலயத்தில் இப்போது பாதுகாக்கப் பெற்று வருதல் நமக்கு உவப்பைத் தருகின்றது.

*"எந்தப் புராண சரிதமும் தேறும் இயல்புடையோர்*
*சொந்தக் குழுவில் தமியேனுன் மேன்மை சொலப்புரிவாய்*
*கந்தப் பொழில் செறி மாதைப் பதியிற் கவிக்கரசாம்*
*சந்தத் தமிழ்த்தண்ட பாணியென் றோங்கிய சற்குருவே"*

என்ற அவரின் தலைமாணாக்கர் இராமானந்த சுவாமிகளின் மொழிகள் வண்ணச்சரபரின் எண்ணத்தை எடுத்தியம்புவதாக அமைகின்றன.

---

# 2
# இல்லறநெறியும் இறைநெறியும்

*"மிகமகிழ் வொடுபெற் றென்றும் வேல்வழி பாடும் இன்பக்*
*குக வழிபாடும் ஆற்றிக் கோவணங் குறடு பொற்பார்*
*சிகைதிரு நீற்றுப் பொற்பை செபமணி மாலை மற்றும்*
*புகலணி பலவும் பூண்டு பொலியுமா தவசிற் கோலம்"*

**(சேய்த்தொண்டர் புராணம், 2514)**

என்று அடிகளின் தோற்றப் பொலிவைத் தேனூர் வரகவி வே.செ. சொக்கலிங்கனார் கூறுவார். அவர் தம்முடைய 'சேய்த்தொண்டர் புராண'த்தில் வரும் தண்டபாணிநாயனார் புராணப் பகுதியில் சுவாமிகளைச் சொல்லோவியமாக்கிக் காட்டுவது இங்கே கருதத்தகும்.

### நாயன்மார் வழியில்

வண்ணச்சரபம் தண்டபாணிசுவாமிகள் சீதாராமர் என்பவரைக் குருவாக ஏற்று வேற்பூசையை மேற்கொண்டு வள்ளியூரில் கல்லாடை புனைந்து துறவை ஏற்று வாழ்ந்தார். குமரனையே முழுமுதற் கடவுளாகக் கொண்டு வணங்கினாலும் அவர் அறுவகைச் சமயத்துள்ளும் ஓர் இணக்கத்தை ஏற்படுத்த எண்ணிய பெருந்தகையாளராவார். மேலும் அவர்,

*"உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை*
*அற்றே தவத்திற் குரு"*

**(திருக்குறள், 261)**

என்னும் துறவு நிலையை மேற்கொண்டு வாழ்வைத் தொடங்கியவர் தாம். நாயன்மார் வழியில் தமிழகத்தில் உள்ள எல்லாத் திருத்தலங்களுக்கும் சென்று பதிகங்கள் பாடி வழிபட்டு வந்தவர்தாம்.

*"சாலுங் கருணை தவத்திற்கு உறுதுணையென்று*
*ஓலும் பலநூரல் உள"*

**(வருக்கக்குறள், 57)**

என்பது சுவாமிகளின் கூற்று. ஆயினும் இவர் புதுச்சேரி சென்றிருந்த பொழுது குமரவேள், சுவாமிகளின் கனவிலே தோன்றித் திருமணம் செய்து

கொண்டு வாழ வற்புறுத்தினான். இதேபோன்று புதுச்சேரியில் வாழ்ந்து வந்த வேலாயுதம்பிள்ளையுடைய மனைவியின் கனவிலே அவருடைய மகள் சுந்தரத்தம்மையைச் சுவாமிகளுக்குத் திருமணம் செய்து வைக்குமாறு அறிவுறுத்தினான். இத்தகவலைச் சுவாமிகளின் மைந்தன் செந்தினாயக சுவாமிகள் தம்முடைய 'தண்டபாணி விஜயம்' நூலுள்,

*''மிக்கசைவ நெறிவழுவான் கருணீகத் தொழிலினன் வேலாயுதப்பேர்த்*
*தக்கபுகழ் வேளாளன் றனதுமனையவள் கனவிற் சண்முகேசன்*
*புக்கவள் பெற்றுளமகளைந் தினிண்டுவாய்ச்சுந்தரப்பேர்புனைந்தமாதைத்*
*திக்கறிய விவர்க்களிக்கு மாறுரைத்தானினுஞ் சிலர்க்குச் செப்பினனால்''*

**(தண்டபாணி விஜயம், பூருவபாகம், 191)**

என்று கூறுவதிலிருந்து அறிந்து கொள்ளமுடிகிறது. பின்பு இதுவும் குமரக்கடவுளின் திருவிளையாட்டுப் போலும் என்று எண்ணிச் சுவாமிகள் சுந்தரத்தம்மையாரைத் திருமணம் செய்துகொள்ள இசைந்தார். அவர் திருநெல்வேலி வாழ் வேளாண் பெருமக்கள் நடத்தும் திருமணச் சடங்கு முறைகளைப் பின்பற்றாமல் புதிய முறையில் மயிலம் முருகப்பெருமான் சந்நிதியில் இல்லறத் துணைவியாகச் சுந்தரத்தம்மையாரை ஏற்றுக் கொண்டார். வண்ணச்சரபர் தெய்வசாட்சியாக உருத்திராக்க மாலையை மங்கலநாணாக அணிவித்து மனையாட்டியாக அம்மையாரை ஏற்றார்.

''அறன்எனப் பட்டதே இல்வாழ்க்கை''(திருக்குறள்,49) என்று குறள் கூறும் இல்லறக் கோட்பாட்டைச் சுவாமிகள் நன்கு உணர்ந்தவர். அடிய வர்க்கு உணவளித்து அரும்பசி தீர்த்தலும் பிறவித்துயர் போக்கச் செவி யுணவினாலும் செய்வதே இறைபணி என்று எண்ணிச் சுவாமிகள் இல்லற வாழ்வை ஏற்றுவாழ்ந்தார். இவர்தம் இல்லற வாழ்வில் ஈசுவரவடிவு, திருமலை என்ற இருபெண்மக்களையும் செந்தினாயகம் என்ற மைந்தனையும் பிள்ளைகளாகப் பெற்றுத் தம் மக்கள் மழலைச்சொல் கேட்டு மகிழ்ந்தார். சுவாமிகளுடைய மனையாட்டி சுந்தரத்தம்மையாரும் இனிய தமிழ்ப்பாடல்கள் பாடும் வல்லமை பெற்றவராக விளங்கினார்.

மேலும் சுவாமிகளின் துணைவியார் இசையோடு இன்றமிழ்ப் பாக்களைப் பாடும் இசைத்திறனும் பெற்று விளங்கினார் சுவாமிகளின் துணைவியார் ஆற்றல் மிக்க புலமைப் பெருமாட்டி என்பதற்குச் சான்றாக அன்னார் இயற்றி வழங்கியுள்ள வாழ்த்துக் கவிகள் இரண்டில் ஒன்றை இங்கே காண்பது நன்று.

*''வியன்மிகு தண்டபாணி விசயமென் றொருபேர் சூட்டி*
*நயமலி யிராமானந்த னவின்றசொற் பெருமை*
*மயலறத் தமிழினாலே வகுத்தரும் பயன்பெற் றிட்டான்*
*செயமுடன் வாழ்கநாளுஞ் செந்தினா யகனென் சேயே''*

**(தண்டபாணி விஜயம், முகவுரை, ரு)**

### கையறுநிலையில் துன்புறல்

சுவாமிகளின் மகள் திருமலை ஐந்து வயதிலே இறந்துவிட்டமை அவருடைய உள்ளத்தில் பெரும் கலக்கத்தையே ஏற்படுத்தியிருந்தது. "கடந்த ஞானியும் கடப்பரோ மக்கள்மேல் காதல்" என்னுமாப் போலே சுவாமிகள் தம் மகள்மீது அன்பு மீதூரப் பெற்றிருந்தார். அம்மகளை இழந்த தவிப்பில் அவர் பத்துக்கும் மேற்பட்ட பாடல்களைப் பாடி முருகப்பெருமானிடம் தம் வருத்தத்தை வெளிப்படுத்திக் கொள்கின்றார்.

*"திருமலையைக் கொன்றதொக்கும் பெருந்துயரம்*
*எனக்கினிநீ செய்ய வேண்டாம்*
*கருமபந்தம் ஏதேனும் கடுத்தனவா யிருந்தாலும்*
*கழிக்க வேண்டும்*
*அருமறையா கமங்களுக்கோர் பொதுவாயா*
*அநுபூதி அளித்தி லாயோ*
*குருமரபிற் கொருமுதலாய் பழனிமலைத்*
*தலையில்வளர் குமர வேளே"*

**(தனிப்பாடல் திரட்டு, 371)**

சுவாமிகள் பழனிமலை அடிவாரத்தில் ஒரு திருமடம் அமைத்துள்ளார். இதே போன்று திருவாமாத்தூரிலும் திருமடம் ஒன்றை நிறுவிக் கௌமாரநெறியைப் பரப்பி வந்துள்ளார். சுவாமிகளைத் தொடர்ந்து அவருடைய வழியினர் அவர்தம் கொள்ளுப்பேரனாகிய தண்டபாணி ஐயா திருமடத்தில் ஆண்டுதோறும் வண்ணச்சரபரின் குருபூசை விழாக்களை இப்போதும் நடத்தி வருகின்றார்.

### தொல்காப்பிய வழியில் வாழ்வு

சுவாமிகளின் வாழ்வு,

*"காமம் சான்ற கடைக்கோட் காலை*
*ஏமம் சான்ற மக்களொடு துவன்றி*
*அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்*
*சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே"*

**(தொல்.1138)**

என்னும் தொல்காப்பிய நெறிப்படி அமைந்த வாழ்வு எனலாம்.

### கௌமாரநெறி போற்றல்

ஆறெழுத்து மந்திரத்தை நாடோறும் ஓதி வேற்பூசை நிகழ்த்தி வழிபட்டு வருதலை வண்ணச்சரபர் தம்முடைய வாழ்நாள் குறிக்கோளாய்க்

கொண்டிருந்தார். கால வளர்ச்சியில் சைவம், வைணவம்,சாக்தம் காணா பத்தியம், கௌமாரம், சௌரம் என்னும் ஆறு சமயங்களையும் இணைத்து ஒற்றுமை காணும் முயற்சியில் இவர் மிகுதியும் ஈடுபட்டார். சுவாமிகள் வாழ்ந்த காலம் ஆங்கிலேயர் ஆண்ட காலமாகும். ஆங்கிலேயர் கிறித்து வத்தைப் பரப்ப முயன்றனர். தமிழகத்துத் தொன்றுதொட்டு வந்து கொண்டிருந்த மரபுகளையும்கூட அவர்கள் மாற்ற முனைந்தனர். பண் பாட்டுச் சீரழிவும் மேலைநாட்டு நாகரிக மோகமும் மக்களிடையே தலை விரித்தாடத் தொடங்கின. இவற்றைக் கண்ட சுவாமிகள் மனம் நொந்து வெதும்பினார்.

## தொல்காப்பிய அடிச்சுவடு

திருமால், முருகன், கொற்றவை இனைய தெய்வங்களைப் பற்றிய குறிப்புகள் ஒல்காப்புகழ்த் தொல்காப்பியத்தில் அகத்திணையியலுள் இருக்கக் காண்கின்றோம்.

*"மாயோன் மேய காடுறை யுலகமும்*
*சேயோன் மேய மைவரை யுலகமும்*
*வேந்தன்மேய தீம்புனல் உலகமும்*
*வருணன் மேய பெருமணல் உலகமும்*
*முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்*
*சொல்லிய முறையால் சொல்லவும் படுமே."*

**(தொல்.951)**

இந்நூற்பாவில் தொல்காப்பியர் முல்லை, குறிஞ்சி என நிலத் தெய்வங்களாகத் திருமாலையும் முருகனையும் சுட்டியுள்ளார். சங்க இலக்கியங்களில் சிவன், திருமால், சக்தி, முருகன் பற்றிய செய்திகளைக் காணமுடிகின்றது.

*"பால்புரை பிறைநுதல் பொலிந்த சென்னி"*

**(புறம்.91)**

என்று சிவனையும்,

*"இருநிலம் கடந்த திருமறு மார்பின்*
*முந்நீர் வண்ணன்...."*

**(பெரும்பாண். 29-30)**

என்று திருமாலையும்,

*"கார்நறுங் கடம்பின் பாசிலைத் தெரியல்*
*சூர்நவை முருகன் சுற்றத் தன்ன"*

**(புறம். 23)**

என்று முருகனைப் பற்றியும் சங்கப்பாடல் அடிகளிலிருந்து அறிய

முடிகின்றது. ஞாயிற்றைச் சமயக் கடவுளாகக் கொண்டு சங்கநூல்கள் போற்றினமையை அறிய இயலவில்லை. ஆயினும் மனித ஆற்றலுக்கும் அப்பாற்பட்ட பேராற்றல் உடையது ஞாயிறு என்பதனை வலியுறுத்தும் பாடல்கள் உள்ளன.

*''விரிகதிர் மண்டிலம் வியல்விசும்பு ஊர்தர''*

***(பதிற். 6)***

*''விளங்குபகல் உதவிய பல்கதிர் ஞாயிறு''*

***(அகம்.91)***

எனவரும் அடிகளால் இதனை உறுதிப்படுத்த ஒண்ணும். வீரத்தின் நிலைக்களனாகவும் வெற்றியை அருளும் அருள் உருவாகவும் கொற்றவையை- சக்தியைச் சங்க காலத் தமிழர் ஏற்றிருந்தனர். இதனை,

*''மறங்கடைக் கூட்டிய குடிநிலை சிறந்த*
*கொற்றவை நிலையும் அகத்திணைப் புறனே.*

***(தொல்.1005)***

என வரும் தொல்காப்பியப் புறத்திணை நூற்பாவால் அறிந்துகொள்ள முடிகின்றது.

''தமிழக மரபில் சக்தி வழிபாடு ஒரு வகையில் விநோதமானது. சங்க காலத்தில் சில பாடல்கள் சக்தியைப் போற்றுகின்றன. நாயன்மார்கள் சக்தியைத் தனிபெரும் தெய்வமாகப் பாடாவிட்டாலும், சிவனைச்சக்தியின் கணவனாக அடிக்கடி குறிப்பிட்டதன் மூலம் சக்தியைப் போற்றினார்கள்'' என்னும் முனைவர் கோ. சுந்தரமூர்த்தியின்(சைவ சமயம். ப.128) கருத்து இவண் எண்ணத்தகும்.

''ஞாயிறு போற்றுதும் ஞாயிறு போற்றுதும்' என்று இளங்கோவடிகள் சிலப்பதிகாரக் காப்பியத் தொடக்கத்தில் பொது வணக்கம் கூறியுள்ளார். இது படிப்படியாக வளர்ந்து கதிரவன் வணக்கமாக வளர்ந்து செழித்தது. ''சூரியனை வழிபடும் நெறி சௌரம் எனப்படும். இந்த நெறியாளர் சூரியனை முழுமுதலாகப் பாவித்து வழிபடுவார்கள். ஒரு காலத்தில் சூரியனுக்குப் பல கேள்விகள் இருந்திருக்க வேண்டும். தற்போது மிகவும் சிறப்பான இரண்டு கோவில்கள்தான் இருக்கின்றன. அவை ஒரிசா மாநிலத்திலுள்ள கோனார்க் சூரியன் கோயிலும், தஞ்சை மாவட்டத் திலுள்ள சூரியனார் கோயிலும் ஆகும்... சூரியனுடன் உள்ள ஏழு கிரகங்களையும் இரண்டு சாயா கிரகங்களையும் சேர்த்து நவக்கிரகங்கள் என்று தனிச் சந்நிதி அமைத்து வழிபடும் மரபு நமது தமிழ்நாட்டில் இன்று வேரூன்றி விட்டது''(சைவ சமயக் கல்வி: 1, தருமபுர ஆதீன வெளியீடு, ப.87) என்பது இவண் நினையத்தகும்.

கணபதி வழிபாடு தமிழகத்தில் இடைக்காலத்து ஏற்பட்ட ஒன்று என்பது வரலாற்றாய்வாளர்களின் கருத்து. ''தமிழகத்தில் விநாயகர் வழிபாட்டின் தொடக்கம் எப்படி ஏற்பட்டதென்பது விளங்கவில்லை. சங்க காலத்திலும் பிற்காலத்திலும் விநாயகர் பற்றிய குறிப்பு எதுவும் இல்லை. விநாயகரைப் பற்றிய தமிழ்க்குறிப்பு சம்பந்தர், அப்பர் பாடல்களிலேயே முதலில் காணப்படுகிறது. இக் குறிப்பிலிருந்து அவர்கள் காலத்தில் விநாயகர் முக்கியத்துவம் பெற்ற கடவுள் போன்று தோன்றவில்லை. பிற்காலச் சோழர் காலத்தில் விநாயகர் மக்களால் பெரிதும் விரும்பப்பட்ட கடவுளாயிருக்க வேண்டும்'' என்று முனைவர் கோ. சுந்தரமூர்த்தி(சைவ சமயம். ப.126) ஆய்ந்து கூறுவார்.

### *சமயம் என்ற சொல்லாட்சி*

சமயம் என்பது வழி அல்லது நெறி என்ற பொருளில் வழங்கப்பட்டு வருகின்றது. சமயம் என்ற சொல்லாட்சி முதல் முதலில் மணி மேகலையிலேதான் ஆளப்பெற்றுள்ளது.

*''ஐவகைச் சமயமும் அறிந்தனள்''*

**(மணிமே: 27:289)**

எனவரும் மணிமேகலைத் தொடர் இவண் நினையத்தகுவது. ''தம்மையும் தம்மை இயக்கி நிற்கும் பேராற்றலையும்(இறைவன்) தக்கவாறு உணர்தலும் உணர்ந்ததன் பயனாக அப்பேராற்றலோடு இயைந்து வாழத் தம்மை ஆளாக்கிக் கொள்வதுமே சமயம் எனலாம். சமயம் சமைக்கப்படுவது; அஃதாவது பக்குவப்படுத்திக் கொள்வது என அமையும்''

### *அறுவகைச் சமயம் என்ற சொல்லாட்சி*

''ஐவகைச் சமயம்' என்னும் சொல்லாட்சியை மணிமேகலைக் காப்பியத்தில் காணமுடிகிறது. பெருங்கதை 'அறுவகைச் சமயம்' என்ற சொல்லைக் கையாண்டுள்ளது. மேலும் இச்சொற்றொடர் திருமந்திரத்தில் முதன்முதலாகப் பயன்படுத்தப் பெற்றுள்ளது என்பது இவண் அறியத்தகும்.

*''ஆயத்துள் நின்ற ஆறு சமயங்களும்*
*காயத்துள் நின்ற கடவுளைக் காண்கிலர்''*

**(திருமந்.1530)**

இவ் ஆறு சமயங்கள்தாம், நாம் முன்னர்க்கண்டவை என்று கூறு இயலாது. காளாமுகம், பாசுபதம், மாவிரதம், வாமம், பைரவம், சைவம் என ஆறுவகை என்பது ஒரு வகை உட்பிரிவு. வைசேடிகம், நையாயிகம்,

மறுவின்மீமாஞ்சை,ஆருகதம், பௌத்தம், பிரதிலோகாயதம் என்பது சேந்தன் திவாகரம்(கி.பி. 8,9 'ஆம் நூற்றாண்டு) கி.பி. 10-ஆம் நூற்றாண்டில் பிங்கலந்தை 'உட்சமயம், புறச்சமயம்' என்ற பாகுபாட்டை முதல் முதல் கூறுகின்றது.

*"தொண்டர்க் கங்கே ஆறுசமயமாகி நின்ற திக்கினை யென்*
*திருமுதுகுன் றுடையான் தன்னை"*

**(தேவாரம், 6928)**

என்று திருநாவுக்கரசர் கூறுவது இவ் ஆய்வில் பேசப்பெறும் ஆறு சமயங்களையே என்று கருத இடமுள்ளது.

*"அறுவகைச் சமயத் தறுவகை யோர்க்கும்*
*வீடுபே றாய் நின்ற விண்ணோர் பகுதி"*

**(திருவாசகம், திருவண்டப் பகுதி, 17-18)**

என்று மாணிக்கவாசகர் கூறுவதும் மேலைக் கருத்தையே வலியுறுத்தும். இந்நிலையில் தமிழகத்தில் வேரூன்றி வளர்ந்து வந்த சைவம், வைணவம், சாக்தம், கௌமாரம், காணாபத்தியம், சௌரம் என்னும் ஆறு சமயங்களையும் இணைக்கும் முயற்சியில் ஆதிசங்கரர் ஈடுபட்டார். இவ்விணைப்பு முயற்சியில் இவர் தலைநின்றமையினால் ஆதிசங்கரரை, 'ஷண்மத ஸ்தாபானசாரியார்' என்று போற்றினர். இக்கால கட்டத்தில் இவ்வாறு சமயங்களுக்குள் ஒரு சமரச உணர்வை வளக்க முனைந்தனர் சான்றோர்.

கி.பி. 13-ஆம் நூற்றாண்டில் ஆண்ட மாறவர்மன் சுந்தரபாண்டியனின் மெய்க்கீர்த்தி,

*"நால்வகை வேதமும் நவின்றுடன் வளர*
*ஐவகை வேள்வியும் செய்வினை இயற்ற*
*அறுவகைச் சமயமும் அழகுடன் திகழ..."*

என்று அமைகின்றது.

*"ஆறு சமயங்கள் தோறும் வேறுவேறாகி*
*விளையாடும் உனையாரறிவார்"*

என்பது தாயுமானவரின் பாடல். இவர் பதினேழாம் நூற்றாண்டினர். இவ்வாறு மேற்கூறிய ஆறு சமயங்களின் இணைப்புக் காரணமாகச் சமயப் பொதுமையுணர்வு தமிழகத்தில் தழைக்கத் தொடங்கிற்று. மேலும் சக்தியையும், முருகனையும், விநாயகரையும் குறித்துப் பக்திப் பனுவல்கள் தமிழில் தோன்றி வளரத் தொடங்கின. திருக்கோயில்களிலும் சமயச் சமரச உணர்வு வேரூன்ற இது ஏதுவாயிற்று.

வண்ணச்சரபர் தாம் வாழ்ந்த பத்தொன்பதாம் நூற்றாண்டில் இணைந்திருந்த தமிழ்ச்சமுதாயம் சமயத்தின் பேரால் தம்முட் பிளவுபட்டுப் பிரிந்திருத்தலைக் கண்டு ஆறு சமயத்தவர்களையும் இணைக்கும் முயற்சியில் பெரிதும் ஈடுபட்டார். தொன்றுதொட்டு வரும் சைவம், வைணவம், சாக்தம், காணாபத்தியம், கௌமாரம், சௌரம் என்றமையும் ஆறு சமயங்களும் இணைந்து செயற்பட்டால்தான் புறச்சமயங்களை வெல்ல முடியும் என்று சுவாமிகள் அழுத்தமாக எண்ணினார்.

சைவ ஆகமங்களில் கூறப்பெறும் இறைவனை அடைதற்குரிய வழிகள் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு ஆகும். மெய்யறிவைப் புகட்டும் சிவஞானபோதம் எட்டாம் நூற்பா உரையில் தவம் குறித்து விளக்கும்போது அடைதற்குரிய நால்வகை நெறிகளையும் உரையாசிரியர் சிவஞானமுனிவர் விரித்துரைப்பார். மேலும்,

*''விரும்பும் சரியை முதல் மெய்ஞ்ஞானம் நான்கும்*
*அரும்பு மலர்காய் கனிபோ லாகும்''*

**(தாயுமானவர் பாடல்)**

என்பது தாயுமானசுவாமிகள் திருவாக்கு. இங்கே கூறப்பட்ட நான்கு நெறிகளையும் வண்ணச்சரபர் தம்முடைய நூல்களில் போற்றிக் கூறியுள்ளார்.

*''அண்டர் பெருமான் அமர்ந்தருளும் ஆலயத்தின்*
*தொண்டனைத்தும் செய்திடல் நன்று''*

**(மனுநெறித். 1242)**

என்பதனால் சரியை நெறியைச் சுவாமிகள் சுட்டினார்.

*''மெய்வழக்கர் வேண்டும் வியனனைத்தும் செய்வானே*
*தெய்வம் நல்கும் சற்புத் திரன்''*

**(மனுநெறித். 1252)**

என்பதனால் கிரியை நெறியையும்,

*''புழுவேட் டுவனாதல் போலும் தகைத்தே*
*வழுவாத யோகத்தின் மாண்பு''*

**(மனுநெறித். 1262)**

என்பதனால் யோகநெறியையும் சுவாமிகள் விளக்கியுள்ளார்.

*''கசிவுறுபே ரன்பாற் கலந்துகலந் தொன்றும்*
*அசிபதமே சாயுச்சி யம்''*

**(மனுநெறித். 11272)**

என ஞானநெறி பற்றியும் சுவாமிகள் தாமியற்றியுள்ள 'மனுநெறித் திருநூ'லுள் குறட்பாக்கள் வழித் தெளிவுறுத்தியுள்ளார்.

## *முரண்பாட்டில் ஒற்றுமை காணும் நெறி*

சுவாமிகள் ஆறுசமயங்களையும் குறித்து ஆயிரம் ஆயிரம் பாடல்களைப் பாடிப் பொதுத்தெய்வத்தையும் பாடிப் பரவியுள்ள குறிப்பை நாம் தெளிதல் வேண்டும்.

சுவாமிகள் அறுவகைச் சமய வழிபாட்டையும் அவற்றின் நெறி முறைகளையும் வலியுறுத்தியுள்ளார். இவ் ஆறு சமயங்களுக்கெல்லாம் பொதுவாயும், மேற்பட்டதாயும், எல்லாவற்றிற்கும் அடிப்படையாயும், பெயர் குணம் அற்றதாயும், வடிவம் இல்லாததாயும் கொண்டு ஏழாவதாகச் சுவாமிகள் 'சமயாதீதம்' என்று புதுவதாக ஒன்று கண்டு கூறினார். இந் நிலையில் சுவாமிகள் தம்முடைய தோற்றத்திலேயே அறுவகைச் சமயக் குறியீடுகளை இட்டு வெளிப்படுத்தினார்.

சுவாமிகள் நெற்றியில் திருநீறும், குங்குமமும் இட்டுக் கொள்வார், கழுத்தில் உருத்திராக்க மாலையை அணிந்து கொள்வார். சடை முடியுடனும் ஆண்டிக்கோலத்தில் கையில் தண்டாயுதமும் ஏந்திக் காட்சியளிப்பார், மேலும் தோள்களில் வடகலை தென்கலைத் திருநாமங்களையும் இட்டுக் கொள்வார். சமயச் சின்னங்களை அணிந்து கொள்வதும் சமயக் கருவி களைக் கைக்கொண்டு காட்சி தருவதும் இவர்தம் தோற்றப் பொலிவாகும். முரண்பாட்டில் ஒருமையுணர்வை ஏற்படுத்த வேண்டும் என்று சுவாமிகள் எண்ணியதன் விளைவே இது எனலாம். வாய்மொழியாகச் சமயச் சகிப்புத் தன்மையையும் இணைப்பையும் கூறுவதும் செயல் வடிவில் தம் வாழ்க்கையில் தாமே பின்பற்றுவதும் இவர்தம் தலையாய நோக்கமாகத் திகழ்கின்றது.

## *கௌமார முறைமை கண்டவர்*

சிவபெருமானையும், திருமாலையும், முருகனையும், விநாயகரையும், ஞாயிற்றையும், சக்தியின் பல்வேறு வடிவங்களையும் பல ஆயிரம் பாடல்களில் சுவாமிகள் பாடிப்பரவியுள்ளார். இருப்பினும் கௌமார முறைமையிலேதான் சுவாமிகளுக்குப் பேரீடுபாடு மேலோங்கி விளங்கிற்று. இதற்கு அரண் செய்வதாக அமைகின்றது தண்டபாணி சுவாமிகளின் பேரர் தவத்திரு முருகதாச ஐயாவின் முன்னுரை. அது வருமாறு: ''இந்நூலாசிரியரான சுவாமிகள் எல்லாச் சமய மூர்த்திகளும் பரம்பொருள் ஒன்றினின்றும் தோன்றிய வடிவங்கள் என்ற உண்மையை அநுபவமாக அறிந்திருப்பினும், முன்னையத் தொடர்புக்கேற்ப முருகப் பெருமானையே இளமை முதற்கொண்டு உபாசனை வழிபாடு செய்து, அவனருளால் பல காட்சிகள் பெற்று, பல அருளுரைகள் வினவி, சமரச ஞானம் கைவரப்பெற்றவர். ஆகவே முருகனை முதற்பொருளாகக்

கொண்டு மற்றவற்றை அதன் அங்கமாகத் தழுவினர்''. இவ்வாறு இவர் கருதுவதற்கு அடிப்படையாக அமைவது பின்வரும் சுவாமிகளின் பாடல்:

*''சூரியனே பிரமமெனச் சொல்லல் ஒன்று*
*சுடர்மழுவான் கடவுளெனத் துதிப்ப தொன்று*
*வீரிய தீயைப்பெரிதா விளம்பல் ஒன்று*
*விட்டுணுவே யாகுமென விள்ளல் ஒன்று*
*சீரியக ணேசனெனத் திகழ்வ தொன்று*
*செவ்வேற்கைச் சேந்தனெனச் செப்ப லொன்று*
*ஆரியநூற் றலைவர்புகழ் சமய பேதம்*
*ஆறும்எங்கள் கவுமாரத்துள் அணித்தாம் அன்றே''*

**(கௌமார முறைமை, ப.8)**

## ஏழின் விளக்கம்

'சத்தியசூத்திரம்' என்ற நூலில் தண்டபாணிசுவாமிகள் ஒரு வாரத்தில் உள்ள ஏழு நாட்கள் ஏழு சமயங்களையும் வழிபடற் பொருட்டே அமைந்தன என்று காரணம் கூறுவார்.

*''அருந்த பேதத்து அறுவகைச் சமயமும்*
*அவைமுழு தொருவலும் தழுவலு மாகும்*
*அதீதம் ஒன்றும் ஆன ஏழும்*
*வழிபடற் பொருட்டே வாரமே ழாயவே''*

**(சத்திய சூத்திரம் - 12:7)**

| கிழமை | தெய்வம் | | சமயம் |
|---|---|---|---|
| ஞாயிற்றுக்கிழமை | - சூரியன் | - | சௌரம் |
| திங்கட்கிழமை | - சிவன் | - | சைவம் |
| செவ்வாய்க்கிழமை | - சக்தி | - | சாக்தம் |
| புதன்கிழமை | - விஷ்ணு | - | வைணவம் |
| வியாழக்கிழமை | - கணபதி | - | காணாபத்தியம் |
| வெள்ளிக்கிழமை | - குமரன் | - | கௌமாரம் |
| சனிக்கிழமை | - குரு | - | சமயாதீதம் |

இவ்வாறு சுவாமிகள் ஏழு நாளுக்கும் பொருத்தம் காட்டி விளக்குவார். 'கௌமார முறைமை' என்ற நூலில் சுவாமிகள் கருமகாண்டம், பக்திகாண்டம், ஞானகாண்டம் என மூன்று காண்டங்களில் நூறு நூறு பாடல்கள் வீதம் முந்நூறு பாடல்கள் இயற்றியுள்ளார். இப்பாடல்களில்

சுவாமிகள், தம்முடைய நீண்ட உபாசனை, ஆராய்வு, அநுபவம், முன்னோர் நூற் கருத்து இவைகளைக் கொண்டு கருத்துரைக்கின்றார். மேலும் 'தியானாநுபூதி' என்ற நூலில் 100 பாடல்களில் தொகை வகையாகக் கூறி இந்நூலில் விரி என்ற முறையிலும் சுவாமிகள் மேற்கண்ட செய்திகளை விளக்கியுள்ளார். இந்நூல்களே அல்லாமல் சுவாமிகள் 'கௌமார வினோதம்', 'கௌமார லகரி', 'கௌமார தீபம்' போன்ற பல நூல்களை இயற்றியுள்ளமையும் இவண் எண்ணத்தாகும்.

சுவாமிகள் தமிழ்நாட்டுத் தலங்கள்தோறும் சென்று ஆங்காங்கே எழுந்தருளியுள்ள கடவுளர்களைப் பாடிப் பரவியுள்ளார். சிவன் பதிகம், அம்மன் பதிகம், கணபதி பதிகம், முருகன் பதிகம், திருமால் - முருகன் பதிகம், இரவி எழுபது போன்ற பல நூல்களை இவர் இயற்றி ஆறுசமயக் கடவுளர்களையும் குறித்துப் பரவியுள்ளார். சுவாமிகள் அறுவகைச் சமயக் கடவுளரோடு ஏழாவதான சமயாதீதம் குறித்தும் ஆயிரம் ஆயிரம் பாடல்கள் வீதம் ஏழாயிரம் பாடல்கள் பாடியுள்ளார். இந்நூல் 'ஏழாயிரப் பிரபந்தம்' என்று அழைக்கப் பெறுகின்றது.

கதிரவனைக் குறித்து வடமொழியில் 'ஆதித்த தோத்திர ரத்தினம்' 'ஆதித்த இருதயம்' போன்ற நூல்கள் உள்ளன. தமிழில் ஞாயிற்றைக் குறித்த நூல்கள் எதுவும் இல்லாமையினால் சுவாமிகள் 'ஞாயிறு ஆயிரம்' என்ற நூலை இயற்றினார். ஆக்கல், அளித்தல், அழித்தல், மறைத்தல், அருளல் போன்ற அருட்செயல்கள் கொண்ட சிவபெருமானைக் குறித்துச் சுவாமிகள் 'தில்லைத் திருவாயிரம்' என்ற நூலை இயற்றியுள்ளார். அபிராமி அந்தாதியும் கவிராச பண்டிதரால் மொழியாக்கம் செய்யப்பட்ட சௌந்தர்யலகரியும் போன்று 100 பதிகங்கள் அடங்கிய 'சக்தி கவசம்' ஒன்றினைச் சுவாமிகள் இயற்றியுள்ளார். திருமால், கருணை வடிவினன்; சரணாகதித் தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டது வைணவம். சுவாமிகள் 'திருவரங்கத் திருவாயிரம்' என்ற நூலை இயற்றியுள்ளார். 'ஓம்' என்ற பிரணவப் பொருளைக் குறியீடாகக் கொண்ட கணபதியைக் குறித்து இவர், 'கணபதி ஆயிரம்' என்ற நூலைப் பாடியுள்ளார். முருகப் பெருமான் இவருடைய உபாசனைக் கடவுள் ஆவான். சுவாமிகள், 'பழனித் திருவாயிரம்' என்ற நூலை வெளியிட்டுள்ளார்.

பெரிய தெய்வம் 'குரு' என்பதே சுவாமிகளின் கொள்கையாகும்.

*"குருவடிவம் அன்றியொரு தஞ்ச மில்லை*
*கூறிடினும் அவனுளத்தின் குறிப்பென் றோர்ந்து*
*திருவருளை நாடிநிற்கும் சமயா தீதச்*
*செல்வருக்கும் பூசையது சிறப்பே யாகும்."*

***(கௌமார முறைமை, ப.23)***

பொதுவாயுள்ள பரம்பொருளே குருவடிவம் என்பதே சமயாதீத இயல்பு. இவ்வாறு கருத்துரைக்கச் சுவாமிகளுக்கு அடிப்படையாக அமைந்தது திருமந்திரப்பாடல் எனில் தவறாகாது.

*"தெளிவு குருவின் திருமேனி காண்டல்*
*தெளிவு குருவின் திருநாமம் செப்பல்*
*தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்*
*தெளிவு குருவுருச் சிந்தித்தல் தானே"*

***(திருமந்திரம், 139)***

மேலும், அருணகிரிநாதர்,

*"உருவாய் அருவாய் உளதாய் இலதாய்*
*மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்க்*
*கருவாய் உயிராய்க் கதியாய் விதியாய்க்*
*குருவாய வருவாய் அருள்வாய் குகனே"*

***(கந்தரநுபூதி)***

என முருகப்பெருமானை வேண்டுவதும் தண்டபாணிசுவாமிகளின் கருத்திற்கு அரண் செய்வதாகும். இவ்வாறு ஆறுசமயங்களையும் கடவுளர்களையும் சுவாமிகள் எவ்வித வேறுபாடும் இன்றிப் பாடிப் பரவிப் போற்றியுள்ளார். இத்தகைய இணைப்பை உணர்த்தச் சுவாமிகளுக்கு ஆதிசங்கரர் தூண்டுகோலாக விளங்கியுள்ளார் எனத் துணியலாம். சுவாமிகள்,

*"சட்சமய நெறிகளில்ஒவ் வொன்றைப் பற்றிச்*
*சரசநிச் சயமடைந்தோர் சகத்திற் பல்லோர்*
*பட்சமின்றிச் சங்கரன்போல் பொதுவாய் யாரும்*
*பகரவில்லை...."*

எனவும்,

*'சமயமெலாம் ஒருநிலையே எனநன் குஓர்ந்த*
*சங்கர மாமுனி....."*

எனவும் 'நானிலைச் சதகம்' என்ற நூலில் கூறுவதும் இவண் இணைத்துப் பார்க்கத்தகும்.

ஆறுசமயங்களையும் இணைக்கும் முயற்சியை வண்ணச்சரபம் தண்டபாணிசுவாமிகள் ஆதிசங்கரர் வழியில் ஒரு பொதுநோக்குடன் தொடங்கிய நல்லெண்ணம் இதனால் புலனாகின்றது. தமிழகத்தை ஆண்ட ஆங்கிலேயர் மக்களைப் பிரித்து மதமாற்றம் செய்தனர். எனவே இதனைத் தடுத்து நிறுத்தும் முயற்சியில் சுவாமிகள் ஈடுபட்டிருக்க வேண்டும். மேலும் பாளையப்பட்டுகளின் ஆட்சியில் மக்கள் எத்தெய்வத்தை வழிபடுவது என்று மயங்கியிருக்கக்கூடும்; அத்தகையோருக்கு அறிவுரை கூறும்

பணியில் சுவாமிகள் ஈடுபட்டவராதல் வேண்டும். இன்னும் சிலர் தங்கள் தங்கள் சமயமே உயர்ந்தது என்று தங்களுக்குள் முரண்பட்டுப் பூசலிட்டிருக்க வேண்டும்; இத்தகைய வேற்றுமை உணர்வைப் போக்கச் சுவாமிகள் முன்முயற்சி எடுத்துள்ளார் எனலாம். மேலும் தமிழ்ச் சமயங்கள் அழிந்துவிடக் கூடாது என்றும், சமரச உணர்வு நன்கு தழைக்க வேண்டும் என்றும் கருதிச் சுவாமிகள் ஆறு சமயங்களையும் போற்றியிருக்க வேண்டும் என்ற முடிவிற்கு நாம் வரமுடியும்.

### ஆதிசங்கரரும் வண்ணச்சரபரும்

கேரளத்தில காலடி என்ற ஊரில் தோன்றிய ஆதிசங்கரர் (கி.பி.788-820) 'ஷண்மத ஸ்தாபனாசாரியார்' என்று போற்றப் பெறுகின்றார். வேதாந்த மதத்தை இந்திய நாட்டில் நிலைநாட்ட வேண்டித் தேவர்கள் கேட்டுக்கொண்டதற்கு இணங்கச் சிவபெருமானே சங்கரராகத் தோன்றினார் என்பர். ''நாத்திக வாதங்களால் வேதமதம் இந்திய மண்ணில் சின்னாபின்னம் ஆயிற்று; மீண்டும் அது தழைக்க வேண்டுமெனத் தேவர்களும் முனிவர்களும் வேண்டினர். அதன் விளைவாகச் சங்கரர் பூர்ணா ஆற்றின் கரையில் அமைந்த காலடியில் தோன்றினார்.'' தண்டபாணிசுவாமிகள் தண்பொருநை ஆற்றின் கரையில் அமைந்து திக்கெல்லாம் புகழும் திருநெல்வேலியில் தோன்றினார். சங்கரருக்குக் கோவிந்த பகவத்பாதர் குருவாக அமைந்தார். தண்டபாணி சுவாமிகளுக்கோ சீதாராமநாயுடு குருவாக இருந்து இலக்குமி மந்திரம், விநாயக மந்திரம், சடாக்கர மந்திரம் ஆகியவற்றை அறிவுறுத்தி இறைப்பணியில் ஈடுபடுத்தினார். புத்தமும் சமணமும் எட்டாம் நூற்றாண்டில் இந்தியத் திருநாடெங்கும் பரவியிருந்தன; மக்களிடம் மிகுந்த செல்வாக்கையும் பெற்றுத் திகழ்ந்தன. நாட்டை ஆளும் அரசர்களும் அம்மதங்களுக்கே ஆதரவு தந்து போற்றினர். இது ஆதிசங்கரர் வாழ்ந்த காலச்சூழ்நிலை ஆகும்.

வண்ணச்சரபர் வாழ்ந்த காலத்தில் நம் நாட்டில் ஆங்கிலேயர் ஆட்சி நிலவியது. மேலும் கிறித்துவமும் இசுலாமும் மக்கள் மனத்தை ஈர்த்தன. மக்கள் அப்புறச்சமயங்களின் சிறு சிறு சலுகைகளைப் பெற்று மதம் மாறத் தொடங்கினர். இம்மதங்களின் அரசியற் செல்வாக்கினால் மக்களிடமும் அவை செல்வாக்குப் பெற்றிருந்தன. இதுவே சுவாமிகள் வாழ்ந்த காலச் சூழ்நிலை. இருபெருஞ் சான்றோர்களும் வாழ்ந்த சமுதாயச் சூழல் அவர்களிடையே ஆறு சமயங்களைக் குறித்துப் பேசுமாறு- சமரச உணர்வை-இணைப்பை வலியுறுத்தும் வண்ணம் தூண்டின. அவர் சங்கரர்; இவரோ சங்கரலிங்கம் ஆவார். பெயரொற்றுமையும் இவண் எண்ணத்தகும். ஆதிசங்கரர் வடக்கிலே பத்ரி மடத்தையும் தெற்கில்

சிருங்கேரி மடத்தையும், கிழக்கில் பூரி ஜகந்நாத மடத்தையும், மேற்கே துவாரகா மடத்தையும் உருவாக்கினார். வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் பழனியில் தண்டபாணித் திருமடத்தையும், திருவாமாத்தூரில் கௌமார மடாலயத்தையும் நிறுவினார்.

அயாசகன் என்ற ஏழை அந்தணர் வறுமையில் வாடியவர். அவர் ஏகாதசி நோன்பை முடித்துக் துவாதசியில் உணவு உண்ணுவார். இதே நோன்பைக் கடைப்பிடித்த சங்கரர் துவாதசியன்று அந்தணன் வீட்டின் முன்சென்று, 'பவதி பிக்ஷாந்தேகி'' என்று வேண்டினார். அயாசகனோ வெளியே சென்றிருந்தார். சங்கரரின் ஒளி பொருந்திய திருமுகத்தைப் பார்த்த அயாசகன் மனைவிக்கு உஞ்சவிருத்திக்கு வந்த பிள்ளைக்கு உணவு வழங்க ஏதும் இல்லையே என்ற கவலை பெருகிற்று. அந்தப் பெண்மணி, தன் கணவன் நீராடி வந்த பின்பு உட்கொள்வதற்கு என்று வைத்திருந்த பழைய நெல்லிக்கனி வீட்டிலிருப்பது நினைவிற்கு வரவே, முக மலர்ச்சியுடன் வாயிலில் நின்று கொண்டிருந்த சங்கரனுக்கு அக்கனியை அளித்தாள். அப்போது அவருக்கு வயது ஐந்து இருக்கும். அந்தத் தாயின் கனிவை எண்ணிய சிறுவன் சங்கரன், 'கனகதாராஸ்தவம்' பாடி அம்பாளிடம் மனம் உருகி வேண்டினார். அவர் வேண்டுதலால் அயாசகனின வீட்டில் பொன்மழை பொழிந்தது. இத்தகைய சிறு வயதிலேயே இறையருட் பாடலைப் பாடும் பேராற்றல் சங்கரருக்கு இருந்தமை போலச் சுவாமிகளுக்கு எட்டு வயதுப் பருவத்திலேயே 'பூமிகாத்தாள்' என்பதற்கு வெண்பாப் பாடி விளக்கம் சொல்லும் புலமையாற்றல் இருந்தது; சங்கரர் எப்படிச் சிவபெருமானின் தோற்றமோ அது போன்று வண்ணச்சரபம் தண்டபாணிசுவாமிகள் அருணகிரிநாதரின் மறுதோற்றம் ஆவார். இதனைச் சுவாமிகளே தம்முடைய வாக்கு மூலமாகச் சொல்லியுள்ளார்.

*''வடலூரரான் முன்தாயு மானவனே என்றும்*
*திடமாற்ற மேபோற் சிலர்வந்-திடலோதி*
*என்னையும்தன் கைக்கிளிய தென்றிசைத்தான் ஏற்றஅருள்*
*தன்னைநல்கில் யாவுமினி தாம்''*

***(தனிப்பாடல் திரட்டு, 283)***

இதே தகவலைச் சுவாமிகள் தம்முடைய 'புலவர் புராண'த்துள்ளும் கூறுகின்றார்.

பிறர் இடுக்கண் தீர்க்கும் பெருந்தகைமை அருளாளர்களுக்கு மிகவும் உண்டு. அயாசகனின் வறுமையைப் போக்க எப்படிச் சங்கரர் 'கனக தாராஸ்தவம்' பாடினரோ அதே போன்று சுவாமிகள் பிறர் நலன் கருதி மழைபெய்யும் வண்ணம் பாடியுள்ளமை இங்கு ஒப்பு நோக்கத்தகும்.

*"மேகங்காள் உங்களுக்கு வேலா யுதன்ஆணை*
*மாகம் புரந்திருக்கும் மன்னாணை-ஏகபர*
*வத்துவின தாணை! இந்த மாநிலத்தின் மேற்கருணை*
*வைத்துமிகப் பெய்மின் மழை"*

**(தனிப்பாடல் திரட்டு, 157)**

என்று பாடி மழை பொழியும் வண்ணம் செய்தாராம் சுவாமிகள். சங்கரர் பொன்மழை பொழியச் செய்தார். வண்ணச்சரபர் வான்மழை பொழியச் செய்தார்.

## அரங்கமும் ஆனைக்காவும்

திருவரங்கனைப் பாடிப் பரவியவர் பிள்ளைப்பெருமாள் ஐயங்கார். 'அஷ்டப் பிரபந்தம்' இயற்றியருளிய பெருநாவலர் ஆவர். 'அரங்கனைப் பாடிய வாயால் மற்றைக் குருங்கனைப்பாட மாட்டேன்' என்று மனஉறுதி கொண்டு வாழ்ந்தவர். அக்காலத்தில் திருவானைக்காவில் வாழ்ந்த சைவப் பெருமக்கள் சிவபெருமானைப் பாடுமாறு அவரிடம் வேண்டினர்; ஐயங்கார் அதற்கு மறுத்துவிட்டார். ஒருமுறை திருவரங்கத்திற்கு உரிமை யான கபிலைப் பசு திருவானைக்காச் சைவர்கள் வயலில் மேய்வதைக் கண்ட அவர்கள், அப்பசுவைக் கொட்டிலில் பிடித்து அடைத்து வைத்தனர். நாடோறும் திருவரங்கப் பெருமானின் பேருருக் காட்சியின் (விசுவரூப தரிசனம்) போது கபிலைப் பசுவைப் பெருமான் முன் கொண்டு வந்து காண்பிப்பது வழக்கம். ஆனால் குறிப்பிட்ட நாளில் பசுவைக் காணாமல் தவித்த திருவரங்கத்தினர் ஆனைக்காவில் அடைக்கப்பட்டிருப்பதைக் கேள்விப்பட்டனர். பசுவை விடுவிக்குமாறு சைவப் பெருமக்களிடம் கேட்டனர். சைவர்களோ பிள்ளைப்பெருமாளையங்கார் வந்து கேட்டால் பசுவை விடுவதாகக் கூறினர். ஐயங்காரிடம் இது பற்றிக் கூறினார்கள். அவரோ, "ஆனை துரத்தினாலும் ஆனைக்காவில் நுழையாதே!" என்னும் பழமொழியைச் சொல்லி மறுத்துவிட்டார். சைவ அன்பர்களைத் திருவரங்கத்திற்கு வந்து பார்க்கும்படி சொல்லி அனுப்பினார். அவர்களும் ஐயங்காரிடம் வந்து, "சிவபெருமான் மீது நீர் பாடப்போவது உண்மை என்றால் சில சீர்களைச் சொன்னாலே பசுவை விட்டுவிடுகிறோம்" என்று உறுதி கூறினர். ஐயங்காரும் சமத்காரமாகப் பாடத் தொடங்கினர்.

*"மங்கை பாகன் சடையில் வைத்த கங்கையார் பதத்துநீர்*
*வசைமேவு முனிவனுக்கு மைந்தனான தில்லையோ?"*

என்று பாடத் தொடங்கியவுடனே பசுவை அவிழ்த்து விட்டு விட்டனர். ஆனால் பிள்ளைப்பெருமாளையங்கார் தில்லையை விடவும்

திருவரங்கமே மேலானது என்று பொடி வைத்துப் பாடினராம். எஞ்சிய அடிகளையும் கண்டால் இது நன்கு தெரியவரும்.

*''செய்கையா லிரந்தவன் கபால மார சுற்றினார்*
*செய்யதாள் மலரன் சிரத்திலான தில்லையோ?*
*வெங்கண் வேழமூல மென்ன வந்ததுங்கள் தேவனோ?*
*வீறு இராவணன் அமரிலன்று விறல் அழிந்ததில்லையோ?*
*அங்கண் ஞாலமுண்டபோது வெள்ளிவெற் பகன்றதோ?*
*ஆதலால் அரங்கனன்றி வேறு தெய்வமில்லையே!''*

***(பரப்பிரம விவேகம், 1)***

இது பதினேழாம் நூற்றாண்டிலே நடைபெற்றதுதான் என்றாலும் சைவ, வைணவப் பூசல் சுவாமிகள் காலம் வரையிலும் நீடித்தது என்பதே உண்மை. 'முக்கூடற்பள்ளு' நூலில் கூட இளையபள்ளியும் மூத்தபள்ளியும் வாய்ச் சண்டை போடும்போது தாம்தாம் சார்ந்துள்ள சமயங்களை உயர்த்திப் பேசி மற்றதனை இழித்துக் கூறுவதாகப் பதிவு செய்யப்பட்டுள்ளமை கண்கூடு. இறுதியில் இருவரும் சமாதானமாகி இணைந்து போவதாக 'முக்கூடற்பள்ளு' இலக்கியம் கூறும். இத்தகைய சமயப் பிணக்குகள் தமிழ்ச் சமுதாயத்தில் நிகழ்ந்து வந்த காரணத்தினால் ஒற்றுமையை உருவாக்க வேண்டிய சூழ்நிலை வண்ணச்சரபர் போன்ற அருளாளர்களுக்கு ஏற்பட்டது. ''அரியும் சிவனும் ஒண்ணு, அறியாதவன் வாயிலெ மண்ணு!' என்று மக்களிடையே பேசப்பட்டு வந்த பழமொழிகூட இவ் விணைப்பையே குறிப்பாகப் பேசுகிறது எனக் கருதலாம். சுவாமிகள்,

*''அறுசமயத் தேவரையும் பூசித்தின்பம்*
*அடைந்தவரும் சிற்சிலர்இவ் வகிலத்துண்டு*
*குறுமுனிவன், வியாசமுனி, சங்கரப்பேர்க்*
*குரவன் அன்னார் சிலராவார்''*

***(நானிலைச் சதகம்)***

''ஆறு சமயமும் போற்றின சங்கரன்'' என மொழிவன அவ்விரு வருக்கும் இடையில் உள்ள ஒற்றுமையைப் புலப்படுத்தும்.

### *சமரச நோக்கில் இறைநெறி*

வண்ணச்சரபர் தம் வாழ்வியலில் கடைப்பிடித்து ஒழுகிய இறைநெறி சமரசப் போக்குடையதாக விளங்கிற்று. அறுவகைச் சமயத்திற்கும் தெய்வம் ஒன்றே! அத்தெய்வமும் குருவே ஆவார். குருவையும் தெய்வத்தையும் வேறுபடுத்தல் கூடாது. அவ்வாறு குருவைத் தெய்வமாக எண்ணி வழிபட்டால் வாய்மை, நீதி, குலக்கருணை, குற்றமின்மை, தாளாண்மை என்னும் ஐந்தையும் இனிது பெறலாம். நாம் தெய்வத்தை எவ்வுருவில்

வணங்குகிறோமோ அவ்வுருவில் தெய்வம் வந்து நமக்கு அருள் பாலிக்கும்.

*"எவ்வுருவில் யாரொருவர் உள்குவார் உள்ளத்துள்*
*அவ்வுருவாய்த் தோன்றி அருள் கொடுப்பான்"*

***(திருக்கயிலாய ஞானஉலா, 6)***

என்ற சேரமான்பெருமாள் நாயனார் சுட்டும் வழிகாட்டுதல் இங்கே ஒப்பிட்டு நோக்கத்தக்கதாகும். வண்ணச்சரபரின் இறைநெறி சமரச நோக்குடையது; ஆறு சமயத்தாரையும் இணைத்து ஒற்றுமைப்படுத்தும் தூய தொண்டில் மலர்ந்து செழித்ததாகும்.

*"சரியை கிரியையுடன் சார்யோக ஞானப்*
*பரிவு தரும்கருமம் பக்தி - தெரிஞானம்*
*தனைக்கௌ மாரமுறைச் சாத்திரத்தி னிற்பகர்ந்தான்*
*பன்னுதண்ட பாணிப் பரன்"*

***(தி.செ. முருகதாச ஐயா, கௌமார முறை, முன்னுரை)***

# 3

# இலக்கணக்களஞ்சியம்

*"தொல்காப் பியன்ஆம் தூய்மை யாளனும்*
*அறைந்த இலக்கணம் ஐவகை தம்முள்*
*மறைந்தன குறைந்தன மாநிலத்து இந்நாட்கு*
*இன்றி யமையாது இருக்க வேண்டுந*
*ஒன்றிய அறிவால் ஊகித் துணர்ந்தே*
*உறுமியல் பலவாய் உற்றகுத் திரத்தால்*
*அறுவகை இலக்கணம் அருளிச் செய்தனன்"*

***(அட்டாவதானம் பூவை. கலியாணசுந்தர முதலியார் சாற்றுகவி, அறுவகை இலக்கணம்)***

### *தமிழிலக்கண வளர்ச்சி*

*"கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளொடு*
*முன்தோன்றி மூத்த குடி"*

***(புறப்பொருள் வெண்பாமாலை, கரந்தைப், 14)***

என்ற பெருமைக்கும் முதுமைக்கும் இடமாக விளங்குவது நம் தமிழ்மொழி. இலக்கியச் செழுமைக்கும் வளத்திற்கும் களம் அமைத்து நற்றாயாக நின்றுகண்ணும் கருத்துமாகப் பேணி வளர்ப்பன இலக்கண நூல்களே ஆகும். பழமையான இலக்கண நூலாக நமக்குக் கிடைத்திருப்பது தொல்காப்பியமே. கிடைத்தது தொல்காப்பியம் என்பதால் அதற்குப் பல்லாண்டுகளுக்கு முன்பாகவே இலக்கியங்கள் நம் தமிழில் இருந்திருக்க வேண்டும்.

*"எள்ளினின்று எண்ணெய் எடுபடுதல் போல*
*இலக்கியத்திலிருந்து இலக்கணம் எடுபடும்"*

என்னும் மொழிக்கு ஏற்பத் தமிழில் தொல்காப்பியத்திற்கு முன்பு இலக்கியங்கள் பல இருந்திருக்க வேண்டும்.

"ஒரு நாட்டின் எல்லா ஆதாரத்திற்கும் மொழியே அடிவித்து; பற்றுக்கும் படிப்புக்கும் அறத்துக்கும் மறத்துக்கும் நடைக்கும் படைக்கும் தொழிலுக்கும்

எழிலுக்கும் எண்ணத்துக்கும் எழுத்துக்கும் வணிகத்துக்கும் எல்லா அகப்புற வாழ்வுக்கும் மொழியே மனித மூலம்'' (தலைவர்களுக்கு, ப.127) என்று மூதறிஞர் வ.சுப. மாணிக்கம் கூறுமாறு மொழியைப் பாதுகாப்புச் செய்து தலைமுறை இடைவெளிகளைத் தாண்டி மரபைச் சுட்டிக்காட்டிப் பெரிதும் உதவுவது இலக்கணம் என்பதில் ஐயமில்லை. இலக்கணம் என்பது சொற்களின் ஒழுங்கு முறையையும் பேச்சு வழக்கில் உள்ள நெறியமைதியையும் உணர்த்துவதாகும்.

''தமிழ் இயற்றமிழ், இசைத்தமிழ், நாடகத்தமிழ் என மூன்று பாகுபாடுகளை உடையதென்றும், இம் முத்தமிழுக்கும் முன்னோர் இலக்கணம் கண்டனரென்றும், இன்று கிடைக்காத அகத்தியம் முத்தமிழ் இலக்கணமென்றும் சிலர் கூறுவர். ஆனால் இயற்றமிழிலக்கணமே, இலக்கணம் என்னும் பெயருக்குத் தனியுரிமை பூண்டதாய் விளங்குகிறது. தொல்காப்பியர் இத்தமிழுக்கே இலக்கணம் கண்டார். தொல்காப்பியர் எழுத்து, சொல், பொருள் என மூன்று பிரிவில் இலக்கணங்களைக் கூறியுள்ளார். தொல்காப்பியப் பொருளதிகாரத்தில் பொருள், உவமை, யாப்பு என்பன பற்றிக் கூறுகின்றார். இம்மூன்றையும் பொருளிலக்கணம், அணியிலக்கணம், யாப்பிலக்கணம் என மூன்று தனியிலக்கணங்களாகக் கொண்டால், எழுத்துஞ் சொல்லு மியையத் தொல்காப்பியம் ஐந்திலக்கண நூலாகும். வீரசோழியம், இலக்கண விளக்கம், தொன்னூல் விளக்கம் என்பனவும் ஐந்திலக்கண நூல்களாகும். நன்னூலும் ஐந்திலக்கண நூலாயிருந்ததென்பர் சிலர். தொல்காப்பியர் எழுத்தும் சொல்லும் ஆய்ந்தார்; பொருளும் ஆய்ந்தார். ஆனால் பின்வந்தோர் எழுத்தும் சொல்லுமே சிறப்பாகக் கருதத் தக்கன என எண்ணினர். இந்நிலையில் எழுத்தும் சொல்லும் பற்றி மட்டும் இலக்கணங்கள் தோன்றின. கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டளவில், எழுத்தும் சொல்லும் உணர்த்தும் நேமிநாதம் தோன்றியது. நன்னூல் கி.பி. பதின்மூன்றாம் நூற்றாண்டில் எழுந்தது. இந்நன்னூல் ஐந்திலக்கணமும் உணர்த்துவதெனக் கொண்டாலும், எழுத்தும் சொல்லுமே இலக்கணமேயாயினும் சொல்லிலக்கணமே இலக்கணம் எனக் கருதினர். வடமொழி இலக்கண ஆசிரியர் சொல்லிலக்கணத்தையே வியாகரணமெனக் கொண்டனர். வீர சோழியம், நேமிநாதம், நன்னூல் ஆகிய இலக்கண நூல்கள் சொல்லிலக்கணத்தையே பெரிதும் ஆராய்ந்தன. கி.பி. பதினேழாம் நூற்றாண்டிலெழுந்த பிரயோக விவேகமும், இலக்கணக் கொத்தும் சொல்லிலக்கணம் பற்றியே விரிவாக விளக்கின'', (தமிழ் வரலாற்று இலக்கணம், பக். 23-24)

''தொல்காப்பியம் தந்த அறிவாலும் உந்துதலாலும் பிற்காலத்தில் தமிழில் பலப்பல இலக்கண நூல்கள் தோன்றின. இலக்கிய வரலாறு போல, 'தமிழ் இலக்கண வரலாறு' ஒன்று விரிவாக எழுதக்கூடிய வகையில்

தமிழில் இலக்கண நூல்கள் காலந்தோறும் தோன்றின'' (தொல்காப்பியர், ப.11) என்று பேராசிரியர் தமிழண்ணல் கூறுவார். காலந்தோறும் ஏற்பட்ட இலக்கிய வளர்ச்சி, மொழி வளர்ச்சி, இவற்றில் ஏற்பட்ட மாற்றங்கள், புது முயற்சிகள் தமிழ் இலக்கண நூல்களின் வளர்ச்சிக்கு வித்திட்டு வந்துள்ளன.

*''பழையன கழிதலும் புதியன புகுதலும்*
*வழுவல கால வகையி னானே''*

**(நன்னூல், 462)**

என்பது பவணந்தி முனிவரின் கூற்று. காலந்தோறும் ஏற்பட்டுள்ள மாற்றங்களை ஏற்று இலக்கண நூல்கள் தோன்றியமையினை எண்ணும் போது தமிழ்மொழி உயிர்ப்புத் தன்மை உடையதாக விளங்குகிறது. தமிழ்மொழி மாற்றங்களையும் புதுமைகளையும் பழந்தமிழ் மரபுகளின் அடிப்படையிலேயே உள்வாங்கிக் கொண்டு ஏற்று வளர்ந்து வந்துள்ளது. இதனை அடிப்படையாகக் கொண்டே வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் பல்லாயிரம் பாடல்கள் பாடினாரேனும் தம் காலம் வரையிலும் (19-இன் இறுதிவரை) ஏற்பட்டுள்ள மாற்றங்களை நாடக வழக்கு, உலகியல் வழக்குகளின் துணையுடன் புதுமையான அறுவகை இலக்கணம், ஏழாம் இலக்கணம், வண்ணத்தியல்பு என்னும் மூன்று இலக்கண நூல்களை இயற்ற முன்வந்தார்.

*''எழுத்து சொல்பொருள் யாப்புஅணி எனத்திகழ்*
*இவற்றுடன் இவைதம்மாற*
*பழுத்து மாமணம் கமழ்தரு புலமையும்*
*பகர்வது குறித்துள்ளேன்*
*வழுத்தும் மங்கலம் அறியநீ யென்னது*
*வாக்கில் வந்து அருள்இன்னே*
*கொழுத்து உலாவிய வரிஉடல் பூரம்மேல்*
*கொண்டுள குலமாதே''.*

**(அறுவகை இலக்கணம், பொதுப்பாயிரம், 4)**

எழுத்து, சொல், பொருள் என்று மூன்றாக இருந்த தமிழ் இலக்கணம், யாப்பு, அணி இரண்டும் சேர ஐந்திலக்கணமாகப் பதினெட்டாம் நூற்றாண்டு வரை வளர்ந்து செழித்திருந்தது. ஆயின் வண்ணச்சரபரோ புலமை யிலக்கணத்தையும் ஒரு கூறாகச் சேர்த்து ஆறு இலக்கணப் பிரிவு களாக்கினார். புலமைக்கு என்று தனியானதொரு இலக்கணப் பிரிவு இல்லாமையை உணர்ந்து ஆறாவதாக மரபுவழி வந்த ஐந்திலக்கணக் கூறுபாட்டை ஆறாக மாற்றியமைத்து இலக்கணம் வகுத்தார். ''சுவாமிகள் அருளிய 'அறுவகை இலக்கணம்' என்ற நூல் தமிழ் இலக்கண வரலாற்றில் ஒருவழி நூலாகவோ சார்பு நூலாகவோ கொள்ளப்பெறுந் தன்மை யுடையதன்று; இது ஒரு முதல் நூலே என்று சுவாமிகளின் அருள்வாக்கு

அமைகின்றது'' என்று பேராசிரியர் வை. இரத்தினசபாபதி அறுவகை இலக்கண (இரண்டாம் பதிப்பு 1978) முன்னுரையில் கூறுவது இதன் தன்மையைத் துலக்கிக் காட்டும்.

### *அறுவகையிலக்கணப் பதிப்புகள்*

அறுவகை இலக்கணம் மூலம் மட்டும் பின்னிணைப்பில் ஏழாம் இலக்கணத்தோடு 1893-ஆம் ஆண்டு தஞ்சையைச் சார்ந்த ப.வெ.வெங்கட் ராமராஜா என்பவரால் பதிப்பிக்கப்பட்டது. பேரூர்த் தமிழ்க்கல்லூரியின் வெள்ளிவிழாவை ஒட்டி 1978-ஆம் ஆண்டு அறுவகை இலக்கணம் மூலம் மட்டும் மறுபதிப்புச் செய்யப்பட்டது. பின் தஞ்சைத் தமிழ்ப்பல்கலைக் கழகச் சுவடியியல் துறைசார்பில் புலவர் திரு.ப.வெ. நாகராசன் என்பாரின் உரையுடன் 1991- ஆம் ஆண்டு திருந்திய பதிப்பாக வெளியிடப் பெற்றது

### *அறுவகை இலக்கணத்தின் அருமையும் பெருமையும்*

இந்நூல் எழுத்திலக்கணம் தொடங்கிப் புலமையிலக்கணம் வரை ஆறு பெரும் பிரிவுகளை உடையதாகும். பாயிரம் 12 பாடல்களும் நூலில் 786 நூற்பாக்களும் உள்ளன. இந்நூலைச் சுவாமிகள் திருநெல்வேலியில் திருவுருமாமலை எனப்படும் குறுக்குத்துறை முருகன் திருக்கோயிலில் அரங்கேற்றம் செய்தார்.

*''ஆறு வகைஎன்று இலக்கணம் பாடி அரியதமிழ்த்*
*தேறுநர் போற்றுஉரு மாமலைக் கோவில்முன் செப்பியதால்*
*வீறுசமய நெறிஆறு உடையமெய் வேதமொழி*
*கூறும் அவர்கள்எல் லாம் இகழாதுகைக் கொள்வதுண்டே''*

**(*அறுவகை இலக்கணச் சிறப்புப்பாயிரம்,8*)**

அறுவகை இலக்கணத்தில் எழுத்திலக்கணத்தில் சுவாமிகள் 247 தமிழ் எழுத்துக்களின் வரிவடிவையும் அவற்றின் பிறப்பினையும் குறித்துப் பேசக் காண்கின்றோம். சான்றாக, அகர வடிவம் பற்றிய நூற்பாவைக் காண்போம்;

*''கிளிமுகம் போலச் சுழித்துக் கீழ்க்கொணர்ந்து*
*இடப்பால் நீட்டி மேல்வளைத்து இடைவெளி*
*அமைதர வலத்துஈர்த்து அம்முகம் அடங்க*
*மேல்ஈர்த்து அம்முறை கீழும் ஈர்த்தல்*
*அகரக் குறியாம்......''*

**(*அறுவகை. 7*)**

பிற இலக்கணிகள் சில எழுத்துகளின் வரிவடிவம் மட்டுமே கூறியிருக்கச் சுவாமிகள் எல்லா எழுத்துக்களுக்கும் வரிவடிவம் கூறியதன்

நோக்கம் புதுமையாகக் கூறவேண்டும் என்பதற்காக மட்டும் இல்லை; தொன்றுதொட்டு வருகின்ற ஏட்டுச்சுவடியில் எழுதிவரும் மரபு மாறிவிடக் கூடாது என்பதும், ஆங்கிலம் போல் நான்கு வரிவடிவங்கள் தமிழில் தோன்றிவிடக் கூடாது என்பதுமே! மரபுவழித் தமிழ் எழுத்து வரிவடிவைக் காக்கவேண்டும் என்னும் இவர்தம் காப்புணர்ச்சி நமக்கு இதனால் புலனாகிறது. எழுத்திலக்கணப் பகுதியில் தமிழ் எண்கள் குறித்தும் சுவாமிகள் குறிப்பிடுகிறார். கீழலகு, மேலலகு, நடுவலகு, அளவலகு என்று பகுத்துக் கொண்டு அவற்றை எழுதும் மரபையும் ஆறு நூற்பாக்களில் சொல்கிறார். பிறர் எல்லாம் நேர் நிரை பற்றி யாப்பிலக்கணத்தில் கூறியிருக்கவும், வண்ணச்சரபர் இது சொற்களின் அமைப்பை அடிப்படையாகக் கொண்டது என்று கருதிச் சொல்லிலக்கணத்தில் அசைகளைக் குறித்துப் பேசியுள்ளார்.

''அகமும் புறமுமாய் எழுதிணை பற்றிக் களவு, கற்பு, என்று வெட்சி, வஞ்சி முதலியனவாகவும் உரைக்கும் பொருள் இலக்கண மரபு பண்டைய இலக்கிய மரபாகும். சுவாமிகள் வகுத்துரைக்கும் பொருளிலக்கணமோ மக்களின் நடைமுறை வாழ்வினை மையமாகக் கொண்டு விளக்கும் புதுமுறையில் அமைந்த பொருளிலக்கணமாகும்'' என்கிறார் பேரா.மு.சண்முகம்பிள்ளை. அறுவகை இலக்கணத்தில் சுவாமிகள் பொருளிலக்கணப் பிரிவில் மகளிர்தம் அடிமுதல் முடிவரையுள்ள உறுப்பு வருணனை பற்றி விளக்குகின்றார். தொல்காப்பியர் கூறியுள்ள ''காமஞ் சான்ற கடைக்கோட் காலை''(தொல்.1138) என்ற நூற்பாவின் கருத்தைச் சிறிதுமாற்றி இவர்.

*''பிறவா வீடேபெறமுயன் றிருப்பார்க்கு*
*உடம்பும் புறமென உரைத்தனர் உணர்ந்தோர்''*

***(அறுவகை. 386)***

எனச் சமயத் தத்துவங்களோடு இணைத்துக் குறிப்பிடுவார். இது,

*''மற்றும் தொடர்ப்பாடு எவன்கொல் பிறப்பறுக்கல்*
*உற்றார்க்கு உடம்பும் மிகை''*

***(திருக்குறள், 345)***

என்பதன் அடிப்படையில் அமந்துள்ளமை கண்கூடு. உயிர் அகப்பொருள், உடம்பு புறப்பொருள் என்னும் பொருளில் இவர் கையாண்டுள்ளார். மேலும் இவர் அகப்புறப்பொருள் நிலை என்ற பிரிவில் பெரும்பாலும் தடத்தலட்சணம் பற்றியும் முத்தி பற்றியும் கூறுகின்றார். இதுவும் சமய உண்மைகளை அடிப்படையாகக் கொண்டு இயற்றப்பட்ட பிரிவு எனலாம்.

யாப்பிலக்கணத்துள் சுவாமிகள் இயலிசைத் தமிழியல்பு, நாடகத் தமிழ் நிலை, வண்ணவியல்பு, மோனையியல்பு, எதுகையியல்பு, நாற்கவி

யியல்பு, பனுவலியல்பு என ஏழு உட்பிரிவுகளில் யாப்பிலக்கணத்தைக் கூறியுள்ளார். இது யாப்பிலக்கணங் கூறும் முன்னைய நெறிகளிலிருந்து சிறிது விலகிச் செல்கின்றது. அசை, சீர்கள், பற்றிச் சொல்லிலக்கணத்தில் கூறிவிட்டமையால், இங்கு இவர் நேரடியாகப் பா, பாஇனங்கள் பற்றிக் கூறப்புகுந்து விடுகிறார். எதுகை, மோனை அல்லாத பிற தொடைகள் இங்கு கூறப்பெறவில்லை. வண்ணப் பாடல்களுக்குச் சுவாமிகளே முதன்முதலில் தெளிவான இலக்கணம் வகுத்துரைக்க எண்ணியமை சிறப்புக் கூறாகும். பிற இலக்கணிகள் நிலைமண்டிலம் என வழங்குவதை இவர் நேரிசை என்கிறார். முதலிலிருந்து இறுதிவரை நேராக ஒரே தன்மையில் செல்லும் இசையை உடைய பா நேரிசையாசிரியப்பா எனக் கூறுகிறார். இதற்குச் சான்று இவர் இயற்றியுள்ள 'முத்தமிழ்ப் பாமாலை' , 'குமாரபுரி மும்மணிக்கோவை' போன்ற நூல்களில் காணமுடிகின்றது. ஆசிரியவிருத்தம் பற்றிச் சிறிது விரிவாகவே பேசியுள்ளார். இசைத் தமிழ், நாடகத் தமிழ் இவற்றுக்குத் தனித்தனி இலக்கண நூல்கள் தமிழில் முன்பு இருந்தன. அவை முழுவதுமாக நமக்குக் கிடைத்தில. மேலும் இவற்றின் இலக்கணங்களை முன்னையோர் யாப்பிலக்கணத்தில் கூறாமலிருக்கச் சுவாமிகள் அவற்றிற்கான இலக்கணங்களையும் இங்கே கூறியுள்ளமை புதுமையாகும். பல்லவி, அநுபல்லவி, சரணம், இவற்றைத் தாளம் தவறாமல் இயற்றி அப்பாடலில் இறை வணக்கமாகிய பேரின்பத்தைக் கூறினால் 'கீர்த்தனை' என்றும், உலகியற் காதலாகிய சிற்றின்பத்தைச் சொன்னால் 'பதம்' என்றும் புலவர்கள் கூறுவர் என்று நாடகத்தமிழ் நிலையுள் இவர் கூறுவது புதுமரபாகும். வண்ணத்தின் இலக்கணக் கூறுகளையும் யாப்பிலக்கணத்துள் சுருக்கமாகக் கூறுகிறார். விரிவு 'வண்ணத்தியல்பு' என்ற நூலில் கூறப்பட்டுள்ளது. நாற்கவி இயல்புகளைக் கூறும் சுவாமிகள் பட்டினத்தடிகள், வில்லிபுத்தூரார், அருணகிரிநாதர் போன்ற அருளாளர்களின் பாடல்களைக் கொண்டு விளக்குகின்றார். இலக்கணம், இலக்கியம், சோதிடம், நீதி, மருத்துவம், சிற்பம், போன்றவற்றைத் தெரிவிக்கும் அறிவு நூல்கள் 'நூல்' எனப்படும்; கடவுள், மன்னன், வள்ளல் ஆகியவர்களைப் போற்றிப் பாடப்படும் பனுவல்கள் யாவும் 'பிரபந்தம்' என்று பெயர்பெறும் என்றும்(அறுவகை, 517) சுவாமிகள் விளக்குவார். பிற்காலப் பாட்டியல் நூல்கள் கூறும் சிற்றிலக்கிய இலக்கணங்களுள் சிலவற்றை இவர் இப்பகுதியில் கூறக் காண்கிறோம். மொத்தம் 109 நூற்பாக்களில் அணியிலக்கணத்தை இவர் விளக்கிச் செல்கிறார். எல்லா வகை அணிகளையும் இவர் இங்கே கூறவில்லை. ஐந்து வகைப் பிரிவுக்குள் அணியிலக்கணத்தை வண்ணச்சரபர் எடுத்துரைக்கின்றார்.

*"அணிநிலை அளப்பரிது; ஆயினும் உவமை,*
*உடைமை, கற்பனை, நிகழ்ச்சி, ஆக்கமென்று*
*ஐவகை வாய்பாடு அறைகுவம் அன்றே"*

**(அறுவகை. 535)**

என்பது அந்த நூற்பா

இந்நூலின் இறுதியாக அமைவது புலமையிலக்கணம் ஆகும். இப்பகுதி 144 நூற்பாக்களை உடையது. முன்னைய இலக்கண நூலோர் சொல்லாத ஒன்று இது. புலமைக்கு இவர்,

*"அறியும் தன்மையைப் புலமை ஆம்எனப்*
*பற்பல பெரியோர் பகர்ந்தனர் அன்றே"*

**(அறுவகை.644)**

என்று விளக்கம் தருகிறார். சுவாமிகள் தேற்றம், தவறு, மரபு, செயல்வகை என நான்கு உட்பிரிவுகளில் புலமையிலக்கணத்தை விளக்குகின்றார்.

மேற்கண்ட 144 நூற்பாக்களில் சுவாமிகள், புலமை பெற விழைவோர் பாக்கள் இயற்றும் இலக்கணத்தைப் படிக்கவேண்டிய முறை பற்றியும் நாடகம் முதல் காவியம் வரை இலக்கியங்களைப் படைப்பதற்குரிய புலமைச் செழுமை பெறுவதற்குரிய பயிற்சி போன்ற நுட்பங்களையும் இதன்கண் விரிவாக இயற்றியுள்ளார்.

'தேற்றவியல்பு' என்பது ஒருவன் புலவனாக ஆவதற்கு உரிய பண்புகளை (4) வரிசைப்படுத்துவது. 'தவறியல்பு' என்பதனுள் சுவாமிகள், புலவர்களுக்குப் பொருந்தாமல் இருக்கவேண்டிய(35) தன்மைகளைக் கூறுகின்றார். 'புலமையிற் கரவுதீர் நலம்'(68) குறித்து மொழிவது மரபியல்பு. புலமையை எவ்வாறு செயற்படுத்துவது என்பது குறித்துச் 'செயல்வகையியல்பு' கூறும்.

## *புலமை பெறப் படிநிலை*

புலமை பெற விரும்புவோர் பாக்களின் இலக்கணத்தைக் கற்க வேண்டிய படிநிலையை-வரிசை முறையைச் சுவாமிகள் தேற்றவியல்பில் தெளிவுறுத்துகின்றார். புலமை நலம்பெற விரும்பும் ஒருவன் கற்றுயர்ந்த சான்றோரிடம் பயிற்சி பெறுதல் நன்று என்றும், எழுத்திலக்கணம் முதலாக அணியிலக்கணம் ஈறாக எல்லாவற்றையும் முன்னதாகவே கற்றுத் தெளிதல் கடன் என்றும் கூறுகின்றார். நூலின் துணையை விடவும் செழுந்தமிழ்க் கவியினுக்குத் தெய்வத்துணை நூறு பங்குஉயர்வை நல்கும் என்கின்றார். நுண்மாண் நுழைபுலம் மிக்க புலவர்களுடைய பகைமையை ஒருவன் தேடிக் கொள்ளக்கூடாது. பிறர் குறையே கூறித் திரிவோர் கூறுகின்ற குறைகளைக் கண்டு அஞ்சுதல் கூடாது என்றும், உண்மைப் புலவர்கள்

எடுத்துரைக்கும் கருத்துகளை ஏற்றுக்கொள்வது ஒருவனுக்கு நலம் பயக்கும் என்றும் சுவாமிகள் கூறுவார்.

சுவாமிகள் கவிதையியற்றும் ஆற்றலும் சிந்தனையும் ஒருவனுக்குக் கைவரும் முன்பே சித்திரக் கவிபாட முனைவது தீமையாய் முடியும் என்பார். நாடகம் இயற்றிப் பின் கொச்சகம் இயற்றுதல் என முறையாகப் பயின்றால் கவிதை இயற்றும் பயிற்சி இனிது கைகூடும் என்பதும் அவர் கருத்து.

விருத்தப்பாவைக் கற்றுத் தேர்வதற்கு முன்பு ஒருவன், கட்டளைக் கலித்துறை இயற்ற முனைதல் பிழையாகும் ஆசிரியப்பாவை அறிந்து பின் கலிப்பா, பின் வெண்பா இயற்ற எண்ணுவது தகும் வெண்பாவை அறிந்து தெளியும் முன்பு சிக்கல் நிறைந்த 'வண்ணம்' பாடுதல் முறையன்று. இவ்வாறு பாக்களை இயற்றும் பாங்கினை அறிந்த பின்பு ஒருவன் இலக்கியம் இயற்ற வேண்டும். பிரபந்தம் இயற்றித் தேறிய பின்னரே ஒருவன் காவியம் இயற்ற முனைவதும், காவியம் இயற்றுகின்ற ஆற்றல் கைவந்த பின் பல்வேறு பனுவல்களை இயற்றுவதும் முறையாகும் என்று சுவாமிகள் கூறியுள்ளார். செய்யுள் இலக்கணம் கற்கவும் கவிதைகள் இயற்றவும் உரிய பயிற்சிகளை முறைப்படுத்திக் கூறியுள்ளார். இவ்வாறு சுவாமிகள் முறைப்படுத்தியமைக்கு,

*"........பல்விதமாம்*
*ஆசுமுதல் நாற்கவியு மட்டாவ தானமுஞ்சீர்ப்*
*பேசுமியல் பல்காப் பியத்தொகையும்-ஓசை*
*எழுத்துமுத லாமைந் திலக்கணமும் தோய்ந்து*
*பழுத்த தமிழ்ப்புலமை பாலித்-தொழுக்கமுடன்"*

***(கந்தர் கலிவெண்பா, 117-121)***

என்று குமரகுருபர அடிகள் கூறியுள்ளமையும், நால்வகைப் புலமை, நால்வகைக் கவிதை குறித்துக் 'குவலயானந்தம்' கூறியுள்ளமையும் அடித்தளமாக அமைந்திருக்க வேண்டும்.

புலமைத்திறம் பற்றிப் பேச வந்த குவலயானந்தம்,

*"கவியொடு, கமகன், வாதி, வாக்கி*
*எனநால் வகைஆம் புலமைத் திறமே"*

***(குவலயானந்தம், சித்திர இயல்,3)***

என்று வகைப்படுத்துகின்றது. இவற்றுள் கவி என்பவன் ஆசு, மதுரம் சித்திரம், வித்தாரம் எனவரும் நால்வகைப் பாக்களைப் பாடுவோனாவான். இவ்வாறு முன்னோர் கூறிச் சென்ற கருத்துகள் சுவாமிகள்,

புலமையிலக்கணத்தை உருவாக்க உந்துதலாக இருந்திருக்க வேண்டும். ஒருவன், பாக்களை இயற்றும் திறம் பெறுவதற்கு உரிய படிநிலையை -முறையை-பயிற்சியை வகுத்துரைத்தால் புலமை சிறப்பாக வளரும் என்பது சுவாமிகளின் புலமைக் கொள்கை எனலாம்.

காலத்தில் பெய்கின்ற மழையைப் போன்று புதிய கவிகள் இயற்றுவதும், கவிஞன் எதிர்காலவுணர்வுடன் அவன் சொன்னவாறு நடைபெறுதலும் பொருந்தினால் அக்கவிஞன் தெய்வத் தன்மைப் புலமை பெற்றவன் என்கிறார் சுவாமிகள். இத்தகைய அருள் வலிமை கைவரப்பெற்ற புலவர்கள் பொருளை விரும்பிப் புலமையை விற்பது இழிவு என்று சுவாமிகள் கூறுகின்றார்.

*'புலமையி லேநிமிர்ந் தற்பரைப் போற்றிப் பொதுமகளைக்*
*குலமையி லேகுயி லேகொடி யேயென்றுங் கூர்விழியாம்*
*பலமையி லேயென்றும் பாடாமற் பாடுமின் பாவலர்காள்*
*நலமையி லேய்முத்த மார்சோலை மாமலை நம்பனையே''*

**(அழகர் அந்தாதி, 87)**

என்று அழகிய மணவாளதாசர், தாம் வாழ்ந்த காலத்திலிருந்த புலவர்களின் பேதைமையைச் சுட்டிக்காட்டித் திருத்த முனைந்தார். அவர் வழியில் வந்த தண்டபாணி சுவாமிகளும் விலை மதிக்க இயலாத கவிதையினை விலை யாக மாற்றிய கவிஞர்களைத் திருத்த வேண்டும் என்ற பெரு நோக்குடன் புலமையிலக்கணம் படைத்திருக்க வேண்டும். கவிதை என்பது ஓர் உயர் வான பொருள்;அதனைக் காசுக்கு விற்பது இழிவு; கவிதைப்படைப்பு காலத்தை வென்று நிற்பது. எனவே புலமை நலம் பெற்றோர் புலமையின் சிறப்பையும் மதிப்பையும் போற்றினால் சமுதாயம் பயனடையும். கவிதை யின் சமுதாயப் பயன்பாடு சுவாமிகளின் புலமைக் கொள்கையாகின்றது.

### புலமைக்கு ஆகாதன

புலமையிலக்கணத்தின் இரண்டாவது பிரிவில்(தவறியல்பு) சுவாமிகள் புலமைக்கு ஆகாத தன்மைகளை 36 நூற்பாக்களில் கூறுகின்றார். புலவர்கள் சிலர் அறிவு முதிர்ச்சி பெறும் முன்பே செருக்குற்றுத் திரிவர். இதனை எண்ணிய சுவாமிகள்,

*''எள்ளிடைப் புலமை இசையு முன்னம்*
*நெல்லிடை ஆண்மை நிலவல்லோர் தவறே''*

**(அறுவகை. 6790)**

என்று சுட்டிக் காட்டுகின்றார். தமிழ்ப் புலவர்களுக்குள் இடைக்காலத்தில் நிலவிய பகையுணர்வும் போட்டியுணர்வும் அவர்களுக்குளே

அழுக்காற்றைத் தோற்றுவித்தன. இதனை நன்குணர்ந்த சுவாமிகள், கீழ்வரும் நூற்பாக்களைப் படைத்துள்ளாராதல் வேண்டும்.

*''தேறாப் புலவனைச் சிந்தை நோவப்*
*படுத்தும் பாவலர் பதரனை யாரே''*

***(அறுவகை, 682)***

என்றும்,

*தோல்வி யேற்றுத் தொழுமொரு புலவன்*
*காது கொய்தலுங் காரிய மன்றே''*

***(அறுவகை 685)***

என்றும் கூறுவன சான்று.

புலவர்களாக மதிக்கப்பெறும் தகைமை படைத்தவர்கள் பெருந்தன்மையும் பெருநோக்கும் உடையவர்களாக உருவாக வேண்டும் என்னும் சுவாமிகளின் கொள்கை இவற்றால் வெளிப்படுகின்றது.

### வண்ணத்தியல்பு பதிப்புகள்

தண்டபாணிசுவாமிகளால் காலத்தின் வளர்ச்சிப்போக்கிற்கு ஏற்ப இயற்றப் பெற்ற நூல்' வண்ணத்தியல்பு' ஆகும். வண்ணம் குறித்துப் பேசும் முதல் இலக்கண நூல் இதுவேயாகும். புதுமைச் சிறப்புடைய இந்த நூலைப் பேரூர் அடிகளார் திருமடத்தின் வெளியீடாக 1976-இல் வெளி யிட்டுள்ளார். அதன் பின்பு 1980-ஆம் ஆண்டில் புலவர் திரு. தா.மா. வெள்ளைவாரணம் 'வண்ணத்தியல்பு' மூலநூலை வெளியிட்டார். இந்நிலையில் 1987- இல் புலமை வெளியீடாகப் மேனாள் துணைவேந்தர் பேராசிரியர் இ.சுந்தரமூர்த்தி உரையுடன் இந்நூலைத் திருந்திய பதிப்பாக வெளியிட்டுள்ளார்.

### வண்ணங்களின் வளர்ச்சி

தொல்காப்பியர் வண்ணங்கள் இருபது என்பார். யாப்பு, வண்ணம் இவ்விரண்டிற்கும் உள்ள வேறுபாட்டை நச்சினார்க்கினியர், யாப்பு பொருள் நோக்கி வரும்; வண்ணம் ஓசை நோக்கி வரும்; யாப்பு அடியிறந்து பொருள் கொள்ளாது வரும்; இது அடியிறந்து வரும் என்று வேறுபடுத்திக் காட்டுவார். இவ்விருபது வண்ணங்கள் மேலும் விரிவாகிப் பிற்காலத்தில் நூறு வண்ணங்களாயின. 'யாப்பருங்கலவிருத்தி' நூறு வண்ணங்கள் குறித்து விரித்துரைக்கின்றது. மேற்கண்ட அமைப்பிலிருந்து வண்ணமுறை சந்தக் குழிப்புப் படியே ஒலி அமைந்து வருவதைச் சுட்டும். சந்தக் குறிப்புகள் தத்த, தாத்த, தந்த, தாந்த, தன, தான, தன்ன, தய்ய என

எட்டு என்பர். இவ்வெட்டின் நீட்சி தத்தா, தாத்தா, தந்தா, தாந்தா, தனா, தானா, தன்னா, தய்யா என அமையும்; ஆகப் பதினாறு ஆகும். இவற்றுடன் ன, னா என்பன தனித்து வந்தாலும் த், ம், என்னும் மெய்களுடன் சேர்ந்து வந்தாலும் அல்லது தனித்து வந்தாலும் அவை அரைச் சந்தம் எனப்படும். சான்றாக தந்த என்பது ஒரு சந்தம், இதுவே தந்தன, தந்தம் என வரின் ஒன்றரைச் சந்தம் எனக் கூறப்படும்.

*சந்தங்கள் சில சேர்தல்-துள்ளல்*
*பல துள்ளல்கள் சேர்தல்-ஒரு குழிப்பு*
*மூன்று குழிப்பும் ஒருசிறுதொங்கல்துள்ளலும்சேர்ந்தது-கலையாகும்.*
*சில கலைகள் இரண்டு தொங்கல் துள்ளல் கொண்டு வரும்.*

**சந்தப்பாக்கள் 5 வகை**

1. கலை வண்ணம் - அண்ணாமலையார் வண்ணம்
2. வகுப்பு வண்ணம் - வேல் வகுப்பு, புய வகுப்பு
3. உடற்கூற்று வண்ணம் - பட்டினத்தாரின் உடற்கூற்று வண்ணம்
4. வண்ண விருத்தம் - அருணகிரிநாதரின் திருப்புகழ்
5. சந்த விருத்தம் - வில்லிபுத்தூராரின் வண்ணம்

வண்ணம் எழுத்துகளின் அடிப்படையில் அதாவது வர்ணம் என்ற அடிப்படையில் இப்பெயர் பெற்றிருக்கலாம் எனக் கருதுகின்றனர். வண்ணப்பா பாடும் ஆற்றல் பெற்ற புலவர்கள் ஆசு, மதுரம் எனப்படும் நாற்கவிப் புலவர்களினும் மேலானவர்கள் என்று கருதப் பெறுவர். வண்ணம் பாட இயலாதார் பெற்றுள்ள தமிழ்ப் புலமையால் பயன் ஏதும் இல்லையாம்!

*''வண்ணச் செந்தமிழ் வளமை ஓர்ந்தோர்*
*நால்வகைப் புலவர் தம்முள் ஏறே''*

***(வண்ணத்தியல்பு, 97)***

என்பது சுவாமிகளின் கருத்து. தண்டபாணிசுவாமிகள் 'வண்ணமஞ்சரி' என்ற நூலில் வண்ணப்பாக்கள் பல பாடியுள்ளார்; அருணகிரிநாதர் பாடியுள்ள வண்ணங்களில் முன்பகுதி வேண்டுகோளாகவும், பிற்பகுதி முருகப் பெருமானுடைய வாழ்த்தாகவும் அமையும். வில்லிப்புத்தூரார் பாடிய வண்ணத்தில் - இராமாயணத் திருப்புகழில்-முன் பகுதி வேண்டு கோளாகவும் பின்பகுதி இராமசரிதை கூறுவதாகவும் அமையும் என்பர் ஆன்றோர். வண்ணச்சரபரின் புலமையைச் சமகாலத்தவராகிய அட்டாவதானம் பூவை கலியாணசுந்தர முதலியார்; வண்ணக்களஞ்சியம் நாகலிங்க முதலியார் போன்றோர் பெரிதும் புகழ்ந்து போற்றியுள்ளனர்.

மேலும் சுவாமிகளின் 'வண்ணத்தியல்பு' நூலின் கருத்திணை உள்வாங்கிக் கொண்டு புதுச்சேரிப் பேராசிரியார். ம.ரா.பூபதி என்பார். 'குமார பூபதீபம்'(1977) என்னும் எளிமையான வண்ண இலக்கண நூலை இயற்றி வெளியிட்டுள்ளமை இவண் அறியத்தகும்.

*"ஆசு வலவர்க்கும் வண்ணம் புலியாம்"*

என்பது ஔவையாரின் அருந்தமிழ் வாக்கு.

## *ஏழாம் இலக்கணம்*

முன்னர்க் கூறிய அறுவகை இலக்கணம் மூலப்பதிப்புடன் (1893) இவ்வேழாம் இலக்கணம் மூலத்தை மட்டும் இணைத்துப் பதிப்பித்துள்ளனர். இந்நூலில் அறுவகை இலக்கணத்துள் கூறாமல் விடுபட்ட இலக்கணவிதிகள் கூறப்பட்டுள்ளன. வண்ணச்சரபர் இந்நூலில் தவவியல்பு (9நூற்பாக்கள்) குறித்துப் பேசுவதனால் இதற்கு ஏழாம் இலக்கணம் எனப் பெயரிட்டனர் போலும்,

*"வண்ண விலக்கணஞ் சொன்ன பின்னாறு வகையது சொற்*
*றெண்ணருஞ்சீர் திகழேலா மிலக்கணமீ துரைக்கத்*
*தண்ணளிப் பாரதியுங் கணநாதனுஞ் சண்முகனனுங்*
*கண்ணனு மீசனமெல்லோனு மற்றொன்றுங் காப்பெமக்கே!"*

என்பது இந்நூலின் பாயிரம். அறுவகையிலக்கணத்தின் ஒழிபியல் என்று இதனைக் கூறலாம். இவர்தம் சமயச்சார்பின் விளைவே ஏழாம் இலக்கணம் கூறும் தவவியல்பு எனக் கருதலாம்

*"கற்றதனால் ஆய பயனென்கொல் வாலறிவன்*
*நற்றாள் தொழாஅர் எனின்"*

**(திருக்குறள், 2)**

என்னும் குறள்வழியில் தவவியல்பைச் சுவாமிகள் கூற எண்ணினார் போலும்.

## *இலக்கணம் என்னும் மாமருந்து*

வண்ணச்சரபர் தம் காலம் வரை ஏற்பட்டுள்ள மொழி வளர்ச்சி நிலைகளை மாற்றங்களை மற்றும் புது வரவுகளை எண்ணி மேற்கண்ட மூன்று இலக்கண நூல்களையும் இயற்றினார். 'புலமையிலக்கணம்', 'வண்ணத்தியல்பு' போன்ற இலக்கணப் பகுதிகள் தமிழுக்குப் புதிய வரவுகள் என்பதில் ஐயமில்லை.' அவர்தம் பன்முகப்பணிகளில் இம்மூன்று இலக்கணமும் அவருக்குப் பெருமை சேர்ப்பன எனத் துணிந்து கூறலாம்.

*"கற்றோர்க்குத் தெள்ளமுதம் கற்போர்க்குக் கோடிவிழி*
*மற்றோர் மருள்கெடுக்கும் மாமருந்து-கொற்ற*
*முருகதா சக்குரவன் முதறிவாற் சொன்ன*
*இருமூன்று இலக்கணநூ லே"*

**-சிவனணைந்த பெருமாள் முதலியார்**
***சாற்றுகவி, அறுவகை இலக்கணம்,ப.557***

---

# 4
# சிற்றிலக்கியப் பெருஞ்செல்வர்

*"வண்ணச் சரபமகான் தண்ட பாணியென*
*நண்ணவரு மேலோர் நவில்நூல்கள்-எண்ணரிய*
*ஆகும் அவற்றினிது ஆன்பாலும் கற்கண்டின்*
*பாகுமென்பார் கற்றுணர்பண் பார்"*
***-புலவர் தி.மு.சங்கரலிங்கம், பேரொலியலந்தாதிப் பதிப்புரை***

***சமயச்சார்பு***

தமிழ் இலக்கியங்களில் பெரும்பகுதி சமயம் சார்ந்தும் சமயத் தொடர்பு மிகவுடையனவாகவும் அல்லது சமயப் பின்புலத்துடனும் அமைகின்றன என்பர் ஆராய்ச்சியாளர். தமிழ் மொழியைப் பக்தி மொழி என்றுகூறுவதும் இங்கே எண்ணத் தகுவதாகும். "தமிழ் மொழியின் சிறப்பு அதில் தோன்றியுள்ள பக்தியிலக்கியங்களால் பரவியுள்ளது எனில் மிகையன்று. சுமார் 15 நூற்றாண்டுகள் தமிழ் இலக்கியத்தின் வரலாறு சமயங்களின் பிடியிலேயே இருந்ததும் வெளிப்படை. உலகப்பெரும் சமயங்கள் எல்லாம் பணியாற்றியுள்ள பெருமை தமிழுக்குரியது" என்று ஆய்வாளர் முனைவர் ச.சிவகாமி( பத்தொன்பதாம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கியம்,ப.19)கூறுவது உண்மை, வெறும் புகழ்ச்சியில்லை!

கி.பி. 6-ஆம் நூற்றாண்டளவில் வாழ்ந்த காரைக்கால் அம்மையார், அவரைத் தொடர்ந்து ஆழ்வார்களும் நாயன்மார்களும் இறைவனைப் பாடும் பாடல்கள் வாயிலாகச் சிற்றிலக்கிய வகைகளுக்கு நல்ல அடித்தளம் அமைத்துப் போயினர். சைவ, வைணவத் தோத்திர நூல்களில் சிற்றிலக்கிய வகைமை சார்ந்த பாடல்களையும் நூல்களையும் மிகுதியும் காணமுடிகின்றது.

***இலக்கிய வடிவங்கள்***

"நாலாயிரமும் திருமுறைகளும் பாடற்பொருள் அளவிலேயே இயைந்து செல்கின்றன என்பதன்று; அவற்றின் இலக்கிய வடிவங்களும்(செய்யுள் வகைகள்) பெரிதும் ஒன்று போலவே உள்ளன.

தெய்வத்தைப் பாடிய பாடல்கள் சங்க இலக்கியத்திலுண்டு. ஆயின் பக்தி இலக்கியங்கள் பக்தி இயக்கத்தின் விளைவாகத் தோன்றிய போதே புதிய புதிய சிற்றிலக்கிய வடிவங்கள் தோன்றின எனல் வேண்டும்'' (பக்தி இலக்கியம், ப.172) என்பது முனைவர் ப.அருணாசலம் என்பாரின் கருத்து. தமிழ்ச் சிற்றிலக்கியங்கள் பல, படிநிலை வளர்ச்சியில் தோன்றி வளர்ந்தன என்பது ஒப்பிலக்கிய வல்லுநர்தம் ஆணித்தரமான கூற்றாகும்.

*''தாவில் நல்லிசை கருதிய கிடந்தோர்க்குச்*
*சூதர் ஏத்திய துயிலெடை நிலையும்''*

***(தொல். 1037)***

எனத் தொல்காப்பியர் இலக்கணம் கூறினர். புறத்திணையில் ஒரு துறையாக இருந்த இது, திருப்பள்ளி எழுச்சியாகப் பிற்காலத்தில் வளர்ச்சி பெற்றுள்ளது. மாணிக்கவாசகர் பாடியருளிய திருப்பள்ளி எழுச்சி இங்கு எண்ணத்தகும்.

*''மண்திணிந்த நிலனும்*
*நிலனேந்திய விசும்பும்*
*விசும்பு தைவரு வளியும்*
*வளித் தலைஇய தீயும்''*

***(புறம்.2)***

என்னும் புறநானூற்றுப் பாடலில் அந்தாதி அமைப்பைக் காண்கின்றோம். இது ''அந்தாதி' என்னும் இலக்கிய வகைமை எழ அடித்தளமாயிற்று எனலாம்.

''அந்தம் முதலாத் தொடுப்பது அந்தாதி'(காரிகை, 17) என்று தொடையும் தொடைவிகற்பமும் பற்றிச் சொல்லும் யாப்பருங்கலக்காரிகை. இதுவும் பதிற்றுப்பத்துள் காணப்படுவதே. இக்கூறு சமய எழுச்சிக் காலத்தில் நாயன்மார்களால் பெரிதும் வரவேற்கப்பட்டுச் சிற்றிலக்கியமாக் உருப்பெற்றது. காரைக்கால் அம்மையாரின் 'அற்புதத் திருவந்தாதி'யும் நாலாயிரத்துள் வரும் முதலாழ்வார்கள் பாடிய திருவந்தாதியும் இங்கே எண்ணத்தகுவன. இவ்வாறு பா, பாவினங்கள் பக்தி இயக்கக் காலத்தில் பல்வேறு சிற்றிலக்கிய வடிவங்களாயின. இப்படிநிலை வளர்ச்சியில் பக்தியுணர்வுடைய அருளாளர்கள் இறைவன் புகழைப் பாடப் பல்வேறு சிற்றிலக்கிய வடிவங்களைத் தேர்ந்து இறையுணர்வுப்பாடல்களை அருளியுள்ளனர்.

### *சிற்றிலக்கியங்களின் எண்ணிக்கையும் பாடுபொருளும்*

பன்னெடுங் காலமாகப் படிப்படியாக வளர்ந்து செழித்து வந்த சிற்றிலக்கியங்களின் இலக்கண வரையறைகளை விளக்கும் நூல்கள்

'பாட்டியல் நூல்கள்' என்று அழைக்கப்பட்டன. பாட்டியல் என்னும் உட்பிரிவு யாப்பியலில் இருந்து கிளைத்தெழுந்த காலம் ஏறத்தாழ கி.பி.12 ஆம் நூற்றாண்டு என ஆய்வாளர்கள் கருதுகின்றனர். பாட்டில் வரும் எழுத்துகளுக்கும் சீர்களுக்கும் சாதி, கணம், நட்சத்திரம் முதலியவற்றை வகுத்துக் கொண்டு பொருத்தம் கூறுவதும், சிற்றிலக்கிய வகைகளுக்கு உரிய இலக்கணம் கூறுவதும் இந்நூல்கள் வழி அறியப்படும் செய்தியாகும். பன்னிருபாட்டியல், வெண்பாப்பாட்டியல், நவநீதப்பாட்டியல், சிதம்பரப்பாட்டியல், பிரபந்த மரபியல், பிரபந்த தீபிகை இனைய பாட்டியல் நூல்கள் பல உள. வண்ணச்சரபரும் தம்முடைய அறுவகை இலக்கண நூலுள் சில சிற்றிலக்கியங்களின் வரையறைகளைக் கூறியுள்ளார். 96 வகைச் சிற்றிலக்கியங்கள் என்று எண்ணிக்கை சொல்லப்பட்டாலும் நானூற்றுக்கும் மேற்பட்ட சிற்றிலக்கியங்கள் தமிழில் தோன்றியுள்ளன. வண்ணச்சரபம் தண்டபாணிசுவாமிகள் பல்வேறு சிற்றிலக்கியங்கள் வாயிலாக ஆறுசமயக் கடவுளர்களையும் போற்றியுள்ளார்.

சிற்றிலக்கியங்களின் பாடுபொருள் பற்றி அறிந்து கொள்வது இங்கு தேவையானதாகிறது. "பத்தொன்பதாம் நூற்றாண்டின் பெரும்பகுதி இலக்கியங்கள் தம்முள் கொண்டிருப்பது பக்திப்பொருளாகும். இதற்குக் காலச்சூழல் அடிப்படைக் காரணம்.

பிரபந்தங்கள் பலவற்றிலும் நாடகம் முதலானவற்றிலும் பக்தி முதன்மை பெறக் காண்கின்றோம். அலங்காரம், துதி, சங்கீர்த்தனம், சந்நிதிமுறை, நாமாவளி, அநுபூதி, திருப்புகழ்,தோத்திரம், இரங்கல், கட்டளை, அட்டகம், லகரி முதலான வகைகள் பக்திப் பொருளையே தம் இலக்கணமாகக் கொண்டுள்ளன என்று கூறுமளவிற்குப் பக்திக்குப் பெருமையளித்துள்ளன. மற்றும் பிள்ளைத் தமிழ், பதிகம், குறவஞ்சி கலம்பகம், மாலை, கும்மி, நாடகம்,தாலாட்டு, சங்கிரகம் போன்றனவும் இப்பொருளுக்கு மிகுதியான இடமளித்துள்ளன. (பத்தொன்பதாம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கியம், ப.35) என்று முனைவர் ச.சிவகாமி கூறுவது இங்கே ஒப்பவைத்து எண்ணத்தகும்.

### *வண்ணச்சரபரின் படைப்புகள்*

கதிரவன், சிவன், சக்தி, திருமால், கணபதி, முருகன், பொதுக்கடவுள் என ஏழு கடவுளர்களையும் தனித்தனியாகவும், இணைத்தும் தண்டபாணி சுவாமிகள் பற்பல பனுவல்களைப் படைத்துள்ளார். சந்தப்பாடல்களைப் பாடுவதில் சுவாமிகளுக்கு மிகுந்த ஈடுபாடு இருந்தது. பத்தொன்பதாம் நூற்றாண்டில் 'வகுப்பு' என்னும் சிற்றிலக்கியம் பாடியவர் இவர் ஒருவரே என்று ஆய்வாளர் குறிப்பிடுவர். இவரால் பாடல் பெற்ற தலங்கள் 222

என்றும், எவ்வகை இலக்கியத்தையும் தம்மால் பாட இயலும் என்று பாடிக்காட்டிய புலமை வீறு கொண்டவர் இவர் என்றும் புகழாரம் சூட்டுவர் அறிஞர். ஏழு தெய்வங்களுக்கும் ஆயிரம் ஆயிரமாக அருந்தமிழ்ச் செய்யுட்களைப் பாடித் தமிழுக்கு அணி செய்தவர் வண்ணச்சரபர். சுவாமிகள் படைத்துள்ள சிற்றிலக்கியங்கள் யாவும் பேரின்பப் பொருளையே பாடுபொருளாகக் கொண்டவை. பல்வேறு இலக்கிய வடிவங்களில் பனுவல்களைப் படைத்தளித்த பான்மை குறித்து அவர்,

*"மும்மணிக் கோவைபல, மாலைபல, அந்தாதி*
*மூவகைய பல,இன் னவா*
*முதுநெறிப் பனுவல்பல, புதுநெறிப் பனுவல்பல*
*முத்தமிழ்ச் சுவை வழாமல்*
*இம்மணிற் புலவர்பலர் மகிழ்வுறக் கொடுத்துளேன்*
*இப்போதும் நுவல்கின்றேன்*
*இன்னமும் பகருவேன் நின்னருள் உரித்தெனக்கு"*

என்று கூறுவதிலிருந்து தெளிவாகின்றது. சுவாமிகள் புதுநெறிப் பனுவல்கள் படைத்தளித்தமையினை,

*"விருந்தே தானும்*
*புதுவது கிழந்த யாப்பின் மேற்றே"'*

**(தொல்.1495)**

என்னும் வனப்பிற்குள் அடக்கலாம். இத்தகைய சிறப்பிற்குரிய பனுவல்களை எல்லாம் சுவாமிகள் முருகப்பெருமானால் அருளப்பெற்ற 'சர்வசாதாரணி' என்ற எழுத்தாணி கொண்டு பனையோலைச் சுவடிகளிலேயே எழுதி வந்துள்ளார். அவர் பாடிய பாடல்களின் எண்ணிக்கை ஒரு இலட்சம் இருக்கும் என்று சுவாமிகளின் பேரர் முருகதாசஐயா அச்சிடப்பட்ட பல நூல்களின் முன்னுரையில் குறிப்பிட்டுள்ளார். இப்போது கிடைத்துள்ள ஏடுகள் பலவும் கோவையில் உள்ள சரவணம்பட்டிக் கௌமாரமடாலயத்தில் பாதுகாக்கப்பட்டு வருகின்றன என்பது நம் வயிற்றில் பால்வார்க்கும் செய்தியாகும்.

### ஆறுமுகனோடு ஊடல்

செந்திலாண்டவன் 16 பிரபந்தங்கள் பாடும் வண்ணம் பணிக்க, இவரும் ஆண்டவன் ஆணையை ஏற்றுப் பாடத்தொடங்கினர். பதினொரு பனுவல்கள் பாடிய பின்பும் கந்தனருள் கிடைக்காமையினால் சுவாமிகள் முருகப்பெருமானுடன் முரண்பட்டுத் தாம் இயற்றியிருந்த நூல்களைத் தண்பொருநை ஆற்றில் கிழித்து எறிந்தாராம். இத்தகவலை அவரியற்றிய குருபரதத்துவ நூலில் பின்வருமாறு கூறியுள்ளார்.'

*"கவிநூறு கொண்டபன் மணிமாலை பாடிநற்*
*கந்தமா லிகைசொ லுங்கால்*
*சவிகற்ப நிட்டையிற் குகன், ஓது மொழியொன்று*
*தவறியத னாற்சி னந்து*
*நவிலுறும் அவற்றொடங்கு உள்ளபல கவிகளையும்*
*நதியிற்கி ழித்து விட்டுப்*
*புவியிலெண் ணறும்ஊர்கள் தொறும்ஏகி எய்த்துஎழிற்*
*பொலிநெல்லை யூரில் வந்தேன்!"*

***(குருபரதத்துவம், திருச்செந்தூர்ச் சருக்கம்,20)***

எஞ்சியிருக்கும் ஏட்டுச் சுவடிகளில் சில ஆயிரம் பாட்டுச் சுவடிகளே பல்வேறு காலங்களில் அச்சிடப்பட்டு வெளியிடப் பட்டுள்ளன. அவற்றுள் சிலவற்றின் பெயர்களை இங்கே முதலிற் காண்போம். வண்ணச்சரபர் வடித்துத் தந்த எண்ணக் குவியல்களாகிய பல்வேறு பனுவல்களின் பட்டியல் பின்னிணைப்பில் இணைக்கப்பட்டுள்ளது. அவற்றுள் சில வருவாறு:

'படைவீட்டுப் பதிகங்கள்', 'அரிஏகபாதத்தந்தாதி', 'திருமகளந்தாதி', 'ஆங்கிலியரந்தாதி', 'தமிழலங்காரம்', வேலங்காரம்', 'கணபதிமாலை', 'எழு கூற்றிருக்கை', 'எண்கூற்றிருக்கை', 'பேரொலியலந்தாதி', 'பாண்டி நாயகம் முருகப்பெருமான் பிள்ளைத்தமிழ்', 'நானிலைச் சதகம்', 'சடகோபர் சதகத்தந்தாதி', ஏகபாதம், 'ஏகன் எழுபது, 'ஆயிரந்தீபம்',

'ஏழாயிரப் பிரபந்தம்', 'அபேத மாலைமாற்று', 'விடுகவிகள், 'கௌமார தீபம்' 'திருப்புகழ்' 'முருகானந்த லகரி', இரவி எழுபது', 'சூரிய மாலை' 'சக்தி கவசநூல்', 'சக்தி பஞ்சகம், 'சிவபெருமான் சதகம்', 'அம்பிகை எழுகூற்றிருக்கை,' 'திருவாமாத்தூர்க் கலம்பகம் இப்படிப் பட்டியல் நீளும் அச்சில் வந்த சில சிற்றிலக்கிய வகைமைகளை 'ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதம்' என்பதற்கு இணங்கக் காண்பதே பொருத்தமாகும்.

## எழுகூற்றிருக்கையின் ஏற்றம்

திருஞானசம்பந்தர், திருமங்கைமன்னர், நக்கீரதேவ நாயனார் ஆகிய மூவரும் திருவெழுகூற்றிருக்கை பாடியுள்ளனர் தண்டபாணிசுவாமிகள் 'கணபதி எழுகூற்றிருக்கை' பாடியுள்ளார். இந்நூல் நிலைமண்டில ஆசிரியப்பாவில் 34 அடிகளில் அமைந்துள்ளது.

*"ஒருபிர ணவத்தின் ஓர்பொருள் ஆயினை"*

.....................

எனத் தொடங்கி,

*"சித்தம்மிக் குதவித் திரும்பிப் பிறவா*
*முத்தியிற் கூட்ட முன்னுதி யின்னே"*

என முடிவுறுகின்றது.

## அடிகளின் அலங்கார நூல்கள்

*"என் பாடலேயென யான்பாடும் பாடல்கள் யாவையும் சேய்*
*தன் பாடலேயெனச் சாற்றுகின்றான் எத்தன்மை கொண்டோ?"*

**(மயிலலங்காரம்)**

எனச் சுவாமிகள் மொழிவது இவண் எண்ணத்தகும். அலங்காரம் என்றால் அழகுநூறு எனப்பொருள் கூறலாம். அழகுறுத்திப் பாடப் பெறு கின்ற நூறு கட்டளைக் கலித்துறைப் பாடல்களைக் கொண்டது இந்நூல். 'வேல்அலங்காரம்','மயிலலங்காரம்',ஆறெழுத்தலங்காரம்', 'வாளலங் காரம்', 'தமிழலங்காரம்' என்பனவும் இவர் பாடியனவே! அருணகிரிநாதரின் 'கந்தரலங்காரம்' இவண் எண்ணத்தக்கது. சுவாமிகள் பாடியுள்ள அலங்காரங்களில் இறைவனது பல்வேறு இயல்புகளைப் படர்க்கையும் முன்னிலையாயுமாய் அமையப் பாடியுள்ளார். இந்நூல் 100 கட்டளைக்கலித்துறைப் பாடல்களால் ஆகியது. தண்டாயுதத்தின் சிறப்பு, குருவடிவ மாண்பு, ஆண்டவனின் எளிவந்த தன்மை, சேவற்கொடியின் சிறப்பு, பழனியின் சிறப்பு எனப் பல அழகுகளைச் சுவாமிகள் பழனித்திரு வாயிர அலங்காரத்துள் அணிபெறப் பாடியுள்ளார்.

## பழனி முருகன் அலங்காரம்

முருகப் பெருமானின் சேவற்கொடி இறையன்பர்களைப் பழனிக்கு வருமாறு அழைக்கும் காட்சியைக் கண்முன்னால் சுவாமிகள் கொண்டு வந்து நிறுத்தக் காண்கின்றோம்:

*"மஞ்சேறு வான்முதல் தேவரெல் லோரையும் வன்தகுவர்க்*
*கஞ்சேல்மின்! வம்மின்! எனக்கரங் காட்டி அழைப்ப தொக்கும்*
*பஞ்சேறு மெல்லடிக் குஞ்சரி கேள்வன் பழனிவெற்பில்*
*செஞ்சேவற் கோலம் வரைதரு சேலைத் திருக்கொடியே"*

**(பழனித்திரு. அலங்காரம், 12)**

முருகப்பெருமான் தமிழச்சங்கத்திற்குத் தலைவனாய் இருந்து தமிழாய்ந்த தகையுடையவன். இதனைச் சுவாமிகள்,

*"தவஞ் செய்யும் ஆர்வம் பெரிதெய்தி லேன்மனச் சஞ்சலத்தால்*
*அவஞ் செயும் பாதகர் போன்றுழன்றேன் இனிதா தரிப்பாய்*

*சிவஞ் செயும் தொண்டர் நிமித்தம் பழனிச் சிலம்பில் என்றும்*
*தவஞ் செயும் பெற்றிகுன் றாய்சங்க மூன்றுக்கும் நாயகனே"*

**(பழனித்திரு. அலங்காரம், 37)**

என்றுபாடுவதிலிருந்து அறிந்துகொள்ள ஒண்ணும்.

### வீரவாகுமூர்த்தி வாளலங்காரம்:

இந்நூல் கட்டளைக் கலித்துறைப் பாக்களால் ஆகிய 100 பாடல்களைக் கொண்டுள்ளது. இது திருச்செந்திற் பிரபந்தத்தில் பன்னிரண்டாவதாக வருவது. கந்தபுராணத்துள் கூறப்பெறும் நவ வீரர்களுள் முதல்வராக உள்ளவரும், அசுரர்களோடு நடைபெற்ற போர்க்களத்தில் பானுகோபனை வீழ்த்தியவரும், சூரனிடம் திருச்செந்தூரிலிருந்து தூது சென்று வீரச்செயல்புரிந்து வாகைசூடியவருமாகிய வீரவாகுதேவரின் வாளின் பெருமைகளைக் கூறும் நூலே வாளலங்காரம் ஆகும்.

*"செஞ்சாலித் தண்பணைச் செந்தூர் விசாகன் திருவருளால்*
*அஞ்சாத மேன்மைபெறும வீர வாகு அணிந்த வைவாள்*
*நஞ்சார் கணைக்கொருங் கைப்பானு கோபன் நடுக்களத்தின்*
*மிஞ்சாது துண்டுதுண் டாய்விழ வெட்டிய வீறுள்ளதே.*

**(வாளலங்காரம், 10)**

என வரும் பாடலில் வீரவாகுதேவர் பானுகோபனை வீழ்த்திய செய்தி கூறப்பட்டுள்ளது. சேக்கிழார் அடியவர்களைக் கூறும் போது "ஓடும் செம்பொனும் ஒக்கவே நோக்குவார்" என்பார். இதனைச் சுவாமிகள்.

*"ஓடும்பொருளும் சமமாகப் பார்க்கும் உணர்வினரும்*
*நாடும் பெருமைத் திருச்செந்தில் வேலனை நம்பி...."*

**(வாளலங்காரம், 43)**

என்று பாடுவார். சுவாமிகள் தம்முடைய உயிர்க்கொள்கைகளைக் கொலை புலை தவிர்த்தல், ஊன் உண்ணாமை போன்ற இவற்றைத் தவறாது ஒவ்வொரு நூலுள்ளும் கூறிச் செல்வார். இதற்கு வாளலங்காரமும் விலக்கன்று.

*"தேனுண்ணும் நீப மலர்ச்சோலை சூழும் திருச்செந்திலான்*
*வானுண்ணும் நல்லமு தம்போலும் செந்தமிழ் வாய்ந்ததிண்டோள்*
*கோனுண்மை ஞானம் பெறும்வீரன் வாட்கைக்கொற்றம் சொன்னால்*
*ஊனுண்ணும் பேய்கட்கு உதடோடு உதடுவந்து ஒட்டிடுமே"*

**(வாளலங்காரம், 87)**

இப்படிப் பல நலன்களை இந்நூலுள் நாம் காணலாகும்.

சுவாமிகள் பாடியருளிய 'தமிழலங்காரம்' தனிச்சிறப்புடைய சிற்றிலக்கியமாகும். பிற்காலத்தில் பாவேந்தர் பாரதிதாசன் பாடிய

'தமிழியக்கம்' இங்கே நினையத்தகும். காப்புச் செய்யுள் ஒன்றும் நூற்பயன் கூறும் இறுதிச் செய்யுள் ஒன்றும் நூலில் அமையும் 100 பாடல்களும் ஆக 102 கட்டளைக்கலித்துறைப் பாக்களைக் கொண்டது இந்நூல். இந்நூலில் வண்ணச்சரபர் தமிழின் உயர்வையும், உயிரையும் எழுப்பும் வல்லமை யுடைமையையும், அடியவர்க்கு அருள் வழங்கிய நிலையையும் பல பாக்களில் வரிசைப்படுத்திக் கூறியுள்ளார்.

*''எவ்வுயி ருக்கும் உயிரா நிறையும் இறைவன் தன்னை*
*வெளவும் ஒருவன் தமிழ்த்துதிக் காக்கிழ வந்தியின்ஆள்*
*ஒவ்வும் வடிவும் எடுத்துமண் கூடையுடன் சுமந்து*
*வெவ்வுர கம்பொரும் வேத்திரத் தாக்கும் மிலைந் தனனே''*

**(தமிழலங்காரம், 16)**

என்று வண்ணச்சரபர் பாடும் பாடலில் தமிழின் பெருமையோடு மாணிக்கவாசகர் பாடியுள்ள,

*''பண்சுமந்த பாடற் பரிசு படைத்தருளும்*
*பெண்சுமந்த பாகத்தன் பெம்மான் பெருந்துறையான்*
*விண்சுமந்த கீர்த்தி வியன்மண்ட லத்தீசன்*
*கண்சுமந்த நெற்றிக் கடவுள் கலிமதுரை*
*மண்சுமந்து கூலிகொண்டு அக்கோவால் மொத்துண்டு*
*புண்சுமந்த பொன்மேனி பாடுதுங்காண் அம்மானாய்''*

**(திருவாசகம், திருவம்மானை, 8)**

என்னும் அம்மானைக் கருத்தும் பொதிந்துள்ளமை கண்கூடு. இந்நூலின் பிற சிறப்புகள் இந்நூலுள் 'தமிழ்க் காதல்' எனவரும் பகுதியில் எடுத்து விளக்கப் பெறுகிறது.

### பிள்ளைத் தமிழ் நூல்கள்

*''குழவி மருங்கினும் கிழவ தாகும்''*

**(தொல்.1030)**

என்று ஒரு துறை அளவில் கூறப்பட்ட ஒரு கூறு படிப்படியாக வளர்ந்து முழுவடிவம் பெற்றுப் 'பிள்ளைத்தமிழ்' என்னும் சிற்றிலக்கியமாக உருவெடுத்தது. இது ஆண்பாற் பிள்ளைத்தமிழ், பெண்பாற் பிள்ளைத்தமிழ் என இருவகைப்படும். காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வருகை, அம்புலி, சிறுபறை, சிற்றில், சிறுதேர் எனப்பத்துப் பருவங்களை ஆண்பாற்பிள்ளைத் தமிழுக்குரிய தென்பர். இவற்றுள் இறுதிக்கண் நின்ற சிறுபறை, சிற்றில், சிறுதேர் என்பவற்றை விலக்கிக் கழங்கு, அம்மானை, ஊசல் என்பவற்றை இணைத்துப் பெண்பாற் பிள்ளைத்தமிழ் பாடப்பெறும்.

இதன் இலக்கணக் கூறுபாடுகளை இலக்கணவிளக்கப் பாட்டியல் (434,435) விளக்குகின்றது.

*"அகவல் விருத்தமும் கட்டளை ஒலியும்*
*கலியின் விருத்தமும் கவின்பெறு பாவே"*

***(பன்னிருபாட்டியல், 189)***

*"பிள்ளைப் பாட்டே நெடுவெண் பாட்டெனத்*
*தெள்ளிதிற் செப்பும் புலவரும் உளரே"*

***(பன்னிருபாட்டியல், 190)***

எனவரும் பன்னிரு பாட்டியல் பாடல் வடிவங்களைச் சுட்டக் காண்கிறோம். அரசனையோ இறைவனையோ குழந்தையாகப் பாவித்துப் பாடுதல் மரபு. இம் மரபைப் போற்றிய வண்ணச்சரபர் 'சென்னைக் கந்தசாமி பிள்ளைத் தமிழ்', திருச்செந்தூர் வள்ளிநாயகி பிள்ளைத்தமிழ், 'தேவகோட்டை முருகன் பிள்ளைத் தமிழ்' 'புதுவை முருகன் பிள்ளைத் தமிழ்ப்பா' 'சிதம்பரம் பாண்டிநாயகம் பிள்ளைத்தமிழ்' எனப் பல பிள்ளைத் தமிழும் பாடிப் பரவியுள்ளார்.

### *பிள்ளைக்கவி*

'பழனித் திருவாயிரம்' நூலுள் பதின்மூன்றாவது பனுவலாக அமைவது இப்பிள்ளைக்கவி. ஆசிரிய விருத்தப் பாக்களால் காப்பு முதல் சிறுதேர் உருட்டுதல் வரை பத்துப் பருவங்கள் கொண்ட அமைப்பில் சுவாமிகள் இதனைப் பாடியுள்ளார். திருமால், பரமசிவன், அம்பிகை, கணபதி, திருமகள், கலைமகள், நவகோள்கள், நல்ல தெய்வங்கள், மெய்யடியார், பொதுத்தெய்வம் ஆகியன காக்குமாறு காப்புப் பருவத்துள் சுவாமிகள் வேண்டுவார்.

*"செம்பொற் பணிகள் அவிர்ந்தாடத்*
*திருவாய் மலரில் நகையாடச்*
*சீரார் நுதலில் வெயர்வாடச்*
*செழுமா மலர்ச்சீ றடியாடக்*
*கொம்பொற் றையுளான் உடனாடக்*
*கோலா கலமா மயிலாடக்*
*கூவுஞ் சேவற் கொடியாடக்*
*குழுவும் அமரர் குலமாடக்*
*பைம்பொற் கவுரி களியாடப்*
*பழமா மறையின் இசையாடப்*
*பலதா னவருட் பயம்ஆடப்*
*பாம்பும் புலியும் பார்த்தாட*

*அம்பொற் சிசையோன் கூத்தாட*
*ஆடி யருளாய் செங்கீரை*
*அருள்கூர் பழனிக் குருபரனே*
*ஆடி யருளாய் செங்கீரை"*

***(பழனிமுருகன் பிள்ளைத் தமிழ், செங்கீரை, 6)***

எனவரும் பாடல் இயைபுத்தொடையாய் அமைந்து ஒருவுகை ஓசை நயத்தை ஊட்டி நம்மை மகிழ்விக்கின்றதன்றோ! 'பிள்ளைக் கவிக்கு அம்புலி புலி' என்பார்கள். அம்புலிப் பருவத்தில் தண்டபாணிசுவாமிகள் அம்புலியைத் தானம் கூறியழைக்கும் போது முருகப்பெருமான் கருணையினாற் கிடைக்கும் நன்னலப் பேறுகள் இன்னின்ன என்று அடுக்கிச் சொல்கிறார்.

*"ஆறெழுத்து ஓதும் அன்பர் தீதனுக்கும் தொழில் செய்யும் பழனி நாயகன்"*

என்றும்,

*தெருமந்து நல்லோர்வருமந்த முயல் பாதகர் சிரம் படுகளத்தில் உருள"*

என்றும் வண்ணச்சரபர் இந்நூலுள் கூறுவன சமய உண்மைகளைக் கூறும் பாங்கில் அமைவன. இவர் நெல்லையில் வழங்கும் வழக்குச் சொற்களையும் பயன்படுத்தியுள்ளார் என்பதனைப் பின்வரும் சொற்களால் அறிய முடிகின்றது.(எ.டு)'செட்டு ஒழியா வணிகர்'(52) மச்சுமனை (50) அதட்டி(43).

முருகனைச் சுவாமிகள் 'தமிழ்நாட்டு வேள்' 'தமிழ்நாடு ஆள்வை வேலன்' என்று பாடுவதால் இவர்தம் நாட்டுப்பற்று இனிது புலப்படும். இவர் காப்புப் பருவத்தில் எட்டுப் பாடல்களைச் சந்த விருத்தமாகப் பாடியுள்ளமை குறிப்பிடத்தக்க ஒன்றாகும். சுவாமிகள் பாடியுள்ள ஐந்து பிள்ளைத்தமிழ் மரபுகளைப் போற்ற எண்ணிய கோவை கௌமார மடாலயப் புலவர்களாகிய தவத்திரு கந்தசாமிசுவாமிகள், கவியரசு கு.நடேசக்கவுண்டர் போன்றோர் அவர் போற்றிய மரபு வழியிலேயே பிள்ளைத்தமிழ் நூல்களைப் பாடியுள்ளனர் என்பதும் அறியத்தக்க செய்தியாகும்.

### *சிதம்பரம் பாண்டிநாயகம் முருகப் பெருமான் பிள்ளைத்தமிழ்*

சோழ நாட்டுத் திருத்தலமாகிய தில்லைத் திருத்தலத்துள் அங்கமாக எழுந்தருளியுள்ள முருகப்பெருமான், பாண்டிநாயகன் என்ற பெயருடன் அழைக்கப்பெறுகின்றார். சங்கப் புலவரிடையே வாதம் நேர்ந்தபோது ஊமைக் குழந்தையாக-உருத்திரசன்மராகவும், உக்கிரகுமார பாண்டிய

னாகவும் தோன்றிப் புலவர்களிடையே ஏற்பட்ட கலகத்தைத் தீர்த்தார் முருகன். இக் காரணம் பற்றிப் பாண்டிநாயகன் என்ற பெயரமைத்து அன்று முதல் முருகப்பெருமானை வழிபட்டனர் போலும் எனக் கருத இடம் தருகின்றது என்பர்.

முருகப்பெருமான் முக்கண்ணனின் பிள்ளை என்பது கருதிச் சுவாமிகள் முருகனை, "முகந்தோறும் முக்கண் உடையாய்(16) என்று போற்றுகின்றார். சிறு குழந்தைகளின் மழலைச் செயல்களைச் சுவாமிகள் செங்கீரை ஆட அழைக்கும் போது கூறுவது நனி நயமாக உள்ளது.

*"பார்பூத்த நாவலர்க்கு உதவுகர பந்தியிற்*
*பன்னிரு விரற்சு வைத்துப்*
*பகரறும் எழுத்தாறும் மொழிபவர் சுமக்கும் இரு*
*பாதவிரல் வாய்ம டுக்கும்*
*சீர்பூத்த குழவியென விளையாடும் ஒருவனே!"*

**(பாண்டிநாயகம், செங்கீரை, 1)**

'முத்தமிழால் வைதாரையும் வாழவைப்பான் முருகன்' என்னும் அடியை ஒட்டி,

*"பத்தி நெறியோர் இகழ்ந்தாலும்*
*பரிந்தாண் டருளும் முருகோனே"*

**(மேலது, 7)**

எனச் சுவாமிகள் கூறுவார். வருகைப்பருவப் பாடலில் வண்ணச்சரபர்,

*"கண்ணே! வருக! சிவஞானக்*
*கனியே! வருக! எனையாண்ட*
*கனிவின் தவமே வருக! அருட்*
*காரே! வருக! கழறஅரிதாம்*
*எண்ணே! எழுத்தே! வருக!*

**(மேலது,வருகைப்.4)**

என்னும் போது 'கண்ணே மணியே முத்தம்தா! கட்டிக் கரும்பே முத்தம் தா!' எனவரும் நாட்டார் பாடல் அடிகள் நம் மனத்தில் நிழலாடுகின்றன.

## அருந்தமிழை அணிசெய் அந்தாதிகள் பல

ஒரு செய்யுளின் இறுதிச் சீரோ அதன் உறுப்போ அதனை அடுத்துவரும் செய்யுளுக்கு முதலாக வருமாறு பாடப்பெறும் நூல் அந்தாதி ஆகும். கலித்துறையால் இயற்றப் பெறுவது 'கலித்துறை அந்தாதி' என்றும், வெண்பா யாப்பில் அமைவது 'வெண்பா அந்தாதி' என்றும்பெயர் பெறும்.

பத்துச் செய்யுட்கள் அமையப் பாடுவது 'பதிற்றந்தாதி'; நூறு செய்யுட்கள் வரப் பாடுவது 'நூற்றந்தாதி' என்றும் சொல்லுவர்; இதனைப் 'பதிற்றுப்பத்தந்தாதி' எனவும் பெயரிட்டழைப்பர்.

பதிற்றுப்பத்தந்தாதி நூறு பாடல்களை உடையது என்றாலும் வெண்பா அந்தாதி, கலித்துறை அந்தாதி போல ஒரே வகைப் பாடல்களால் அமைவதன்று. பதிற்றுப்பத்து என்னும் பெயருக்குத் தகுந்தவாறு பத்து வகைப் பாக்களால் அமையும்; ஒவ்வொரு வகைக்கும் பத்துப் பாடல்கள் இடம்பெறும். அதாவது பா இன வகைகளில் இந்நூல் அமையும். நான்கு அடிகளுக்கு, ஓரடிக்குப் பதினாறு கலையாக அறுபத்து நான்கு கலை வைத்துப் பல வண்ணங்களும் அமைத்து அந்தாதியாக முப்பது பாடல்கள் அமைதல் 'ஒலியலந்தாதி' யாகும். சிறுபான்மை ஓரடியில் எட்டுக் கலைகளே இடம்பெறும்.

சிற்றிலக்கிய வகைகளில் 'பரணி' என்ற ஒன்றைத் தவிர வண்ணச்சரபம் தண்டபாணிசுவாமிகள் பாடாத வேறு பிரபந்த வகைகளே இல்லை என்று கூறலாம். இவர் பாடியருளிய அந்தாதிகள் பல. அவற்றுள் சில மண்டலித்து முடிதல் என்னுமாறு அமைவதனைக் காணமுடிகின்றது. மேலே நாம் கண்ட பல்வேறு அந்தாதி நூல்களையும் வண்ணச்சரபம் தண்டபாணிசுவாமிகள் இயற்றியுள்ளமை நம் மூக்கில் உச்சிச் சுட்டுவிரல் சேர்க்குமாறு செய்கிறது.

வண்ணச்சரபரின் எண்ணக்குவியல்களாக அமைந்துள்ள அந்தாதிகள் வருமாறு: 'ஆங்கிலியர் அந்தாதி, 'எழுகூற்றந்தாதி, 'கங்கை அந்தாதி','குருநாதன் அந்தாதி' 'சித்தர் அந்தாதி', 'செம்பொன்னந்தாதி' 'திருமாலந்தாதி', 'பாறைக் கிணற்றந்தாதி' 'புதுவைக் கௌமார அந்தாதி, 'பெருமாளந்தாதி, 'பெருமானந்தாதி' 'பேரொலியலந்தாதி' முருகன் கௌமார அந்தாதி' 'வண்ணை அந்தாதி', 'திருமகளந்தாதி', இதழகல் அந்தாதிகள் ஐந்து, 'அரியேகபாதத் தந்தாதி', 'சந்தக் கலித்துறையந்தாதி, 'திருச்செந்தூர்த் திரிபந்தாதி', 'நீரோட்கக் குகனந்தாதி, 'திருச்செந்தூர்ப் பதிற்றுப் பத்தந்தாதி, 'திருநெல்வேலி யமகவந்தாதி' இப்படி எண்ணிறந்த அந்தாதிகளை இயற்றி இனிய தமிழுக்கு ஏற்றம் தந்துள்ளார் வண்ணச்சரபர் எனலாம். மேற்கூறிய எல்லா அந்தாதி நூல்களையும் காண்பது நம் நோக்கம் இல்லை. ஒன்றிரண்டு அந்தாதிகளின் சிறப்பைக் கண்டுணர்வோம்.

### *திருச்செந்திற் பிரபந்தங்கள்: 'வெண்பா அந்தாதி'*

இவ்வெண்பா அந்தாதியின் பாட்டுடைத் தலைவன் 'வெண்டலைப் புணரி அலைக்கும் செந்தில்' மேவிய கந்தப் பெருமான் ஆவார். இது காப்புச் செய்யுள் உட்பட 101 வெண்பாக்களையுடையது. '*சீர்*' என்ற அசையில் தொடங்கிச் '*சீர்*' என்ற அசையில் முடிந்து மண்டலித்து முடிதலாக அமைகின்றது.

*"சீர்மருவு செந்தினகர்ச் செவ்வேளைத் தேவர்புகழ்*
*பேர்மருவு வேற்கைப் பெருமானைக்-கார்மருவு*
*கண்டமுளான் பெற்றநுதற் கண்மணியைக் கைகுவித்துக்*
*கொண்டவர்க்கே தீரும் குறை"*

***(வெண்பா அந்தாதி.1)***

இந்நூலின் இரண்டாவது பாடல் 'குறை' என்ற அசையில் தொடங்குகின்றது. திருச்செந்தூரின் வளத்தையும் எழிலையும் சுவாமிகள் ஏற்றமுறக்கூறி நம் எண்ணத்தைக் கவர்ந்து விடுகிறார் அவை வருமாறு:

*"வாழைக் கனியின் மதுஆறு பாய்ந்துவளர்*
*தாழைப் பொழில்சூழ் தருஞ்செந்தூர்"*

***(மேலது, 11)***

*".......நெய்வழிதார்ச்*
*செச்சைமலர் சூடுமெழிற் செந்தினகர்"*

***(மேலது, 28)***

*"வாளைக் கயல்பாயும் வண்பணைச்செந் தூர்"*

***(மேலது, 36)***

வண்ணச்சரபர் முருகனோடு ஊடல் கொள்வதனையும் சினங்கொண்டு முரண்படுவதனையும் இவ்வெண்பா அந்தாதியுள் காணமுடிகின்றது. சைவ சமயக் குரவருக்கு அருள்பாலித்த சிவனைப் போல முருகனுடைய அடியவர்கள் அருள்பெற்று ஒளிபெற வேண்டாமா என்கிறார் சுவாமிகள் இதோ அப்பாடல்:

*"அப்பன் குணமுனக்குண் டானால் அடியவரை*
*இப்படிநீ வைப்ப தியல்பன்றே-செப்பரிய*
*நால்வரைப்போ லிங்கொருவர் நன்கொளிர வேண்டாவோ*
*போல்வதில்செந் தூரா புகல்."*

***(மேலது, 54)***

## திரிபந்தாதியும் யமகவந்தாதியும்

அடிதோறும் முதற்சீர் முதலெழுத் தொன்று மட்டும் அளவால் ஒத்துத் திரிந்து நின்று பிறவெழுத்துக்களது தொகுதி யமகம்(மடக்கு) போலவே வருவது திரிபு என்னும் சொல்லணி வகையினதாகும். மடக்கு அமைப்பில் முதல் எழுத்து ஒன்று மட்டுமே திரிந்து நிற்றல் திரிபு என்பர். திரிபுடன் அந்தாதியாக வரும் பாடல்களைக் கொண்ட நூல் 'திரிபந்தாதி' என்று பெயர் பெறும். சிவப்பிரகாசர் இயற்றியுள்ள 'பழமலைத் திரிபந்தாதி'போன்றதே வண்ணச்சரபர் இயற்றியுள்ள 'திரிபந்தாதி' என்பதும். இது திருச்செந்தூர்ப் பிரபந்தத்துள் வரும் பனுவல். திரிபு என்றால் மாறுபாடு என்று பொருள். இந்நூல் கட்டளைக்கலித்துறை யாப்பு வடிவில் அமைந்துள்ளது. காப்பும்

நூற்பயனும் என 102 பாடல்களைக் கொண்டது. சான்றுக்கு ஒரு பாடலை இங்கே காண்போம்.

*''தந்தத் தனத்தத்த என்றாடு வார்புடை தங்கிநிற்பாள்*
*சந்தத் தனத்தத்தம் வைத்தமு துண்டு தங்கும்பிரான்*
*அந்தத் தனத்தத்த ரெய்தாத் திருச்செந்தி லம்பதியில்*
*சொந்தத் தனத்தத்த மீவேனென் றென்னோடு சொற்றதுண்டே''*

**(திருச்செந்தூர்ப் பிரபந்தம், திரிபந்தாதி, 10)**

''தந்தத் தனத்தந்த என்ற வரிசையில் திருநடனம் புரிகின்ற சிவபெருமானின் இடது பக்கத்தில் நிலைத்து இருக்கும் உமையவளின் அழகிய மார்பகத்துத் தமது திருக்கையை வைத்துப் பாலாகிய அமுதத்தை அருந்தி மகிழ்கின்ற குமாரக்கடவுள், நாம் இறக்கும் தறுவாயில் வன்செயல்புரியும் எம தூதர்கள் அடைய முடியாத தெய்வீகச் சிறப்புடைய திருச்செந்தூரின் உரிமைக் கடவுள் ஆவான்; என் கைவசமாகப் பொருட் செல்வத்தைக் கொடுத்து உதவுவேன் என்பதாக அடியேனிடம் பல தடவையும் கூறியது உள்ளதாம்'' என்பது இதன் பொருள். (தந்தத் தனத்தத்த; சந்த தனத்து அத்தம்; அந்தத் தனத்தத்தர்; சொந்தத் தன் அத்ததம்; என்று பிரித்துப் பொருள் காணுதல் வேண்டும்)

'கற்பனைக் களஞ்சியம்' என்ற சிறப்புக்குரிய சிவப்பிரகாச சுவாமிகள் வெள்ளியம்பலத் தம்பிரானிடம் இலக்கணம் கற்றுத் தேர்ந்தார். தம்பிரானிடம் 'அழுக்காறு கொண்ட புலவன் ஒருவனை வெற்றி கொண்டு, அப்புலவனைத் தம் குருநாதருக்கு அடிமை யாக்கியவர் சிவப்பிகாச சுவாமிகள். அவ்வாறு புலமை வீறு தோன்றப் பாடிய இடம் திருச்செந்தூராகும். அவர் பாடிய நூல் செந்தில் நீரோட்டகம் என்பதாகும். அத்தகைய பெருமைக்கும் பெருஞ் சிறப்பிற்கும் உரிய திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ள ஆறுமுகனை வண்ணச்சரபர் பாடி வழுத்திய நூலே 'யமக அந்தாதி' என்ற பனுவல். யம+கம்=யமகம் என்றால் கூற்றுவனைத் தலையில் உடையது என்று கூறுவர். ஒவ்வொரு கவியிலும் முதல் இரண்டு சீர் வரை ஒரே விதமான வரிவடிவிலமைந்து பொருள் திரித்துக் கொள்ளப்படும் இயல்பில் அமைந்திருப்பதனால் அது வன்மையுடையது. இவ் வன்மையை நோக்கியே 'யமக அந்தாதி' எனப் பெயர் அமைந்தது போலும்!... இங்கு சுவாமிகளின் புலமை வளத்திற்கு ஒரு பாடல் காண்போம்.

*''சிக்கன கங்களைச் சற்றுஞ்செய் யேன்புதுச் செல்வரைக்கெஞ்*
*சிக்கன கந்தரல் வேண்டிநிற் பேன்நின் திருப்புகழ்பே*
*சிக்கன கந்தொறுஞ் சென்றிறைஞ் சேன்எழிற் செந்திலைநே*
*சிக்கன கந்தைகொண் டேன்எனை ஆண்டருள் சீக்கிரமே''*

**(மேலது, யமக அந்தாதி, 11)**

**'திருமகளந்தாதி'**

வண்ணச்சரப மாமுனிவரின் திருமகளந்தாதி காப்பு, நூற்பயன் உட்பட 102 பாக்களைக் கொண்டது. நூல் நூறு கட்டளைக் கலித்துறைப் பாவடிவில் அமைந்துள்ளது. இலக்குமிதேவியின் தோத்திரமாக அந்நாதி அமைப்பில் அமைகிறது. இனிய நடையும், ஆழ்ந்த பொருளமைதியும், பக்திச் சுவையும் நிறைந்து புராணக் கருத்துகள் ஆங்காங்கே தோன்றப் பெருமித நடையுடையதாக இப்பனுவல் விளங்குகிறது. எடுக்க எடுக்க ஊறும் ஊருணியைப் போன்று சுவைக்கச் சுவைக்க இன்பம் தருவதாய் இந்நூல் விளங்குகின்றது.

திருமகள் செல்வம் வழங்கும் தெய்வம். செல்வம் நிறைந்தால் உலகில் சீர் எல்லாம் பெருகும். ஆக்கம் என்றுள்ள எல்லாவற்றையும் அருள்கின்றவள் அன்னை. அன்னையிடம் இவர் வேண்டினார் ஆனால் அவளோ காலந்தாழ்த்துகிறாள். இதனை எண்ணிய சுவாமிகள்,

*"....என்தமிழ்மாலை கொண்டன்று சாற்றியசொல்*
*காக்கவும் தாமதம் செய்கின்றை யேஎன்ன காரணமே"*

**(திருமகள். 12)**

என்று வினவுவார். மேலும் இவர் உலகோர் நன்மைக்காகத் திருமகளிடம் பணிந்து வேண்டும் பண்புடைவர். இதனைப் பின்வரும் பாடல் தெளிவுறுத்தும்.

*"பலவா றுலகுக்கு இதம்செய்ய நாடுமென் பான்மைநச்சி*
*உலவாக் கருணை புரியா திருப்பது உசிதம் கொல்லோ?"*

**(திருமகள்.9)**

மேலும் இவர்,

*"எனக்குன் கடைக்கண் அருள்வாரி யின்துளி யின்றருளில்*
*உனக்கும் புகழுண்டு, உலகிற்கு நன்மையுண்டு"*

**(திருமகள், 38)**

என்று உறுதி கூறுகின்றமை இவண் நோக்கத்தகும்.

**'ஆங்கிலியர் அந்தாதி'**

சுவாமிகள் இயற்றியுள்ள 'ஆங்கிலியர் அந்தாதி' யில் காப்புச் செய்யுளும், 100 கட்டளைக்கலித்துறைப் பாக்களும் 1 நூற்பயன் கூறும் செய்யுளுமாக மொத்தம் 102 பாடல்கள் உள்ளன. நூலின்கண் கூறப்படும் செய்தி ஆங்கிலேயரின் கொடுமையே! நூலின் அமைப்பு,

*சொல்லரு மேன்மைப் பகமேடம் ஆதிய...*

**(ஆங்கி.1)**

என்று தொடங்கி,

*"...சுரந்த கருணைய(து)யாதோ அதன்புகழ் சொல்லரிதே"*

**(ஆங்கி. 100)**

என்று முடிகின்றது. எனவே, இந்நூல் நூறு கட்டளைக்கலித்துறைகளால் மண்டலித்து முடிந்தது. ஆயின் கலித்துறை நூறுவரின் கலித்துறை அந்தாதி எனப் பெயர் பெறும் என்று இலக்கணம் கூறும் நவநீதப் பாட்டியலின்படி இதன் பெயரில் 'கலித்துறை' என்ற சொல்லைச் சுவாமிகள் இணைத்திலர்.

"அந்தாதி இலக்கியங்களில் பொருளமைதிக்கு வரையறை இல்லை. எனினும் பெரும்பாலானவை இறைவனையோ இறைவியையோ பாட்டுடைத்தலைவர் யாராயினும் அவரைத் துதித்துப் போற்றுதலைப் பொருளமைதியாகக் கொண்டுள்ளன. உலா, தூது, பள்ளு, பரணி போன்ற பிற சிற்றிலக்கியங்களில் நாம் காணும் பொருள் வரையறை அந்தாதி இலக்கியத்தில் இல்லை"(சிற்றிலக்கியச் செல்வம், ப.58) என்பதற்கு ஏற்பச் சுவாமிகளின் ஆங்கிலியர் அந்தாதியின் பொருளமைதியில் வரையறை பின்பற்றப்படவில்லை. அழகர் அந்தாதி, அபிராமி அந்தாதி, அருணையந்தாதி எனப் பாட்டுடைத் தலைவன், தலைவி பெயரையோ, அவர் சார்ந்த ஊரின் பெயரையோ இணைத்துப் பெயர் சூட்டும் பண்டைய மரபிலிருந்து - புகழ்ந்து பாடும் போக்கில் இருந்து சுவாமிகள் முழுக்க மாறுபடுகின்றார். நூலில் ஆங்கிலேயரின் கொடுமையே விரிவாகப் பேசப்படுகின்றது. பரணி நூல்களுக்குப் பெயரிடும் பான்மையிலே இந் நூலாசிரியர் இதற்கு 'ஆங்கிலியர் அந்தாதி' எனப் பெயர் சூட்டியிருப்பது இங்கே நினையத்தகும். பிற அந்தாதிகளில் பாட்டுடைத் தலைவரின் சிறப்புப் பேசப்படும். ஆயின் இவ் அந்தாதியின் பொருளமைப்பில் ஆங்கிலேயரின் வெங்கொடுமையே முழுவதும் பேசப்படுகின்றது.

### நூலின் நோக்கம்

'ஆங்கிலியர் அந்தாதி' யின் காப்புச் செய்யுளில் சுவாமிகள், சிவன் உமை, திருமால் விநாயகர், முருகன் ஆகிய தெய்வங்களின் துணையை வேண்டிப் பாடுவார். மேலும் இவர்,

*"அந்தாதி ஒன்று பசுவதைத் தூன்உண்ணும் ஆங்கிலியர்*
*வெந்தானை யோடு கனற்பூனை யாகவிளம்ப..."*

என்று வேண்டுவதனால் நூலின் நோக்கம் இனிது புலனாகின்றது. நூலின் பயனைக் கூறும் இறுதிப் பாடலிலும் சுவாமிகள்,

*"ஆக்குட் டியுந்தின் னும்பொல்லார் பல்கும் அழிவுறச்சொல்*
*பாக்குப்பம் என்சொந்தம் ஆமோ அகண்ட பாரபரமே'*

எனப்பகர்வதும் இங்கே ஒப்புநோக்கத்தகும்.

**'பேரொலியலந்தாதி'**

'ஒலியலந்தாதி என்பது அறுபத்துநான்கு கலைச் சந்தப்பாக்களால் அந்தாதித்துப் பாடப்பெறுவது; பதினாறு கலைக்கு ஓர் எதுகையும் மோனையும் அமையப்பாடுவது. இப்படி முப்பது பாடல் அமைய வேண்டும் என்பது இதன் இலக்கணம் ஆகும். 'பேரொலியல்' என்பதற்கு ஏற்பச் சந்த ஒலி பல இணைந்து பெருகிய ஒலியினது; ஆனாலும் ஆறு சமயக்கடவுளரின் பெயருடன் அதீதமான பரம்பொருளையும் பெயர் குறித்துப் பாடப் பெற்றிருப்பதாலும் இப்பெயர் பெற்றது என்பர்.

*"முதலொலியல் அந்தாதி முன்னொன்று சொன்னேன்*
*அதனிலைமெய்ஞ் ஞானியர்க்கே ஆமால்-மதகலகப்*
*பேதத் தருமகிழப் பேரொலியல் அந்தாதி*
*ஓதத் துணிந்தேன்இன் று"*

என்பது இந்நூலின் காப்புச் செய்யுள். சமய வேறுபாடற்ற சமரசஞானம் உடையவர்கள் படித்தின்புற முதலொலியந்தாதியும், சமயக் கட்டுப் பாட்டோடு உள்ளவர்களுக்குச் சமயக் கடவுள் பெயரால் அந்தாதி இல்லையே என்று ஏக்கமுறாமல் மகிழும் வண்ணம் இந்தப் பேரொலியலந்தாதியைத் தாம் பாடுவதாகவும் காப்புச்செய்யுளில் சுவாமிகள் கூறுவது நினையத்தகும். ஆறுசமயக்கடவுளரையும் அதீதப் பொருளையும் ஏழு சந்தப் பாடலாலும், அவ்வாறே ஏழு ஏழாக நான்கு அடுக்கில் இருபத்தெட்டுப் பாடல்களும் குருவருள், தெய்வ அருள் என்ற பெயரில் இரண்டு பாடல்களுமாக முப்பது சந்தப் பாக்களில் அமைவது இந்நூல். இப்பனுவலில் உள்ள பாடல்கள் ஒவ்வொன்றும் அருணகிரிநாத சுவாமிகள் அருளிய எட்டுக் கலையுடைய திருப்புகழ்ப் பாடல் எட்டுச் சேர்ந்த அளவானதாக அமைகிறது என்பர் சுவாமிகளின் ஒலியலந்தாதிகளின் சிறப்பினை அட்டாவதானம் பூவை கலியாணசுந்தரர்,

*"தண்டபா ணிச்சரபம் சாற்றொலிய லந்தாதி*
*கண்டபின்னர் வாணி களிப்புற்றாள்-வண்டமிழில்*
*பாடிடலாம் சந்தமெனும் பாவலர் யாவரும்வாய்*
*மூடிஒல்க லுற்றார் முகம்"*

***(பேரொலியலந்தாதி முன்னுரை, ப.11)***

என்று வியந்துரைப்பது கொண்டு அறிய ஒண்ணும்!

மேற்சொன்ன சிற்றிலக்கியங்கள் மட்டுமல்ல இன்னும் கலம்பகம், வகுப்பு, மாலை, சதகம், கண்ணி, பஞ்சகம், மாலை மாற்று, இரட்டை மணி மாலை, பஃறொடை வெண்பா, லகரி என இன்னும் பல்வேறு சிற்றிலக் கியங்கள் படைத்துத் தம்முடைய புலமை வீச்சின் ஆழ அகல உயரங் களைக் காட்டியுள்ளார் சுவாமிகள். அவை விரிப்பின் பெருகும் என்பதால் இங்கு விரிவாகச் சொல்லப் பெறவில்லை.

### பதிகளும் பதிகங்களும்

வண்ணச்சரபர் நெல்லையினின்றும் தமிழகத்துள்ள பல்வேறு தலங்களுக்கும் தலப்பயணம் செய்ததோடு தேவார மூவர் வழியில் அருட்பதிகங்களையும் பாடிச் சிறப்பித்துள்ளார். திருஞானசம்பந்தர் அனல்வாதம், புனல்வாதம் செய்து சமணரை வாதில் வென்றவாறே வண்ணச்சரபரும் இறைவன் எழுந்தருளியுள்ள பதிகளுக்குச் செல்கின்ற போது வாதம் செய்து தம் கொள்கையை நிறுவியுள்ளார்.இவர் சென்று வழிபட்டுப் பாடிய திருத்தலங்கள் 222 என்று ஆய்வாளர் ஒருவர் கணக்கிட்டுள்ளமை இவண் எண்ணத்தகும். இவர் பல சமய உண்மைகளையும் தெளிவாக அறிந்து வைத்திருந்தார். இதனை,

*"அற்ப மதவாதர் ஆணவமெல்லாம் அழிக்கும்*
*சிற்பரஞா னத்தைத் தெரிவிப்போன்"*

**(வெண்பாமாலை, 51)**

என இவர் கூறுவதனால் அறியமுடிகின்றது. தண்டபாணிசுவாமிகள் சென்று வணங்கிய பதிகளும், பாடியருளிய பதிகங்களும் பலவாகும். இங்கு அவற்றுள் ஒன்றிரண்டைக் கண்டு மேற்செல்வோம்.

எப்பொருள் மீதும் பத்து அல்லது இருபது பாடல்கள் ஆசிரியத்துறை, ஆசிரியவிருத்தம், கலிவிருத்தம் எட்டடி வெண்பா இவற்றுள் ஒன்றால் பாடுவது பதிகம் என்கிறது பன்னிருபாட்டியல். தண்டபாணிசுவாமிகள் 'அணிற்காத்த பதிகம்', 'அம்பிகை பதிகம்', அவிநாசிப் பெருமாள் பதிகம்', 'ஆலஞ்சேரி சிவன் பதிகம்', 'இலுப்பை வனப்பதிகம்', 'கண்ணாடியூர் கணபதி பதிகம், 'கலைமகள் பதிகம்' இப்படிப்பல பதிகங்கள் பாடியுள்ளார். இங்கே வைத்தீசுவரன் கோயில் பதிகங்களைக் காண்பது சிறப்பாகும். 'புள்ளிருக்குவேளூர்ப் பதிகம்', 'வேளூர்க்கணபதி பதிகம்', 'வேளூர் வைத்தியனார் பதிகம்', 'வேளூர்த் தையல்நாயகி பதிகம்', 'வேளூர் முத்துக்குமாரசுவாமி பதிகம்' என்னும் ஐந்து பதிகங்களை முனைவர் வே.இரா. மாதவன் 1990 ஆம் ஆண்டில் பதிப்பித்து வெளியிட்டுள்ளார்.

திருஞானசம்பந்தர் இத்திருத்தலத்திற்கு வந்து, 'கள்ளார்ந்த பூங்கொன்றை' என்று தொடங்கும் பதிகத்தை அருளினார். திருநாவுக்கரசர் 'ஆண்டானை அடியேனை' என்னும் தாண்டகமும், 'வெள்ளெருக்கரவம்' என்னும் திருக்குறுந்தொகையையும் பாடியருளினார். தருமையாதீன முனிவர் படிக்காசுத்தம்பிரான் 'வேளூர்க்கலம்பகம்' பாடியுள்ளார். இத்தகைய சிறப்புகளைப் பெரிதும் பெற்றுள்ள இத்தலத்தைத் தண்டபாணிசுவாமிகளும் பாடிப் பரவ முனைந்ததில் எவ்வகை வியப்பும் இல்லை!

*"பூமலிசீர்த் தண்சோலைப் புள்ளிருக்கும் வேளூர்"*
*"பொய்யர் குலஞ்சேராப் புள்ளிருக்கும் வேளூர்"*

என வேளூரின் சிறப்பைப்பாடி மகிழ்கின்றார் வண்ணச்சரப மாமுனி.

**பெருஞ்செல்வர்:** பலநூறு சிற்றிலக்கியப் பனுவல்களைப் பாடி இலக்கியக் களஞ்சியமாகவும் பல சிற்றிலக்கியங்கள் படைத்த பெருஞ் செல்வராகவும் விளங்கும் வண்ணச்சரபம் தண்டபாணிசுவாமிகளின் படைப்புகளைப் போற்றுவதும், பனையோலை ஏடுகளில் உள்ளவற்றைப் பதிப்பிப்பதும் நம்மனோர் கடனாகும்; அது தமிழுக்குச் செய்யும் அரும்பெரும் தொண்டாகும்.

*"கலம்பகம் சந்தத் தொலியல்அந் தாதி*
*கவின்செய்பிள் ளைக்கவி கோவை*
*இலங்குசீர்ச் சதகம் மாதையூர்ப் புராணம்*
*இசைபதிற் றுப்பத்தந் தாதி*
*நலங்கொள் வெண்பாவந் தாதியும் பலவா*
*நவின்றுசண் முகன்அடித் துணையே*
*வலங்கொளக் கருதிஆறெழுத் துரைக்கும்*
*பண்பினன் அன்பினிற் சிறந்தோன்"*

***(புலவர் புராணச் சாற்றுகவி,7)***

என்று செந்தினாயகசுவாமிகள் தொகுத்துரைப்பது ஓரளவுதான்! மலையளவு குவிந்து கிடப்பவற்றை மக்கள் அறியச் செய்வது வண்ணச்சரபருக்கு நாம் செய்யும் நன்றிக் கடனாகும்.

---

# 5
# பாட்டுக்களமும் நாட்டுப்பற்றும்

*''ஆசுமுதல் நாற்கவியும் அட்டாவ தானமுஞ்சீர்*
*பேசுமியல் பல்காப்பியத் தொகையும்-ஓசை*
*எழுத்துமுத லாம்ஐந் திலக்கணமும் தோய்ந்து*
*பழுத்த தமிழ்ப்புலமை பாலித்து''*

**(குமரகுருபரசுவாமிகள்,**
**திருச்செந்தூர்க் கந்தர் கலிவெண்பா, 118-120)**

என்பதற்கு ஏற்ப இறையருள் பெற்று எண்ணற்ற பாடல்களை இயற்றித் தமிழுக்கு ஏற்றம் தந்தவர் வண்ணச்சரபர்.

## புலமை வீச்சு

எழுது கருவியும் எழுது பொருள்களும் இங்கு எட்டிப்பார்த்த நாளில் கட்டிக் கரும்பாய் இனிக்கும் பாடல்களை ஏட்டுச்சுவடிகளிலேயே எழுதி வந்த இனிய தமிழ்த் தொண்டர் வண்ணச்சரபம் தண்டபாணிசுவாமிகள். குமரகுருபரசுவாமிகளின் கலிவெண்பாவைக் கற்றுத் தேர்ந்த கவிவேந்தராகவே அவர் விளங்கினார். அவர் தமிழ்ச் சான்றோர்களின் படைப்புகளைக் குற்றமறக் கற்றுயர்ந்த வித்தகர் மட்டுமன்று; கவிதைகள் இயற்றிக் கன்னித்தமிழுக்கு அணி செய்யும் வகையில் பல்வேறு பாக்களையும் பாவகைகளையும் பாவினங்களையும் சித்திரக்கவிகளையும் பாடி வெற்றிபெற்ற விரகராக விளங்கினார். தமிழ்ப்பாட்டுக்களம் மூவாயிரம் ஆண்டுப் பழமையும் பெருமையும் உடையது; பழமைக்குப் பழமையாய்ப் புதுமைக்குப் புதுமையாய்ப் பூத்துக் குலுங்குவது. 'தொல்காப்பியச் செய்யுளியல்' தொடங்கிச் சரவணத்தமிழன் என்பார் இயற்றியுள்ள 'யாப்புநூல்' வரை நீண்ட நெடிய அடித்தளத்தையும் ஆழமான பிடித்தளத்தையும் கொண்டது பாப்புனையும் யாப்பு நெறி.

*''தூக்கும் பனுவற் றுறைதோய்ந்த கல்வியும் சொற்சுவைதோய்*
*வாக்கும் பெருகப் பணித்தருள் வாய்; வட நூற்கடலும்*
*தேக்கும் செழுந்தமிழ்ச் செல்வமும் தொண்டர்செந் நாவினின்று*
*காக்கும் கருணைக் கடலே! சகலகலா வல்லியே!''*

**(சகலகலா வல்லிமாலை, 4)**

என்பதற்கு இணங்கத் தமிழயாப்பு நெறியாம் பாட்டுக்களத்தைக் கண்டு வாகை சூடியவர் வண்ணச்சரபர். பல்வகைப் பாடல்களைக் காண்பதன் வாயிலாக அவர்தம் படைப்புத் திறனும் நடைச்சிறப்பும் நமக்கு நன்கு புலப்படும். அவர் எண்ணமும் பாடல் வண்ணமும் குறித்து அறிந்தால் அவர்தம் யாப்பிலக்கணப் புலமையின் ஆளுமைத் திறனையும் வன்மையையும் வளத்தையும் நன்கு அறிய ஒண்ணும்! சுவாமிகள் 'அறுவகை இலக்கணம்', 'வண்ணத்தியல்பு', 'ஏழாம்இலக்கணம்' என்னும் மூன்று இலக்கணப் படைப்புகளை இயற்றிய இலக்கண வள்ளல் என்பதனை முன்னைய இயலில் கண்டோம். இங்கு அவர் பல்வேறு பாவகைகளையும் பாவினங்களையும் கையாண்டு வெற்றிகண்ட புலமை வீச்சைக் காண்போம்.'' 'பாட்டுத் திறத்தாலே இவ்வையத்தைப் பாலித்த' வண்ணச்சரபர் பாடல்கள்,

*''சொல்நோக்கும் பொருள் நோக்கும்*
*தொடை நோக்கும் நடை நோக்கும்*
*எந்நோக்கும் காண இலக்கியம் ஆவது''*

***(சிறப்புப்பாயிரம், திருவரங்கக் கலம்பகம்)***

என்னுமாறு அமைவன.

### பாடியுள்ள பாவும் பாவகைகளும்

வண்ணச்சரபர் 'காசிக்கலம்பகம்' கூறுமாறு 'தேந்தமிழ் தெளிக்கும்' செந்நாப் புலவராக விளங்கினார். சுவாமிகள் தமிழ்ப்பா வகைகளில் நேரிசை ஆசரியத்தையும் நிலமண்டில ஆசிரியத்தையும் பழந்தமிழ் இலக்கணிகள் கூறிய இலக்கண விதியிலிருந்து மாற்றிக் கூறியுள்ளார். முதலிலிருந்து கடைசிவரை நேராக ஒரே மாதிரியாகச்செல்லும் இசையை உடைய பா நேரிசையாசிரிப்பா எனக் கருதுகிறார். (அறுவகை.404) பாடல் முடிவடையும் போது ஒரு சீர் குறைவதாகிய மண்டிலம்(வளைவு) பெறுவதால் நிலைமண்டிலம்(அறுவகை, 405) என்றும் வழங்குகிறார். தாமே இயற்றியுள்ள முத்தமிழ்ப் பாமாலை போன்ற பனுவல்களில் தம் கொள்கைக்கு ஏற்ப அவரே பாடியுள்ளார் என்பதும் இவண் அறியத்தகும்.

வெண்பா இயற்றுவதில் மிகுந்த வல்லமை பெற்றிருந்தமையைச் சுவாமிகள் இயற்றியுள்ள 'கந்தப்பெருமான் வெண்பா அந்தாதி' 'வெண்பாமாலை' போன்ற நூல்களிலிருந்து அறிந்தின்புற முடிகிறது தனிக்குறிலும் தனிநெடிலுமாக வெண்பா முழுவதும் வருமாறு பாடி ஒருவகை ஓசை நயத்தை உண்டு பண்ணும் திறத்தை இப்போது கண்டு தெளிவோம்.

*''குமர! குழக! குமரி யுதவும்*
*அமர! எயின ரதிப!-எமது*
*தகவு புலிய தனிலொ ளிரவென்*
*அகமு ளுறுக அணி''*

**(தனிப்பாடல் திரட்டு. 318)**

*''வேலோனே! வானோவா! மேலோனே! வீடே-*
*காலோனே! மாயானே! காணாதே-மாலானேன்*
*நீவாவா வாராதே(ன்)நேரீதோ?-ஆகாதே*
*பாவாதீ தா!மாகோ பா.''*

**(மேலது, 319)**

மேற்கண்ட இரு வெண்பாக்களில் தொல்காப்பிய நெறியில் முறையே குறுஞ்சீர் வண்ணத்தையும் நெடுஞ்சீர் வண்ணத்தையும் கண்டின்புற முடிகின்றதன்றோ! பத்தொன்பதாம் நூற்றாண்டுப் படைப்பாளர்கள் குறித்த நெடிய ஆய்வை நிகழ்த்தியுள்ள முனைவர் ச.சிவகாமி என்பார். ''எண்ணற்ற கவிதைகள் படைத்தவர் என்ற நிலையிலும் பல புதுமைகளைப் படைத்தவர் என்பதிலும் முதல்வராகத் திகழ்கிறார் இவர்''(பத்தொன்பதாம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கியம், ப.62) என்று மகுடம் சூட்டுவது சாலப்பொருந்தும்.

### கட்டளைக்கலித்துறை கைவந்த கலையாதல்

கட்டளைக்கலித்துறைப்பாடல்கள் அமைப்பை 'வாள் அலங்காரம்' 'திரிபு மஞ்சரி', தமிழலங்காரம்' 'போன்ற நூல்களில் பயன்படுத்தியுள்ளார். கட்டளைக் கலித்துறையில் பாடுவது சுவாமிகளுக்குக் கைவந்த கலையாக இருந்துள்ளது என்பதனைச் சொல்லித்தான் ஆகவேண்டும். கட்டளைக்கலித்துறை எழுத்தெண்ணிப் பாடப்படுவதாகும். நேரிசையில் தொடங்கினால் ஒற்று நீக்கிப் பதினாறு எழுத்துகளும், நிரையசையில் தொடங்கினால் பதினேழு எழுத்துகளும் அமையப் பாடுவதாகும்.

*''தொண்டன் தமிழ்விருப்பால் அவன் வேண்டொரு தோகை முன்போய்ப்*
*பண்டன் புரைபயின் றான்தரும்பாலன், பழனிவெற்பில்*
*தண்டம் புனைந்துநிற் கும்திருக் கோலம் தனையுணர்ந்தார்க்கு*
*அண்டம் சிறுகடு காமெனத் தோற்றும் அகத்தே''*

**(பழனித் திருவாயிரம் அலங்காரம், 85)**

இதுநேரிசையில் தொடங்கிய கட்டளைக்கலித்துறைப் பாடலாகும்.

''பெரும்பாலும் யாப்பின் அனைத்து வகைகளிலும் கவிபாடியிருக்கும் புலவர் யமகம், திரிபு பாடுவதிலும், மிகுந்த தேர்ச்சியுடையவராகக்

காணப்படுகிறார். '(தமிழ் இலக்கியக் கொள்கை-தொகுதி 6, ப.289) என்று முனைவர் ச.சிவகாமி கூறும் ஆய்வுரை இவண் கருதத்தகும்.

## *கலிப்பாவில் புலி*

கலிப்பாவின் பல்வேறு வடிவங்களில் வண்ணச்சரபர் ஆழ்ந்த புலமை உடையவர் என்பதனை உறுதிப்படுத்தும் வகையில் அமைந்துள்ளது அவர் இயற்றியுள்ள 'சடகோபர் சதகத்தந்தாதி' நூல். நூலின் தொடக்கத்தில் கொச்சகக் கலிப்பாவில் முதல் 11 பாடல்களைப் பாடியுள்ளார். கலிப்பாவகைகளில் பாடுவதில் இவர் புலி எனலாம்.

*"தண்பதுமப் பூம்பொகுட்டிற் சதுமுகனை ஈன்றருளும்*
*பெண்பெருமாள் வாழுரத்தெம் பெரியபெரு மாளருளால்*
*விண்பதியும் மண்பதியும் வெறுத்துமுத்தி வீடெய்த*
*வண்புளிக்கீழ் வீற்றிருந்த மாறனிரு தாட்டுணையே"*

**(சடகோபர் சதகத்தந்தாதி, 1)**

இதனையடுத்த பதினோரு பாடல்கள் கலித்தாழிசையில் வரக் காண் கிறோம். மேலே நாம் பார்த்த கொச்சகக்கலிப்பா கலிப்பாவிற்குரிய உறுப்புகள் எல்லாம் இன்றிப் பெரும்பாலும் காய்ச்சீர்களைப் பெற்று வரும்; கலிப்பாவுக்குரிய துள்ளல் ஓசை குறைந்தும் வருவதுண்டு. "கொச்சகக் கலிப்பாச் சிறப்பற்றதென அக்காலத்தில் கருதப்பட்டிருப்பினும், இக் காலத்தில் இது செய்யுளை இனிதாக இயற்றுதற்கு ஏற்றதாய் உள்ளது. பெரியபுராணத்தில் சேக்கிழார் எளிதாகப் பாடும் தன்மையில் இக்கொச்சகக் கலிப்பாவையும் பயன்படுத்தியுள்ளார் என்பதையறிக" (கவிஞராக,ப.180) எனப் பேராசிரியர் அ.கி. பரந்தாமனார் மொழிவது இவண் நோக்கத்தகும். சுவாமிகள் இக்கலிவெண்பாவைப் பயன்படுத்தியுள்ள பாங்கு நன்கு தெளிவாகின்றது. கலித்தாழிசை என்பது கலிப்பா இனம் சார்ந்த தாழிசை. இதனைக் கலியொத்தாழிசை என்றும் கூறுவர் என்கிறது யாப்பருங்கல விருத்தியுரை. சுவாமிகள் இயற்றியுள்ள அளவடியாய் வந்த கலித்தாழிசை வருமாறு;

*"வேத னைத்தரும் மென்மலர் உந்தியான்*
*பாத மேமிகப் பற்றிய பற்றுளேன்*
*ஏதம் எய்தி இடைந்திடல் என்கொலோ*
*போத ஞானப் புளிக்குரு கூரனே"*

**(சடகோபர். 16)**

கலிவிருத்தாமாவது "அளவடி நான்கின கலிவிருத் தம்மே" என்கிறது யாப்பருங்கலம்.இதில் சந்தம் பொருந்த வருமானால் அதனைச் 'சந்தக் கலிவிருத்தம்' என்றழைப்பர்.

*''நஞ்ச யின்றவன் ஆதியர் நானுற நால்வாய்க்*
*குஞ்ச ரம்புரந் தவனைஉட் கொண்டுதென் குருகைத்*
*தஞ்ச மாயவன் தனையவன் றான்எனச் சாற்றார்*
*வஞ்ச கக்கொடுந் தகையினர் என்பது வழக்கே.''*

**(சடகோபர்.31)**

சுவாமிகளின் மேற்கண்ட பாடலில் சந்தம் பொருந்தியுள்ளமை கண்கூடு.

**ஆசிரிய விருத்தங்கள் பல**

*''.....குறைவில்தொல் சீரகவல்*
*விருத்தம் கழிநெடில் நான்கொத் திறுவது மெல்லியலே''*

**(யாப்பருங்கலக் காரிகை. 35)**

என்னும் இலக்கணக் கூறுபாட்டிற்கு ஏற்ப, அறுசீர் விருத்தம், எழுசீர் விருத்தம், எண்சீர் விருத்தம் எனப் பல வகைகள் உண்டு. இவற்றைக் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம் என்பர். இவற்றிலும் சந்த வேறுபாடுகள் வருமாறு புலவர்கள் பாடித் தம் புலமையைப் புலப்படுத்துவர்.

*''பச்சைமா மலைபோல் மேனி பவளவாய் கமலச் செங்கண்*
*அச்சுதா அமரர் ஏறே! ஆயர்தம் கொழுந்தே! என்னும்*
*இச்சுவை தவிர யான்போய் இந்திர லோகம் ஆளும்*
*அச்சுவை பெறினும் வேண்டேன் அரங்கமா நகரு ளானே''*

**(நாலாயிரம், 873)**

என்று சந்தச்சுவை பொதுளத் தொண்டரடிப்பொடியாழ்வார் பாடுவர். பல்வேறு வகை விருத்தப்பாக்களே தமிழ் இலக்கிய உலகில் தனியாட்சி செலுத்தக் காண்கிறோம். இதற்குச் சுவாமிகள் விதிவிலக்கு அல்லர். அவர் தம்முடைய பங்களிப்பைச் செய்துள்ளமைக்கு ஒரு சான்று காண்போம்.

*''நான்முகத் தொருவன் சிந்தனை வலியால்*
*நல்கிட வந்தார் ஞானம்உற் றுய்ய*
*மேன்முக ளவத் தக்ககல் லாலில்*
*விருப்பமுற் றளித்த மெய்ம்மருந் தருள்வீர்*
*பான்முலைச் சிவைசொற் படிசெயுந் தகையீர்*
*பத்தியுள் ளவர்க்கே பயன்தரும் பழையீர்*
*மான்முதற் தேவர் அனைவருங் கூடி*
*வழுத்திய வேளூர் வைத்திய னாரே''*

**(வேளூர் வைத்தியனார்பதிகம். 6)**

சுவாமிகள் பதினாறுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தமும் பாடித் தம் புலமைச் செழுமையைப் பதிவு செய்துள்ளார். வண்ணச்சரபர்

கலிநிலைத்துறை, வெண்டளைக் கலிப்பா, கட்டளைக் கலிப்பா, வஞ்சி விருத்தம், மருட்பா,பஃறொடை வெண்பா, குறள் வெண்பா எனத் தமிழ் யாப்பிலக்கணத்துள் கூறப்பெறும் எல்லாப் பாவகைகளையும் பாஇனங்களையும் பின்பற்றித் தம்முடைய பாட்டுக்களத்தில் சதுரப் பாட்டுடன் பாடி வெற்றி பெற்றுள்ளார் என்றால் மிகையன்று.

## சித்திரகவியாக ஒளிர்தல்

*''சித்திரகவி யாறும்பின் தேற்றுமட்ட நாகபந்தம்*
*ஒத்த கவியுற்று முள்ளவெலாம்-வைத்துரைத்தல்*
*அத்ரவிழிப் பெண்ணே அணங்கே மடமானே*
*சித்ரக்கவி பாட்டென்றே செப்பு''*

**(பிரபந்தத் திரட்டு, 50)**

எனச் சித்திரகவியின் வகைகளைச் சுட்டும் 'பிரபந்தத்திரட்டு', 'தண்டியலங்காரம்', 'மாறனலங்காரம்' இனைய அணி இலக்கண நூல்களிலும் இதன் விளக்கம் கூறப்பட்டுள்ளது. பரிமாற்கலைஞர் 'சித்திரகவி விளக்கம்' என்றொரு நூலை யாத்துள்ளார். பாம்பன் குமரகுருதாசசுவாமிகளும் வண்ணச்சரபம் தண்டபாணிசுவாமிகளும் இத்துறையில் தேர்ச்சிமிக்கிருந்தனர். தண்டபாணிசுவாமிகள் பாடியுள்ள சித்திரகவிகள் அவர்தம் பல்வேறு தொகுதிகளுள் உள்ளன. சித்திர கவிகளால் ஆகிய நூலுக்குச் 'சித்திரகவிமாலை' என்று பெயரமைந்துள்ளது. வண்ணச்சரபர் பாடியுள்ள சித்திரகவிகள் வருமாறு. அம்பிகை எழுகூற்றிருக்கை, எண்கூற்றிருக்கை, சமரசத் தாசாங்கக் கூற்றிருக்கை, சிவபெருமான் ஒன்பது கூற்றிருக்கை, திருமால் எழு கூற்றிருக்கை, திருவல்லிக்கேணி எழுகூற்றிருக்கை, விநாயகர் எழு எழுகூற்றிருக்கை, விஷ்ணு ஒருபது எழுகூற்றிருக்கை. 'சித்திரகவிகள்' என்ற இவரது நூல் செய்யுள் வகைகளில் பயிற்சியையும் கைவந்த ஞானத்தையும் வெளிப்படுத்துவது எனலாம். பாட்டுக்களத்தில் இசைப்புலமையும் வண்ணச்சரபரின் புலமை வீச்சில் சேர்ந்திருந்தது. இதன் விளைவு சுவாமிகளைக் கீர்த்தனைப் பாடல்களை இயற்றி அத்துறையிலும் தடம் பதிக்குமாறு தூண்டிற்று. ''தமிழோ டிசைபாடல் மறந்தறியேன்'' என்னும் திருமுறையில் பயிற்சியும் பற்றும் உடையவராகச் சுவாமிகள் விளங்கியமையினால் கீர்த்தனைகளையும் பாடித் தம்முடைய இசைப் புலமையையும் வெளிப்படுத்தியுள்ளார்.

*'எழுத்தறியத் தீரும் இழிதகைமை தீர்ந்தான்*
*மொழித்திறத்தின் முட்டறுப்பான் ஆகும்-மொழித்திறத்தின்*
*முட்டறுத்த நல்லோன் முதனூல் பொருளுணர்ந்து*
*கட்டறுத்து வீடு பெறும்''*

என்பதனை அறிந்து வாழ்வில் உணர்ந்து பின்பற்றிய பெருந்தகைமைக்கு உரியவர் வண்ணச்சரபர் என்பது சாலப் பொருந்தும்.

### *நாட்டுப்பற்றில் நாட்டம்: காலச்சூழல்*

வண்ணச்சரபம் தண்டபாணிசுவாமிகள் வாழ்ந்த காலம் தமிழ்நாட்டில் மட்டுமன்று இந்தியத் திருநாடெங்கும் ஆங்கிலேயர் கொடிகட்டிப் பறந்த காலமாகும். ஆங்கிலேயர் ஆட்சியில் 'இம்மென்றால் சிறைவாசம் ஏன் என்றால் வனவாசம்' என்றிருந்தது. 1806- ஆம் ஆண்டிலேயே வேலூரில் சிப்பாய்களின் எழுச்சி தோன்றியது. அதுவே இந்திய உரிமைப் போராட்டத்தின் தொடக்கம் என்று வரலாற்று வல்லுநர்கள் அறுதியிட்டுச் சொல்கின்றனர். வேலூர்ப் புரட்சியின் 200-ஆவது ஆண்டுவிழா அண்மையில் (10.07.06) வேலூரில் கொண்டாடப்பட்டது. தமிழகம் திப்புவுக்கு முன்பே விடுதலை உணர்வில் மலர்ச்சி கொண்டது. ''ஆங்கில அரசு ஆண்ட காலகட்டத்தில் அரசு தங்களிடம் பணிபுரிந்த சிப்பாய்களின் சீருடையில் மாற்றம் கொண்டுவந்தது. அந்தச் சீருடைகளைச் சிப்பாய்கள் துப்பாக்கி முனையில் கிழித்தெறிந்த இடம் வேலூர்! நடந்த நாள் தான் சூலை 10, 1806...'' இதற்கு எட்டுத் திங்களுக்கு முன் படைவீரர்களுக்குச் சென்னையிலுள்ள ஆங்கிலத் தளபதி அனுப்பிய கடிதம் ஒன்று படைவீரர்களைக் கொந்தளித்து எழுமாறு செய்தது. ''இந்தியச் சிப்பாய்கள் புதுவகையான தலைப்பாகையை அணிய வேண்டும். மார்பில் சிலுவை போல் ஒன்றைத் தொங்க விடவேண்டும்'' என்பதே அந்தக் கட்டளை. அதோடு படை வீரர்கள் யாரும் நெற்றியில் மதக்குறி இடக் கூடாது. ஒரே மாதிரியான அளவான மீசை வைத்திருக்க வேண்டும். காதில் கடுக்கன் அணியக்கூடாது என்றும் அடுத்தடுத்து ஆணைகள் வந்தமையால் இவை இந்து மற்றும் இசுலாமியச் சமூகத்தினரைக் குறிவைத்துத் திணிக்கப்பட்ட ஆணைகள். இதனால் ஆத்திரமுற்ற இந்தியப் படைவீரர்கள் கலகத்திலும் புரட்சியிலும் 10.07.1806-இல் ஈடுபட்டனர். (ப. திருமா வேலன், ப.8, தினகரன் நாளேடு, 10.07.2006). இத்தகைய ஆணைகள் தமிழகத்தில் அன்றைய மக்களிடமும் ஒரு வேகத்தை - சுதந்திர உணர்வை - உருவாக்கி யிருக்க வேண்டும். இதுவே 50-ஆண்டுகள் கழித்து 1856-இல் சிப்பாய்க் கலகமாக இந்திய நாடெங்கும் உருவெடுத்தது. இக்காலத்தில் சுவாமிகள் வாழ்ந்தவராகையினால் சமுதாய, அரசியல் நெருக்கடிகள் அவரையும் தாக்கியிருக்கத்தான் செய்யும்!

### *வள்ளலாரும் வண்ணச்சரபரும்*

மக்கள் மனவேதனையை உணர்ந்து சுவாமிகள் தம்முடைய உயிரிரக்கக் கொள்கையையும் இணைத்துக் கொண்டு நாட்டுப்பற்றை வெளிப்படுத்த

எண்ணினார். அதன் வடிவம்தான் 'ஆங்கிலியர் அந்தாதி' ஆகும். நூலறிவுடன் நுண்ணறிவும் பெற்ற சுவாமிகள் இறையுணர்வுடன்நாட்டுப் பற்றையும் இணைத்துப் பேசும் அரிய முயற்சியில் ஈடுபட்டார். சுதேசிச் சமய நம்பிக்கைகளின் இன்றியமையாமையை எடுத்துக்காட்டுவது ஒன்று; ஆறு சமயங்களிடையே வேறுபாடு இல்லை என்பதை முன் நிறுத்தி முருகனை முழுமுதற் கடவுளாகவும் பொதுமை வாய்ந்த கடவுளாகவும் காட்ட முனைந்தமை மற்றொன்று. இந்த அடித்தளத்திலிருந்து வெளிவந்ததே சுவாமிகளின் பாட்டுணர்வும் நாட்டுணர்வும். சமகாலத்தில் வாழ்ந்த வள்ளலார்,

*"கருணையிலா ஆட்சி கடுகி ஒழிக*
*அருணயந்த நன்மார்க்க ராள்க - தெருணயந்த*
*நல்லோர் நினைத்த நலம்பெறுக நன்றுநினைத்*
*தெல்லோரும் வாழ்க விசைந்து"*

**(திருவருட்பா ஆறாம் திருமுறை, சமரசநிலை)**

என்று கருத்துரைக்கக் காண்கின்றோம். வள்ளலார், சுவாமிகளைப் போல அவர்தம் எண்ணத்தை - வேகத்தைக் காட்டவில்லை. இது பற்றிக் கருத்துக் கூறவந்த சிலம்புச் செல்வர் ம.பொ. சிவஞானம், "வள்ளலார் பிரிட்டிஷ் பேரரசால் மக்களுற்ற அல்லல்களை அறிந்திருப்பினும் அது பற்றி அவர் ஆத்திரம் காட்டவில்லை. காரணம் அதைவிடப் பெருங்கொடுமைகளாகச் சாதி, மத வருணங்களின் பெயர்களால் மக்கள் அனுபவித்ததைப் பார்த்து வருந்தியதுதான்" (வள்ளலார் கண்ட ஒருமைப்பாடு, ப.110) என்கிறார்.

சுவாமிகள், ஆங்கிலேயர் ஆட்சியில் மக்கள் ஒழுக்கக் கேடான பழக்கங்களில் - அதாவது கள் குடித்தல், கஞ்சாப் புகைத்தல் போன்ற தீய பழக்கங்களையும் பழகத் தொடங்கியமையினைக் கண்டு மனம் வெதும்பி வேதனையுற்றார். இவ்வேதனையை,

*"தேறிடுங்கட் குடியருக்கே அடிமையென நின்றோர்*
*தீராத கஞ்சாவைத் தினம்தினம் வேட்பார்*
*நாறியநீர் மேன்மேலும் வழிதரவே கொள்வார்*
*நளிர்பழனி மலைக்குகனை நம்புதலு மாட்டார்*
*ஆறிரண்டு சமயமும்தன் சம்மதமென் றேற்பார்*
*அறங்கள்வகை செய்வாரை அடியோடு கெடுப்பார்*
*பாறினத்தீம் பண்டமுண்டு பார்முழுது மலைவார்*
*பாவலருக் கிதனிரண்டு பட்சமுந்தோன் றிடுமே"*

**(பழனித் திருவாயிரம்: கலம்பகம், 40)**

என்னும் பாடல்வழி வெளிப்படுத்தக் காண்கின்றோம்.

## வறுமையும் வரிக்கொடுமையும்

சுவாமிகள் வாழ்ந்த நாளில் ஆங்கில அரசு நம் செல்வத்தைச் சுரண்டிச் சென்றது. ஆட்சியாளர்களுக்கு மக்கள் நலனில் ஆர்வம் இல்லை. வரிக்கொடுமையால் மக்கள் வறுமையுற்றனர். இத்தகைய கொடுமைகள் அன்று நாட்டுப்புறப் பாடல்களில் வெளிப்படுத்தப்பட்டன. இதோ ஒரு தெருப்பாடல்:

*''ஆட்டுத் தோலுக் கிடங்கேட்டு*
*அண்டி வந்திருந்த பூனை - நம்*
*நாட்டினில் புகுந்து இப்போ*
*நர்த்தனம் செய்யுது பூனை''*

**('தேசபக்திப் பாடல்', ஆர்.பி.எஸ். மணி தொகுத்தது)**

இந்த நிலைதான் 19-ஆம் நூற்றாண்டிலும் இருந்தது. இதனாற் கொதிப்படைத்த வண்ணச்சரபர்,

*''இங்கிலீசுக்காரர் அநியாயக் கொடுமை*
*என்னென்று சொல்வேன் அம்மா!*

*தொடுப்பு*

*பங்குக்குத் தகப்பன்பால் மகன்சண்டை செய்வதும்*
*பாரிக்கு நாயகன் பயப்படு கின்றதும்*
*எங்கும் பசுக்கள் மேய்தற் கிடமற்றுப் போனதும்*
*எளியவர் வழக்கிழந் திடுவதும் முதலாக (இங்கிலீசுக்காரர்)*

*உடன்தொடுப்பு*

*சப்பாத்திக் கள்ளிக்கும் தரிசிக்கும் தீர்வை*
*தடையறக் கொடுத்திடத் தண்டங்கள் செய்வதும்*
*மெய்ப் பார்ப்பார் வீட்டினிற் பிறந்த பிள்ளைகளும்*
*வேதங்கள் படியாமல் வேலைகேட் டலைவதும்*
*துப்பாக்கி எனும்திருட் டாயுதம் வாள்முதற்*
*சொல்லும்நல் ஆயுதத் தொகைகளை வெல்வதும்*
*பொய்ப்பாட்டுக் கவிஞர்க்குப் புகழ்ச்சியும் மெய்ப்பாடற்*
*புலவர்க் கிகழ்ச்சியும் பொலிவதும் போலுள்ள*
*(இங்கிலீசுக்காரர்)*

*உயிர்ப்பசுத் தோல்உரிக் கின்ற பொல்லாரையம்*
*ஒறுத்திடத் தக்கவன் ஒருவன் இல்லாமையும்*
*பயிர்க்கும் மலத்தினுக்கும் எலும்பிற்கும் விலையீந்து*
*வாங்குகின் றோர்பெரு வாழ்வடைந் திடுவதும்*

*செயிர்க்கு வித்தாகிய கள்ளும் சாராயமும்*
*தேனுக்கும் மேலாய சிறப்புற்று விளங்கலும்*
*பயிர்த்தொழில் செய்வோர்க்கும் மேலான லாபங்கள்*
*பாவி வக்கீல்கள் படைப்பதும் ஆதியாம்*
*(இங்கிலீசுக்காரர்)*

*முடிப்பு*

*பசுவைத் தெய்வமென்றோம் சதுர்வேத சாரத்தின்*
*பயன்களெல்லாம் வெறும் பாழே போல் மறைந்ததும்*
*கொசுகொத்தச் சில்லரைத் தேவதைகளை நம்பிக்*
*கொண்டாடுகின்றவர் குதுகுல மலிந்ததும்*
*அசுவத் தருமன் ஆறுமார் முதலோர் பெற்ற*
*ஆண்மைகள் எல்லாமும் அவமாகிப் போனதும்*
*சிசுவிற் கொப்பவே சிற்றெறும்பையு மெண்ணும்*
*திருப்புகழ் உடையவர் தியக்கமும் காட்டிடும்*
*இங்கிலீசுக்காரர் அநியாயக் கொடுமையை*
*என்னென்று சொல்வேன் அம்மா!*

***(கீர்த்தனைப் பாடல் திரட்டு, ப.15)***

ஆங்கிலேயர் ஆட்சியில் கடுமையான வரி விதிப்புகளும், கொடுஞ் சட்டங்களும், சமுதாய நடைமுறைகளும் சிக்கலுக்குள்ளாயின என்பதைச் சுவாமிகள் உணர்ந்து நாட்டுப்பற்றால் அறச்சிந்தனையுடன் பாட்டிலே வைத்துப் பாடத் துணிந்தமை பெறப்படும்.

''இலக்கியம் என்பது சமூக உணர்வுகளையும் சிந்தனைகளையும் அச்சமூகத்தில் வாழும் மக்களின் வாழ்க்கையிலே தோன்றும் உணர்ச்சி களையும் மொழிக் குறியீடு கொண்டு தருவதாகும்''(தமிழ் இலக்கியத்தில் மதமும் மானுடமும், ப.136) என்னும் கா.சிவத்தம்பியின் கருத்து ஒப்பு நோக்கத்தகும். வரிக்கொடுமையைக் குறித்து,

*"ஈனமலியும் கழுதைக்கும் நாய்க்கும் இறைகொளற்கு*
*மானம் அனுவள வேணும்இல் லாக்கொடு வஞ்சகரைக்"*

***(ஆங்கிலியர் அந்தாதி, 76)***

குறிப்பிடுவதோடு நில்லாமல், தாம் இயற்றியுள்ள ''மனுநெறித்திரு நூலுள்ளும் சுவாமிகள் பின்வருமாறு கூறுகின்றார்:

*"உறுக்கிப் பறிப்பாருக் கொருகோடி மேலே*
*இறுக்கிவரி கொள்ளும் இறை"*

***(மனுநெறித். 10.6)***

7

சுவாமிகள் மனம் வெந்தும் நொந்தும் வேதனையுடன் கூறியுள்ள கருத்துகளுடன்.

*"கடவுளால் சிருஷ்டிக்கப்பட்ட கடலுப்புக்குத் தீர்வையா?*
*கண்ணிருந்தும் கடவுளுக்குக் கவர்மெண்டின்மேல் பார்வையா?*
*இடங்கொடுத்த தாலேஇந்துக் கிடையூறாச்சு சோர்வையா"*

***(தேசியம் வளர்த்த தமிழ், ப.85)***

என்ற தெருப்பாடல் இணைத்துக் காணத்தகும். அம்மட்டோ! நம் நாட்டில் விளைந்த பொருளுக்கு விலை ஆங்கிலேயன் வைப்பது அன்று நடைமுறையில் இருந்தது போலும்! இதனைச்சுட்டும் ஒரு நாட்டுப் பாடல் வருமாறு:

*"ஊரான் ஊரான் தோட்டத்திலே*
*ஒருவன் போட்டானாம் வெள்ளரிக்காய்*
*காசுக்கு ரெண்டு விற்கச் சொல்லி*
*காயிதம் போட்டானாம் வெள்ளைக்காரன்*
*வெள்ளைக்காரன் பணம் சின்னப்பணம்-அது*
*வேடிக்கை செய்யுதாம் வெள்ளிப்பணம்*
*வெள்ளிப் பணத்துக்கு ஆசைப்பட்டு-நீ*
*வேஷங் குலைந்தாயே வீராயி."*

***(தேசியம் வளர்த்த தமிழ், ப.82)***

மேலே கண்டவாறு ஆங்கில அரசின் வன்கொடுமைச் செயல்கள் சுவாமிகளின் உள்ளத்தை மிகுதியும் காயப்படுத்தின; அவை ஆறாத வடுக்களாக விளங்கின. பசுக்கொலை, கட்குடி, சாராயம் குடித்தல், புலால் உண்ணுதல் என்பனவும் சுவாமிகளை நாட்டுப் பற்றுணர்வோடு அவற்றைப் பாட்டில் பதிவு செய்யும் வண்ணம் தூண்டின. அத்தூண்டுதலின் வெளிப்பாடே 'ஆங்கிலியர் அந்தாதி' யாகும். ஊர்தோறும் உலா வந்து இறையுணர்வுப் பாக்களால் ஆறு சமயக்கடவுளரையும் பாடிப் பரவிய சமயத் துறவிக்கும் நாட்டுப்பற்று இருக்கும். அது கிளர்ந்து துடிக்கும்; வெடிக்கும் என்பதனை 'ஆங்கிலியர் அந்தாதி' உறுதிப்படுத்துகின்றது.

## கொடுமையின் வெளிப்பாடு

வண்ணச்சரபம் தண்டபாணிசுவாமிகள் தம்முடைய 'ஆங்கிலியர் அந்தாதி'யில் ஆங்கிலேய ஆட்சியின்போது நிகழ்ந்த கொடுமைகளைப் பல பாடல்களிலே சுட்டிச் சென்றுள்ளார். அவர் தாமே தம் கண்காண நேர்ந்த கொடுமைகளைப் பின்வருமாறு கூறுவார்:

*"ததிகண்டொவ் வோர்கொடு நீதிஉண் டாக்கித் தரையினரும்*
*அதிவிதத் துன்பம்என் கண்காணச் செய்திடும் ஆங்கிலியர்...."*

**(ஆங்கிலி.3)**

*"இளங் கன்றாதி யுங்கொல்லும் ஆங்கிலியர்"*

**(ஆங்கிலி.31)**

*"பசுக்கொலை செய்யும் வம்பர்"*

**(ஆங்கிலி.83)**

என வரும் பாடல் அடிகள் சான்றாகும். ஆங்கில ஆட்சியில் பல்வேறு வகையில் நாட்டு மக்களுக்கு வரிகள் விதிக்கப்பட்டன. இக்கொடுமை களைச் சுவாமிகள்,

*"படிமாது கோவெனக் கூவும் அநீதி பலபுரிந்து*
*கடிநாய்க்கும் தீர்வைப் பணங்கொள்ளும் வஞ்சக்கயவர்..."*

**(ஆங்கிலி.73)**

எனச் சுட்டிக் செல்வதால் அறிய ஒண்ணும்.

இந்த மண்ணில் கழுதைக்குக்கூட வரிவாங்கிய கொடுமை ஆங்கிலேயர் ஆட்சியில் நடைபெற்றது. இதனை,

*"ஈன மலியும் கழுதைக்கும் நாய்க்கும் இறைகொளற்கு*
*மானம் அணுவள வேனும்இல் லாக்கொடு வஞ்சகரை...."*

**(ஆங்கிலி.76)**

என்ற பாடல் வழி இவர் சாடியுள்ளார். சமய நோக்கில் சுவாமிகள் கொலை தவிர்க்கும் அறச்சிந்தனை வயப்பட்டு ஆங்கிலேயரை - அவர்தம் ஆட்சியின் கொடுமைகளை வெளிப்படுத்தியுள்ளமை இப்பாடல்கள் வழி அறியலாகும்.

## ஆங்கிலேயர்க்கு அடைமொழி

ஆடுகளையும் பசுக்களையும் கொலை செய்து உண்கின்ற கொடுமையைச் செய்த ஆங்கிலேயரைக் குறிக்க வந்த சுவாமிகள், பல்வேறு அடைமொழித் தொடர்களைக் கையாண்டுள்ளார்.

*"புல்லறி வாண்மை பொலிஆங் கிலியர்" (1)*
*"திருட்டுத் தன்மை கைவந்த ஆங்கிலியர்" (7)*
*"கொடுங்கோ லரசர் சிகாமணி யானகுணுங்கர்களை" (13)*
*"கன்றேன முந்தினும் ஈனர்" (25)*
*"மிக்க துயர்செய்யும் ஈனப் புலையர்" (30)*

இவ்வாறு சுவாமிகள், ஆங்கிலே யரைக் குறித்து வழங்கியுள்ள முன்னொட்டாகிய அடைமொழிகளின் வாயிலாகத் தம்முடைய உள்ளக் கொதிப்பை நன்கு புலப்படுத்தியுள்ளார்.

### *தெய்வங்களிடம் சுவாமிகள் வேண்டல்*

தமிழ்ச் சமுதாயத்திற்கு இழைக்கப்படும் கொடுமைகள் தமிழ் மக்களின் சமய நம்பிக்கைகளையும் தாக்கும் என்று சுவாமிகள் எண்ணியிருத்தல் வேண்டும். அதன் விளைவே இவ்வாங்கிலியர் அந்தாதி. இதன் உள்ளே சுவாமிகள் சைவம், சாக்தம், வைணவம், காணாபத்தியம், கௌமாரம், சௌரம் ஆகிய ஆறு சமயங்களின் தெய்வங்களிடத்தும் ஆங்கிலியர் நடத்தும் ஆட்சியின் கொடுமைகளைக் கூறி முறையிடுகின்றார். தெய்வங்களைச் சுவாமிகள் விளித்து வேண்டுவதிலும் ஒரு புதுமையைச் செய்துள்ளார். ஆங்கிலேயரின் கொடுமைகளை வேரோடு சாய்த்து மாய்க்கத் தக்க ஆற்றல் மிக்க வீரன் ஒருவனை விரைந்து படைக்குமாறு இவர், அத்தெய்வங்களிடம் வேண்டுகோள் விடுக்கின்றார்.

*"விழிஎதிர் கண்ணனைப் பார்த்தனைப் போலும்வல் வீரர்களைப்*
*பொழிதரச் செய்திறல் இல்லைகொல்லோ"*

**(ஆங்கிலி, 6)**

என்று இவர் பொதுத்தெய்வத்திடம் முறையிடுவார்.

*"தெய்வங்கள் கோடியுள் ஒன்றேனும் ஆன்றிணம் தின்றுவப்பார்*
*பொய்வந்த நீதிகண்டு உட்புழுங்காத புதுமை என்னோ*
*மைவந்த கண்மடவாள்எவ னேனும்அவ் வஞ்சகரைக்*
*கொய்வண் குலாவுகைச் சேய்உத வாத கொடுமைஎன்னே"*

**(ஆங்கிலி. 12)**

என்று சுவாமிகள் வேண்டுவர். ஆங்கிலேயரை அழிக்கச் சற்குருநாதனாகிய முருகனே வருதல் வேண்டும் (26) என்றும், இம்மண்ணில் வந்து தோன்றி ஆங்கிலேயரை அழிக்கும் நாளே நன்னாளாகும் (38) என்றும், உமையுடன் ஒரு பாதியாய் உறையும் சிவன் நெற்றிக்கண்ணிலிருந்து இவர்களை அழிக்க ஒரு சேயைத் தந்திலனே (63) என்றும் சுவாமிகள் வேண்டும் பாடல்களில் பழம்புராணக் கருத்துகள் எதிரொலிக்கின்றன. இத்தகைய கொடுமைகள் நிகழ்கின்ற காலத்துத் தாம் வாழுமாறும், அவற்றைக் காணுமாறும் ஏற்பட்டமை தம் தீவினையே என்கிறார் இவர் (7).

*"விழுமிய நான்மறைச் சீலமெல் லாம்குன்ற, வெந்நிணந்தேர்*
*கழுகனை யார்களிக் கூத்தாடி வாழ்கொடுங் காலத்தென்னை*
*அழுது வருந்தப்படுத்திடும் தீவினை..." (57)*

என்று தம்மையே இவர் நொந்து கொள்கின்றார்.

### ***களம் கண்ட பாடல் மறவர்***

வண்ணச்சரபர் அருட்பாடல்கள் பாடியருளிய பெரும்புலவர் மட்டுமல்ல; தமிழ் யாப்பியல் நெறியை - பல பாடல் வடிவங்களில் பயன்படுத்திப் பாட்டுக்களம் கண்ட பாடல் மறவராக விளங்கியுள்ளார். இறையுணர்வு கொண்டு சமயநெறி வாழ்வோர் சமுதாயத்திலிருந்து விலகி நிற்பவர்களாகவே இருப்பார்கள் என்ற எண்ணத்தைத் தண்டபாணி சுவாமிகள் 'ஆங்கிலியர் அந்தாதி' பாடித் தகர்த்தெறிந்து தவிடு பொடியாக்கி விட்டார். அவர் வாழ்ந்த கால நிலையில் நாட்டுப் பற்றுடையவராய் விளங்கியமை அவரைப் பிற சமயவாணர்களிடமிருந்து வேறுபடுத்திக் காட்டுகின்றது எனலாம்.

*"ஆங்கிலியர் இங்கே அமைந்தாட்சி செய்நாளில்*
*தாங்கு புகழ்ப்பசுவைச் சாடியுண்ணும் - தீங்கினைக்கண்*
*டுள்ளமிக நொந்தே உறுமரசும் வீழ்கவென*
*விள்ளுமிந்நூல் எத்திறத்தும் மேல்"*

**- புலவர் தி.மு. சங்கரலிங்கம், ஆங்கிலியர் அந்தாதி, ப.6**

---

# 6

# தமிழ்க் காதல்

*"எறியும் பசுவும் எறியா தமுத மெறிக்கும் கொப்பம்*
*பிறிவும் குழந்தையுங் கண்ணுறங்கா நிற்கும் பேயினமும்*
*பொறியுந் தியவிடப் பரந்தளு மாடல் புரியுமின்பஞ்*
*செறியுந் தமிழுக் கிரங்காதவர் எவர் தேசத்திலே"*

***(தனிப்பாடல், உ.வே.சா. பதிப்பு, ப.63)***

## தொன்மைத்தமிழ்

இலக்கண இலக்கிய வளத்தால், பண்பாட்டுயர்வால், அறநூல்களின் பெருக்கத்தால், இறைநெறிப் பாடல்களின் உருக்கத்தால் தமிழ் தொன்மை மிக்கது; இனிமை மிக்கது. எனவேதான் இருபதின் எழுச்சிக் கவிஞர், இந்திய உரிமைக்கு இனிய தமிழ்க் கவிதைக்குரல் கொடுத்த பாரதியார்.

*"யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழிபோல்*
*இனிதாவது எங்கும் காணோம்"*

***(பாரதியார் கவிதைகள், தமிழ், 1)***

என்று போற்றிப் புகழ்ந்தார். தமிழின் பெருமையை யார் அறிந்து சொல்ல முடியும்? இதோ குமரகுருபரர்,

*"தமரநீர்ப் புவன முழுது ஒருங்கு ஈன்றாள்*
*தடாதகா தேவி என்று ஒருபேர்*
*தரிக்கவந் ததுவும் தனிமுதல் ஒருநீ*
*சவுந்தர மாறன் ஆனதுவும்*
*குமரவேள் வழுதி உக்கிரன் எனப்பேர்*
*கொண்டதும் தண்டமிழ் மதுரம்*
*கூட்டுண எழுந்த வேட்கையால் எனில்இக்*
*கொழிதமிழ்ப் பெருமையை யார் அறிவார்?"*

***(மதுரைக் கலம்பகம், 196)***

என்று கேள்விக்கணை தொடுப்பார். தமிழ் கதிரவனோடு தோன்றியது என்பதனைத் தண்டியலங்காரப் பாடல் ஒப்பிட்டுப் பேசிக் கதிரவனை விடவும் தமிழ் மேலானது என்று அறுதியிட்டுச் சொல்லும். இதோ அவ்வெண்பா;

*''ஓங்க லிடைவந் துயர்ந்தோர் தொழவிளங்கி*
*ஏங்கொலிநீர் ஞாலத் திருளகற்றும்-ஆங்கவற்றுள்*
*மின்னேர் தனியாழி வெங்கதிரொன் றேனையது*
*தன்னே ரிலாத தமிழ்''*

**(தண்டியலங்காரம், வேற்றுமையணி)**

இத்தகைய வானாளாவிய சிறப்புக்குரிய செந்தமிழை வண்ணச்சரபர் தம் வாழ்நாளில் உயிரினும் மேலாகப் போற்றினார்.

### தமிழே உயர்ச்சி

திருத்தல வழிபாட்டிற்குச் சுவாமிகள், இராயவேலூர் என்னும் நகருக்குச் சென்றிருந்தார். அங்குள்ள முருகனை வழிபட்டுப் பதிகங்களும் திருப்புகழும் பாடி அரங்கேற்றிய பின்பு அவ்வூரிலுள்ள அமுதலிங்கசாமி மடத்தில் தங்கியிருந்தார். அப்போது வடமொழியில் தேர்ந்த வேதியரும், மற்றுமொரு வேளாளருமாகிய இருவரும் தண்டபாணிசுவாமிகளிடம் வந்து வடமொழியே உயர்வென்று வழக்காடினர். தண்டபாணிசுவாமிகள் நாத மாத்திரையில் ஒலிக்கும் ஓசையைக் குறிப்பனவே என்னும் சமரச உண்மையை ஆழமாக அறிந்தவரேனும் தமக்கு முன்னே வைக்கப்பட்ட வாதத்தில் சோர்வுறாமலே மறுமொழி கூறினார். வாளா இருந்தால் தமிழுக்கு இழுக்கு நேர்ந்துவிடுமே என்று எண்ணியவராய் அறைகூவலை ஏற்றார். வந்த இருவரும், ''வேதம் வடமொழியில் உள்ளதனால் வடமொழியே உயர்வு'' என்றனர். வண்ணச்சரபர், ''வேதம் தமிழ் மொழியிலும் உண்டு. ஆனால் ஆட்டை வதைத்து அதன் ஊனை உண்ணுமாறு தமிழ் வேதம் சொல்லவில்லை'' என்றார்.

*''அவிசொரிந் தாயிரம் வேட்டலின் ஒன்றன்*
*உயிர்செகுத் துண்ணாமை நன்று''*

**(திருக்குறள், 259)**

எனத் தமிழ்மறை சுட்டுவதனை அடிப்படையாக வைத்து மறுத்தனர். அவர்களோ ''தமிழ்மொழி அக்கரலோபமுடையது; க,ச,ப,த முதலிய வற்றில் விசாலத் தகுதி (வர்க்க பேதம்) உடைய உயர்மொழி வடமொழி'' என்றனர். சுவாமிகள், ''எ, ஒ என்பன அதில் இல்லை. ற,ன,ழ என்பனவும் இல்லை. ஆகவே அக்கரலோபம் இல்லாதது அம்மொழி என்றது எப்படி?'' என வினவினார். அம்மூவருக்கும் இடையில் தமிழ், வடமொழி பற்றிய தடை விடைகள் முன் இரவிலே தொடங்கி வைகறை வரையிலும் நடைபெற்றன. முடிவு ஏதும் எட்டப்படவில்லை. இரு பிரிவினரும் இசைந்து இணக்கமான முறையில் சங்கத்தில் தலைமைப் புலவராக வீற்றிருந்த குன்றெறிந்த குமரவேளை மனத்தில் நினைந்து திருவுளச் சீட்டுப்

போட்டு உண்மை முடிவை அறிந்து ஏற்றுக் கொள்வோம் என இசைந்தனர். எழுதிப் போட்ட சீட்டுகள் ஏழு. 1.தமிழே உயர்ச்சி 2.வடமொழியே உயர்ச்சி 3.இரண்டும் உயர்ச்சி 4.காலத்திற்கு ஏற்ப உயர்ச்சி 5.குலத்திற்கு ஏற்ப உயர்ச்சி 6.நாட்டுக்கேற்ப உயர்ச்சி 7.பெருமைக்கு ஏற்ப உயர்ச்சி என ஏழு சீட்டுகளை எழுதிச் சுவாமிகளின் பூசனைக்குரிய வேலாயுதத்தின் முன்னே இட்டனர். அவ்வீதி வழியே சென்ற ஓர் இளம் கன்னிப்பெண்ணைக் கொண்டு ஏழில் ஒன்றை எடுக்குமாறு வேண்டினர். சுவாமிகள் கலைமகளை உள்ளத்தில் வழிப்பட்டுச் சிந்தித்தார். அந்தப் பெண் எடுத்த சீட்டில், "தமிழே உயர்ச்சி" என்பதே வந்தது. வாதிட்ட இருவரும் அதனை ஏற்றனர். சுவாமிகள் "நாத தத்துவத்துக்கு அப்பாற்பட்டுள்ள பரம்பொருள் என் குறிப்பில் இணங்கி நிற்குமானால் இதுவே உறுதி என்று கூறி மகிழ்ந்தார். "தமிழே உயர்ச்சி" என்று வந்த சீட்டினைத் தம் கண்களில் ஒற்றித் தலைமீது தரித்துப் பின்னர் தம்முடைய வாயினுள் இட்டு மென்று உண்டார்; உண்டு கூத்தாடினார். அம்மட்டோ!

*"தமிழே உயர்ச்சி எனச் சீட்டுக் கொடுத்த பெருமானே!"*

என்று முடியுமாறு ஒரு திருப்புகழ்ப் பாடலைச் சுவாமிகள் ஓதி மகிழ்ந்தார். இதனையடுத்து அவர் நூறு கட்டளைக்கலித்துறைப் பாக்களால் ஆன 'தமிழலங்காரம்' என்ற சிற்றிலக்கியம் ஒன்றையும் இயற்றினார். தமிழின்பால் இவர் கொண்ட அன்பால் எழுந்த நூலே இது. தமிழ் தண்மையுடையது; வடமொழி வாடைக்காற்றுப் போன்றது; துன்பந்தருவது எனக் கூறித் தமிழின் உயர்வைச் சுட்டுவார் பின்வருமாறு:

*'தண்டமிழ் வாசம் கலந்து குலாவும் தனித்தென்றலும்*
*ஒண்டகை ஆரியச் சீர்தோயும் வாடையும் ஊனில்ஒன்றி*
*மண்டலத் தோர்க்குத் தரும்பயன் றன்னை மதித்தறிந்து*
*கண்ட வயித்தியர் வாய்மேன்மை தாழ்மையைக் காட்டிடுமே"*

**(தமிழலங்காரம், 10)**

தேவார மூவர், திருவாசகத் தேன் வழங்கிய மணிவாசகர் போன்றோர் வாழ்வில் நிகழ்ந்த அற்புதங்களைச் செய்யத் துணையாயிருந்தது தமிழே என்று சுவாமிகள் கூறுவார். எலும்பைப் பெண்ணாக்கியது தமிழ். இதனை,

*"சுட்டவெள் என்பின் குடத்தூ டிருந்தொரு தோகைநல்லாள்*
*கட்டழ கோடு மயிலைத் தடாகக் கரையில்வர*
*விட்டது செந்தமி ழேஅல்ல வோ?அன்றி வேறுகலை*
*நட்டவண் செய்ததுண் டேற்சொல்லு வீர்இங்கு நன்குணர்ந்தே"*

**(தமிழலங்காரம்,25)**

என்னும் பாடல் வழிப் புலப்படுத்துவார். சுவாமிகள், வடலூரார் போன்றோர் வாழ்ந்த நாளில் தமிழைத் தாழ்த்தவும் வடமொழியை உயர்த்தவும் கங்கணம் கட்டிக் கொண்டு சிலர் முனைந்தனர். ஆகவேதான்

இருவரும் வடமொழிக்கு எதிர்ப்பான குரலை முழக்கினர். இராவணனால் ஆக்கப் பெற்ற ஆந்திர மொழியை அதற்குரியார் புகழ்ந்து எந்த மொழிக்கும் அதுவே தாய்(தல்லி)என்றனர். இதனை ஏற்ற சுவாமிகள் வடமொழி தாய் எனில் தமிழ் தந்தை மொழி என்று அறுதியிட்டுக் கூறுகின்றார்.

*"அரக்கன் அமைத்துள்ள ஆந்தரத் தோர்கள் அதைப்புகழ்ந்(து)எத்*
*திரக்கலைக் கும்தல்லி தான்ஆ ரியம்என்பர்; செப்பு சொல்லில்*
*மாக்கவின் ஆர்பொதி யைத்தமிழ்ச் சாடை மலியும்அதால்*
*உரக்கரு ணைத்தந்தை தான்ஃதென் றோர்ந்திட் டுரைக்கை நன்றே"*

**(தமிழலங்காரம், 21)**

எனச்சுவாமிகள் சாடுவது நினைதற்குரியது.

*"தொண்டர் நாதனைத் தூதிடை விடுத்ததும் முதலை*
*உண்ட பாலனை அழைத்ததும் எலும்புபெண் உருவாக்*
*கண்ட தும்மறைக் கதவினைத் திறந்ததும் கன்னித்*
*தண்ட மிழ்ச்சொலோ? மறுபுலச் சொற்களோ? சாற்றீர்"*

**(திருவிளை. மதுரைக். திருநாட்டு. 58)**

என்னும் அடிச்சுவட்டில் வந்தவர் சுவாமிகள் என்பது பெறப்படும்.

## தமிழ்ச்சுவை அறியாத் தெய்வம் பேய்

'எங்கும் தமிழ் எதிலும் தமிழ்' என்று ஐம்பது ஆண்டுகளுக்கும் மேல் பேசப்பட்டு இன்னும் செயலுக்கு முழுவதும் வராத நிலை தமிழ்ப்பற்றுடையாரைக் கலங்கச் செய்கிறது. நூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்த வண்ணச்சரபம் தண்டபாணிஅடிகள்(1839-1898) தமிழின் மேன்மையையும் மிகு சிறப்பையும் ஆங்கில ஆட்சியின்போதே பரப்பிய துணிவு மிக்கவர். எனினும் தமிழ்ச்சுவையை அறியாத தெய்வம் இங்கு தமிழ் நாட்டில் இருக்குமாயின் அது தமிழ்ச்சுவை அறிந்த பேயை விடக்(அலகை)கீழானது என்று கடுஞ்சொற்களால் கனல் தெறிக்கப் பாடிய துணிச்சலுடையவர்.

*"தமிழ்ச்சுவை அறியாத் தெய்வம் உளதெனில்*
*அஃதுணர் அலகையில் தாழ்வெனல் அறமே"*

**(அறுவகை இலக்கணம், 672)**

என்பதே அவர்தம் நூற்பா.

இன்று திருக்கோயில்களில் கருவறைக்கு வெளியே திருமுறைகள் ஓதப்படுகின்றன. திரிபுரம் எரித்த விரிசடைப் பெருங்கடவுள் முதற் சங்கத்தில் தலைமைப் புலவராய் வீற்றிருந்து தமிழாராய்ந்தமை பற்றி இறையனார் களவியல் உரை சான்று பகரும். சுந்தரரைத் தோழராகவே ஏற்று

நட்புடன் பழகிய சிவபெருமான் அவர்தம் தமிழ்ப் பாடலின் சுவையுணர்ந்து தூது சென்றார். திருச்சிற்றம்பலத்தில் ஆடும் தில்லைக்கூத்தன் மணிவாசகப் பெருந்தகையாரிடம் 'பாவை பாடிய வாயால் கோவை பாடுக'' என்று பைந்தமிழில் வேண்டினார். இவற்றை எல்லாம் உள்ளத்திற் கொண்டே வண்ணச்சரபம் தண்டபாணிசுவாமிகள் தமிழ்ச்சுவை அறிந்த தெய்வத்தையே தெய்வம் என்று ஏற்றுக்கொண்டார். இப்படித் தமிழுக்கு இவர் முதன்மை தந்து, போற்றியமை இந்நேரத்தில் நினைவிலே பதிய வைக்க வேண்டிய ஒன்றாகும். வண்ணச்சரபர் வழியை முழுக்க முழுக்க வழிமொழிவார் போல் பாவேந்தர் பாரதிதாசனார்,

*"உயிர்போன்ற உங்கள்தமிழ்*
*கடவுளுக்கே உவப்பாதல்*
*இல்லை போலும்*

*உயிர் போன்ற உங்கள் தமிழ்*
*உரைத்தக்கால் கடவுளதை*
*ஒப்பார் போலும்?"*

**(தமிழியக்கம், ப.23)**

என்று கருத்துரைப்பார். இத்தகைய ஆர்ப்பரிப்புக்கு அடித்தளம்தான் வண்ணச்சரபரின் எண்ணச் சிதறல்.

### தமிழ் தாழ்வானதா?

தமிழ்ப் பெருமக்கள் கூடியிருக்கும் மன்றத்திலே ஒருவன் தமிழைத் தாழ்த்திப் பிறமொழி உயர்ந்தது என்று பேசுகின்ற போது அச்சொல்லைக் காதுகுளிரக் கேட்டுக் கொண்டிருக்கும் தமிழறிந்த புலவர் மறுத்துக் கூறுதல் வேண்டும். அவ்வாறு மறுத்துப் பேசாத தமிழ்ப்புலவன் தமிழப் புலவனல்லன்; அவன் வெறும் புலவன் ஆவான் என்கிறார் வண்ணச்சரபர். அவர்தம் வானாளாவிய தமிழ்ப்பற்றின் உயர்வையும் அகலத்தையும் ஆழத்தையும் பதிவு செய்துள்ள அறுவகை இலக்கண நூற்பா வருமாறு:

*"தமிழ்மொழிக் குயர்மொழி தரணியில் உளதெனில்*
*வெகுளியற் றிருப்போன் வெறும்புலவோனே."*

**(அறுவகை இலக்கணம், 705)**

''வெத்துவேட்டு' என்று நாம் சிலரைக் குறிப்பிடுவோமே அது போன்றதே 'வெறும் புலவோன்' என்ற சொல்லாட்சியும் ஆகும். வண்ணச்சரபரின் அடிச்சுவட்டில் பாவேந்தர் பாரதிதாசனார்,

*"கெடல் எங்கே தமிழின் நலம்*
*அங்கெல்லாம் தலையிட்டுக்*
*கிளர்ச்சி செய்க"*

**(தமிழியக்கம் 24)**

என்று வழிகூறி இக்காலத் தமிழர்க்கு நெஞ்சுரம் ஊட்டினார். அவரே இன்னும் ஒருபடி மேலே சென்று செயலாற்றுமாறு தூண்டுகின்றார். இதோ அத்தூண்டுதல் மொழிகள்:

*"சோற்றுக் கென் றொருபுலவர்*
*தமிழ் எதிர்ப்பார் அடிவீழ்வார்!*
*தொகையாம் செல்வப்*
*பேற்றுக் கென் றொருபுலவர்*
*சாஸ்திரமும் தமிழ் என்றே*
*பேசி நிற்பார்!*
*நேற்றுச் சென்றார் நெறியே*
*நாம் செல்வோம் எனஒருவர்*
*நிகழ்த்தா நிற்பார்!*
*காற்றிற்போம் பதராகக்*
*காட்சியளிக் கின்றார்கள்*
*புலவர் சில்லோர்!"*

**(தமிழியக்கம், 19)**

## அடைமொழி தந்து அருந்தமிழ் போற்றுதல்

செந்தமிழ், வண்டமிழ், இன்தமிழ் என நாம் தமிழின் தன்மையைப் போற்றுகின்றோம். சுவாமிகள் தம்முடைய படைப்புகளில் அடை மொழிகளை அடுக்கி அருந்தமிழைப் போற்றுவதன் வாயிலாகவும் தம்முடைய மொழிப்பற்றை வெளிப்படுத்தக் காண்கின்றோம்.

*".....விதையாக*
*நற்றமிழை வித்தியென் னுள்ளத்தை நீவிளைத்தாய்*
*கற்ற மொழியாகிக் கலந்து"*

**(நாலாயிரம், 2462)**

என்னும் திருமழிசை ஆழ்வாரின் வழித்தடத்தில்,

*"உன்னைக் கற்று நின்னை என்றும்*
*பாடும்படி தமிழ்ப்பாடல் தந்தாய்"*

**(திவ்யகவி)**

என்னும் முன்னோர் மரபுவழியில் சுவாமிகள் வந்தவர். அக்கடமை யுணர்வில் வந்த அடைமொழிகள் சில வருமாறு:

''தெள்ளிய செந்தமிழ்''(கணபதி ஆயிரம், 50) 'தேனை நேர்தமிழ்''(மேலது,211) 'கள்ளை நேர்தமிழ்ப்பாடல்'(மேலது,991) 'வியன்தமிழ்'(தமிழலங்காரம்,11)'வயங்குதமிழ்'(மேலது,13) 'பன்னுதமிழ்' (மேலது,14)'உண்மைத்தமிழ்'(மேலது,18)'மெய்க்கவின் ஆர்தமிழ்'(மேலது, 24)'தவம் நேர்தமிழ்'(மேலது,47) 'சேந்தன் செழுந்தமிழ்'(மேலது,56) 'உயர்தமிழ்'(தமிழ்த்துதிப் பதிகம்1)'தெய்வத்தமிழ்' (மேலது,5) எனவும் பல வேறு நூல்களில் தமிழுக்கு அடைமொழிகள் தந்து தம்முடைய தமிழ்ப்பற்றைச் சுவாமிகள் பதிவு செய்துள்ளார்.

*''குயிலின் மொழி குழலின் மொழி குழந்தைமொழி கட்டில்*
*துயிலும் பொழுதிசைக்கும் இளந்தோகை மொழிகேட்டுப்*
*பயிலும் ஒருகிளியின் மொழி பண்யாழ் மொழிஎல்லாம்*
*உயிரில் எமதுள்ளத்தில் உரம் ஊட்டும் தமிழாமோ?''*

எனப் போற்றும் கவிஞர் மீராவின் எண்ணம் இங்கே நினைவிற்கு வருகிறது.

'தமிழைத் துறவாத்துறவி' வண்ணச்சரபர் தமிழ் உணர்வைக் காட்டுவதில் பிறர் எவர்க்கும் சளைத்தவர் இல்லை! இன்னும் ஒருபடி மேலே சென்று உணர்வின் உச்சிக்குப்போயுள்ளார் என்பது சான்றுகளால் உறுதியாகின்றது.

*''கோங்கரும் பன்ன குவிமுலைக் கோதையர்*
*தீஞ்சுவைச் சொல்லினும் செந்தமிழினது''*

***(அறுவகை. 709)***

*''சுண்ணம் திமிர்ந்தமுலைத் தோகைசொற் கைப்போரும்*
*வண்ணத் தமிழ்க்குருகு வார்''*

***(வருக்கக்குறள்,60)***

மேற்கண்ட பாடலடிகளைப் படிக்கும் போது பாரதிதாசனாரின்,

*''மங்கை யொருத்தி தரும்சுகமும் எங்கள்*
*மாத்தமிழுக் கீடில்லை காண்''*

***(பன்மணித்திரள், ப.85)***

என்னும் பாடலடிகள் நம் மனத்தில் பளிச்சிடும்!

### *தமிழாய்ந்த தகைமையாளர்*

ஏற்றம் நிறைந்த எழில் தமிழைக் கற்காமல் வீழ்ந்துகிடப்பவர் தாழ்வை நீக்க வேண்டுமென அவர்கள் சார்பில் சுவாமிகள் முருகனிடம் வேண்டுகோள் விடுக்கின்றார்.

*"பாலும் அமுதும் பழமுநிகர் முத்தமிழால்*
*நாலும் கவியும் நலியாமல்-காலும்*
*தலையுமறி யாதுழலும் தாழ்வுதீர் அண்ணா*
*மலையின் சிகரிமன்ன வா"*

***(திருவிளக்காயிரம்,ப.198)***

இவற்றால் வண்ணச்சரபர் தமிழைப் போற்றும் தகைமையில் உயர்ந்து நிற்கின்றார் எனலாம்.

*"முல்லைக் கொடிமகிழ மொய்குழலாம் உண்மகிழ*
*மெல்லப் புனல்பொழியும் மின்னெழில்கார்-தொல்லைநூல்*
*வல்லார் உளமகிழத் தீந்தமிழை வார்க்குமே*
*சொல்லாய்ந்த கூத்தர்கார் சூழ்ந்து"*

***(கார்நாற்பது, சிறப்புப்பாயிரம்)***

---

# 7

# உயிரிரக்கமும் ஒப்பற்ற மனிதநேயமும்

*''வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம்*
*வாடினேன் பசியினா விளைத்தே*
*வீடுதோ றிரந்தும் பசியறா தயர்ந்த*
*வெற்றரைக் கண்டுளம் பதைத்தேன்*
*நீடிய பிணியால் வருந்துகின் றோரென்*
*நேருறக் கண்டுளந் துடித்தேன்*
*ஈடின்மா னிகளா யேழைக ளாய்நெஞ்*
*சிளைத்தவர் தமைக்கண்டே யிளைத்தேன்''*

***(திருவருட்பா ஆறாவது திருமுறை, பிள்ளைப்பெரு விண்ணப்பம்,11)***

### அருள் உள்ளம்

பயிர்களுக்கும் உயிர் உண்டு என்று கண்டு கூறினார் தொல்காப்பியர். அவர் மரபியலுள்,

*''ஒன்ற றிவதுவே உற்ற றிவதுவே*
*இரண்ட றிவதுவே அதனொடு நாவே...*
*நேரிதின் உணர்ந்தோர் நெறிப்படுத் தினரே''*

***(தொல். 1525)***

என்று ஓரறிவு தொடங்கி ஆறறிவு வரையுள்ள உயிர்ப் பாகுபாட்டினைத் தெளிவுறுத்தியுள்ளார். இப்படிச் செடி கொடிகளுக்கும் உயிருண்டு என்று எண்ணியமையால்தான் பாரி வள்ளல் முல்லைக்கொடி படரத் தன் தேரினையே வழங்கி மகிழ்ந்தான். இதனை,

*''சிறுவீ முல்லைக்குப் பெருந்தேர் நல்கிய*
*பிறங்குவெள் ளருவி வீழுஞ் சாரற்*
*பறம்பிற் கோமான் பாரியும்''*

***(சிறுபாண்.89-91)***

எனவரும் சிறுபாணாற்றுப்படை அடிகளிலிருந்து அறியலாகும். இவ்வாறு பிற உயிர்கள் படும் இன்னல்களை எண்ணி மனம் நெகிழ்ந்த வரலாறுகள் தமிழில் நிரம்ப உண்டு.

இத்தகைய மனநலத்தின் ஆணிவேரை அசைக்கின்ற கொடுஞ் செயல்கள் மன்பதையில் பெருகுதல் கண்ட திருவள்ளுவர்,

*"உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை*
*அற்றே தவத்திற் குரு"*

***(திருக்குறள், 261)***

என அறங்கூறினார். இத்தகைய செந்தண்மை பூண்டொழுகும் அறச்சிந்தனை தமிழ் நாட்டில் தொடர்ந்து வந்துள்ளது. மனுநீதிச்சோழன் ஒரு பசுவின் துயர் கேட்டுத் தன் மைந்தனையே தேர்க்காலில் இட்ட செய்தியைச் சேக்கிழார் பெரியபுராணத்துள் எடுத்துக்கூறக் காண்கின்றோம்.

*"ஒரு மைந்தன் தன்குலத்துக் குள்ளானென் பதும்உணரான்*
*தருமம்தான் வழிச்செல்கை கடனென்று தன்மைந்தன்*
*மருமம்தன் தேராழி உறஊர்ந்தான் மனுவேந்தன்*
*அருமந்த அரசாட்சி அரிதோ?மற் றெளிதோதான்!"*

***(திருத்தொண்டர் புராணம், திருக்கூட்டச்.44)***

தாய்ப் பசுவின் துன்பத்தை எண்ணிய மனுவேந்தனின் உயிரிரக்க உணர்வு இங்கே எண்ணத்தகும். இவ்வாறு வழிவழி வரும் திருக்கூட்ட மரபில் வந்த வண்ணச்சரபரும் உயிர்கள்பால் இரக்க உணர்வும் அன்பும் கொண்டவராக விளங்கினார். இப்படி மரபு வழி வந்த மனநலம்தான் அவரைக் கொல்லாமை பற்றியும், புலால் உண்ணாமை பற்றியும், மனிதநேயம் குறித்தும் சிந்திக்குமாறு தூண்டியது.

### உயிரிரக்கம் ஒரு கோட்பாடு

கொல்லாமை என்பது ஓர் அறம். இவ்வறத்துடன் தொடர்புடையவை அன்புடைமை, தீவினையச்சம், அருளுடைமை, புலால் மறுத்தல், இன்னா செய்யாமை, கொல்லாமை போன்றவை. இவையாவும் மக்கள் உள்ளத்தில் தழைக்க வேண்டிய அறங்கள். ஆதலால் திருவள்ளுவர் உடன்பாட்டு முறையிலும் எதிர்மறை வழியிலும் இவற்றை விளக்கினார். வள்ளுவ நெறியை வாழ்வியல் நெறியாகப் பின்பற்றிய தண்டபாணிசுவாமிகள் தம்முடைய எல்லாப் படைப்புகளிலும் இவற்றை எடுத்துக் கூறுகின்றார். கொல்லாமையையும், புலால் மறுத்தலையும் சுவாமிகள் மிகுதியாக அழுத்தம் கொடுத்துக் கூறப் பல்வேறு காரணங்கள் உள்ளன. அவற்றுள் ஒன்று சுவாமிகளுக்கு வள்ளுவ அறத்தில் இருந்த பேரீடுபாடு. இலக்கியத்தில் கொல்லாமையை - உயிர் இரக்கத்தை - ஒரு பாடு பொருளாய்க் கொண்டு பாடுவதுண்டு. ஆனால் தண்டபாணிசுவாமிகள் உயிரிரக்கத்தை ஒரு கோட்பாடாகவே கொண்டு தம் படைப்புகள் பலவற்றிலும் கூறிச் சென்றுள்ளார்.

### கொல்லாமைக் கோட்பாடு உருவாகக் காரணம்

தண்டபாணிசுவாமிகளின் கொல்லாமைக் கோட்பாடு பின்வரும் அடித்தளத்தில் உருவாகியுள்ளது எனலாம்:

**சுவாமிகளின் கொல்லாமைக் கோட்பாடு**

1. குறளறத்தின் அடிப்படை
2. இறையுணர்வின் அடிப்படை
3. யாகத்தில் ஊன் இடுதலைச் சாடுதல்
4. ஆங்கில ஆட்சியில் கொடுமை
5 மக்களின் அறியாமை

தண்டபாணி சுவாமிகள் பல நூல்களில் பல கடவுள்களிடம் உயிர் இரக்கம் குறித்தும், உலகில் கொல்லாமையுணர்வு தழைக்குமாறு வேண்டுவதற்கும் மேலே கண்ட ஐந்தும் அடித்தளமாய் அமைந்தன எனலாம்.

### 1. குறளறத்தின் அடிப்படை

திருக்குறள் கூறும் அறநெறிகளில் சுவாமிகள் மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்தார். எனவேதான் இவர் திருக்குறள் போன்று 'மனு நெறித்திருநூல்' 'வருக்கக்குறள்' ஆகியவற்றை இயற்றினார். சுவாமிகள்,

*"என்றும் இதயத் திரக்கமில ராய்உயிர்கள்*
*கொன்று தின்பார்க் கஞ்சிக் கலைவேனோ?"*

**(வெண்பாமாலை, 16)**

*"கொல்லாமை நாட்டம் குறிக்கும் குணத்தெனக்கோர்*
*வல்லாண்மை நல்குகில்லாய் மாய்த்தருந்தும் - பொல்லார்க்கும்*
*ஆடல் அளித்திலையோ அன்றுஆவி னன்குடிச்சீர்*
*நீடவந்தாய் யாவும் வல்லானே"*

**(வெண்பாமாலை, 89)**

எனப் பழனித் திருவாயிரத்துள் வேண்டுவார். இவ்வாறு சுவாமிகள் கூறுவதற்குக் காரணம்,

*"அருளல்ல தியாதெனிற் கொல்லாமை கோறல்*
*பொருளல்ல தவ்வூன் தினல்"*

**(திருக்குறள், 254)**

என்னும் திருக்குறள் அறத்தின் அடிப்படையில் உருவாகி வளர்ந்த கோட்பாடு எனலாம். இவ்வுயிரோட்டமான உணர்வு வளர்ச்சியின் வெளிப்பாட்டை நமக்கு நன்கு வெளிப்படையாகவே சுவாமிகள்

'அருளாட்சி' என்ற நூலில் தெளிவுபடுத்தியுள்ளார். அவ்வெண்பாவில் ஒன்று வருமாறு:

*"சங்கப் புலவர் தமதுள் இறுமாப்பைப்*
*பங்கப் படுத்துமொரு பாவலவன் - எங்கட்கு*
*உரைத்தமிழ் வேதத் துட்கருத்துற் றோர்ந்தார்*
*தரைத்தலத்திற் கொன்றருந் தார்".*

**(அருளாட்சி, 33)**

சுவாமிகள் 'சத்திய சூத்திரம்' என்ற நூலில் கொல்லாமை நோன்பினைக் கைக்கொண்டு வாழும் ஐந்தாங் குலத்தினனை மரபு வழியில் கொள்ளல் கூடாது; அவன் மேன் மக்களுடன் கூட்டி எண்ணப்படுதல் வேண்டும்; பிறப்புரிமை பற்றி ஒதுக்குதல் கூடாது என எடுத்துரைப்பார். அச்சூத்திரத்துள் சுவாமிகள்,

*"கடுகளா வூனும் காதலிக் கில்லான்*
*ஐந்தாங் குலத்தினன் ஆயினும் அவனைச்*
*சீரியர் தம்மொடு சேர்க்கத் தகுமே"*

**(சத்தியசூத்திரம், 8:4)**

என்று உயர்த்தி மொழிவது உயிர்க்கொலை, புலால் உண்ணாமை என்பவற்றின் அடிப்படையிலேயே ஆகும். இவ்வாறு தண்டபாணி சுவாமிகள் திருவள்ளுவர் கூறிய அறக்கொள்கை அடிப்படையில் தம்முடைய கொல்லாமைக் கோடப்பாட்டை உருவாக்கினார் எனலாம்

## 2. இறையுணர்வின் அடிப்படை

சுவாமிகள் அறுசமயக் கடவுளரையும் பாடிப் பரவிய பரந்த உள்ளம் கொண்டவர். இவர் அறுசமயவுணர்வையும் போற்றி அவற்றுள் ஓர் இணக்கத்தை ஏற்படுத்த முனைந்த பண்பு மேலோங்கியவர். முன்னர் வாழ்ந்த அருளாளர்களின் இறையுணர்வை நன்கு புரிந்து கொண்டவர். உயிரிரக்கம் என்பது அருளாளர்களின் அடிநாதமாக விளங்கி வந்துள்ளது. சுவாமிகளும் இவ்வடியவர் வழி வந்தமையினால் கொல்லாமையையும் புலால் உண்ணாமையையும் வலியுறுத்திப் போந்தார். சுவாமிகள் தாம் இயற்றியுள்ள 'கீர்த்தனைப் பாடல்' ஒன்றில்,

*"இந்த உலகும் பசுக்கூட்டமும் படும்பாட்டை*
*எண்ணிச்சற் றாயினும் இரங்காமற் போனாலும்*
*செந்தமிழ்ப் பெருங்கவிக் கூட்டத்தில் முன்னாகித்*
*திகழ்கின்றதாம் சந்தத்திருப்புகழ் விழைந்தேனும்*
*ஒரு சித்தன் நிசத்தனா வாரானோ - எனக்கு*
*உள்ள கவலை முற்றும் தீரானோ"*

**(கீர்த்தனைப்பாடல் திரட்டு: 7)**

என்று வருந்தித் தம் கவலையை வெளிப்படுத்துவார். மேலும் இவர், திருத்தணிகைப் பெருமானை வேண்டும் போது சமயச் சான்றோர்கள் கூறும் கொல்லா விரதத்தை எடுத்துரைக்கக் காண்கின்றோம்.

*"கொல்லா விரதம் பெரிதா மென்னக் கொள்ளும்*
*சமயத் தினர்கூறும்*
*எல்லாக் குருவும் நீயே யெனநம் பென்னைப்*
*பார்த்தல் இழிவன்றோ?"*

***(திருத்தணிகைப்பதிகம், ப.155)***

என்று கொல்லாமையை உலகில் நிலைநாட்டும் வண்ணம் வலியுறுத்தக் காண்கின்றோம் இவ்வாறு பல்வேறு கடவுளரிடமும் சுவாமிகள் முறை யிடுவார்; வேண்டுவார். இப்படி இவர் கொல்லாமைக் கோட்பாட்டைக் கூறுவதற்கு, முன்னர் வாழ்ந்த இறையடியார்களின் அருட்பாடல்களும், வாழ்வும் ஒருவகையில் அடிப்படையாக அமைகின்றன.

### 3. யாகத்தில் ஊன் இடுதலைச் சாடுதல்

இறைவனுக்கு நேர்த்திக் கடன் செய்யும் முறையில் வேண்டுதலுக்காக இன்று உயிர்களைப் பலியிடுதல் நிகழ்கின்றமை கண்கூடு. கடவுளின் பெயரால் வேண்டி, வேள்வியில் உயிர்ப்பலி இடுதல் வேத காலத்தில் நிகழ்ந்துள்ளது. இடும்பன், காளி, இசக்கி போன்ற சிறு தெய்வங்களை வேண்டி ஆடுகளையும் பசுக்களையும் வெட்டிப் பலியிடுவர். இதனை எண்ணி வருந்திய சுவாமிகள்,

*"இன்பம் இடும்பற்கு இறைச்சி நசைஉண்டே*
*என்னவுரைப் பார்க்கும் இரங்குவையோ"*

***(வெண்பாமாலை, 34)***

என்று பழனியாண்டவனிடம் வேண்டுவார்.

இத்தகைய செயலை எண்ணி உள்ளம் நனி வருந்திய சுவாமிகள் வேதத்தையும் சாடத் தவறவில்லை. வேதத்தின் முதற்பகுதியான கரும காண்டத்தில் வேள்வியிற் கொலை செய்யப்படுவது பற்றிக் கூறப்பெறுகின்றது.

*"நூன்முகப்பில் வேள்விநுவன்ற கொடுமையெண்ணி*
*நான்முகத்தோன் நாவினளை நான்மதியேன் - ஊன்முகக்க*
*ஒண்ணாதென் முப்பால் உரைத்தோன் ஒருநாவின்*
*பெண்ணாள் உயர்ச்சிகண்ட பின்"*

***(அருளாட்சி, பா.1)***

என்று கலைமகளையே தாம் மதிக்க மாட்டேன் எனக் கூறும் நுட்பம் அறியத்தகும். பிறவுயிர்களுக்குத் தீங்கு செய்யாமையே அறிவு பெற்றதன் அடையாளம்.

*"வேதம் சொல்லினும் விரிஞன் ஆதியர்*
*நேரிற் கூறினு நீசர்க் குரித்தாம்*
*கொலைபுலை செய்தல் கூடா தன்றே"*

**(சத்திய சூத்திரம், 81)**

என்று சுவாமிகள் தம் கொல்லாமைக் கோட்பாட்டை முழு மூச்சுடன் மிகுந்த அழுத்தம் தந்து பேசுவதற்கு,

*"அவிசொரிந் தாயிரம் வேட்டலின் ஒன்றன்*
*உயிர்செகுத் துண்ணாமை நன்று"*

**(திருக்குறள், 259)**

என்னும் குறளே அடிப்படை எனக் கருத ஒண்ணும். ஆக, வேள்வியின் பொருட்டு உயிர்களை வதைப்பதையும் சுவாமிகள் மிகுதியும் கடிந்துள்ளார்.

### 4. ஆங்கில ஆட்சியில் கொடுமை

சுவாமிகள் ஆங்கிலேயர் ஆட்சி செய்த நாளில் தம் கண்முன்னே உயிர்க்கொலையும் ஊன் உண்ணுதலும் மிகுதியும் நடைபெறுதலைக் கண்டு உள்ளம் துணுக்குற்றார். அரசனைப் பற்றிக் கூறவந்த சுவாமிகள்,

*"பொய்புலை கோரம் பொருள்நசை ஆதிய*
*எய்தும்மன் உலகோர்க்கு எமன்அனை யானே"*

**(சத்தியசூத்திரம், 41)**

எனச் சூத்திரம் ஒன்று வகுப்பார். ஆங்கில அரசு செய்த கொலை, புலைகளை எண்ணி வருந்திய சுவாமிகள்,

*"பொய்யும் கனமுகில் ஓரேழும் ஓல்கப் பிறங்கல் எடுத்து*
*உய்யும் படிபல் பசுக்காத்த நாதனின்று ஊன்விழைந்து*
*கொய்யும் புலையர்க்கு அரசாளும் ஆர்வம் கொடுத்தது என்னே*
*நெய்யுந்து செங்கம லப்பொருட் டேவளர் நேரிழையே"*

**(திருமகளந்தாதி, 45)**

என்று திருமகளை வேண்டுவார்.

மேலைநாட்டினர் வரவால் நாகரிகம் பெருகியது. எனினும் கொலை, புலை முன்பு இருந்ததனை விடவும் பெரிதும் தலைவிரித்து ஆடின. இதனை எண்ணி வருந்திய சுவாமிகள் கொல்லாமைக் கோட்பாட்டை ஆங்கில ஆட்சியின் செயற்பாடுகள் அடிப்படையில் உருவாக்கினார் ஆதல் வேண்டும். ஆகவேதான் சுவாமிகள்,

*"கன்று டன்பசு வுங்கொல் பாதகர்*
*கரிய புன்குடை நீழலில்*
*துன்று மென்னிடை வந்து வந்து சொலுஞ் சொல்*
*முற்றுமெ யல்லவோ"*

***(திருத்தணிகைப்பதிகம், ப. 46)***

என்று கூறுவாராயினர்.

### *5. மக்களின் அறியாமை*

உயிர்களிடத்து அன்பு கொள்வதே இறைவனை வணங்குவதன் நோக்கம். அதுவே வீடு பேறளிக்கும் வாயில் என்று மக்களில் பலர் அறிந்து கொள்ளவில்லை. இதனை உணர்ந்த சுவாமிகள் மக்கள் அறியாமையினால் செய்யும் உயிர்க்கொலையை எண்ணி வருந்தினார்; ஊன் உண்ணுதலின் கொடுமைகளை உரத்த குரல் கொடுத்துக் களைய முற்பட்டார்; உணவின் பொருட்டும், கடவுள் வேண்டுதலின் பொருட்டும் பசுக்களையும் ஆடு களையும் கொன்று ஊன் உண்ணுதலை, அறியாமையால் மக்கள் செய் கின்றனரே என எண்ணி வருந்தினர். இதனைக் கருதியே 'பழனித் திருவாயிரம்' என்ற நூலில்,

*"கோவதைக்கும் பொல்லார் குடிகேடு காண்பதன்முன்*
*சாவதற்ற முத்திபதம் தந்தாலும் - மேவற்கு*
*இசையேன்காண் என்னையின்னம் ஈடழிக்க வேண்டாம்*
*திசைதேர் பழனியர சே"*

***(வெண்பாமாலை, 3)***

எனச் சொல்லி முத்தி நிலையைக் கூட வேண்டாம் என்பார். மேலும் இவர்,

*"ஊனை விரும்பியுண்ணும் கானவர்கள் போல்வர்*
*ஈனர்களே"*

***(தில்லைபாதி நெல்லைபாதி, 4)***

என்று மக்களுக்குக் கொல்லாமை நோன்பை அறிவுறுத்துவார். இரக்கவுணர்வுடையோர் தேவர்க்கும் மேலான முதிர்ந்த ஞானம் உடையோர் என்று சுவாமிகள் 'அருளாட்சி' நூலில் கூறுவார்.

*"தேவரே எனினும் ஒன்றைச் செற்றருந்தில் தீயரே"*

***(அருளாட்சி, 13)***

என்று அருளாட்சியில் எடுத்துரைப்பார்.

***"கல்லார் எனினும் கருணை யுடையரெனில்***
***நல்லாரே நூல்முழுதும் நன்குணர்ந்த -வல்லார்கள்***
***மானும் மொழியினராய் வான்விரும்பி ஊன்நுகர்ந்தா***
***ரேனும் இழியுடையா ரே"***

***(அருளாட்சி, 67)***

என்பதே சுவாமிகளின் அறிவுரை. இதன் அடிப்படையில் மக்களை நெறிப்படுத்த வேண்டிய புலவர்களுக்குச் சுவாமிகள்,

*''கொல்லல் ஊன்சமைத்த லாதிய விரித்துக்*
*கழறுந் துணிவுடைக் கவிப்புல வோரைப்*
*பேயரென் றுலகம் பெரிதிகழ்ந் திடுமே''*

**(அறுவகை, 690)**

என்று அறிவுறுத்தியுள்ளார்.

தண்டபாணிசுவாமிகளின் உயிரிரக்கம் என்னும் கொல்லாமைக் கோட்பாடு திருக்குறள் அறங்களின் அடிப்படையில் உருவாயிற்று. நம் முன்னைய அருளாளர்களின் இறையுணர்வு வழியில் ஆறுசமயக் கடவுளர்களிடத்தும், கொல்லாமையும் புலால் உண்ணாமையும் உலகில் மக்களிடம் நிலைத்திட இவர் வேண்டுவார். வேதத்தின் கருமகாண்டம் வேள்வியில் உயிர்க்கொலை செய்வதனை வற்புறுத்தும். இதனை மறுத்தும் சுவாமிகள் தம் கொல்லா நெறியை விரித்துரைத்தார். ஆங்கிலேயர் வரவால் உயிர்க்கொலை புரிந்து ஊன் உண்ணல் தங்கு தடையின்றிப் பெருகிற்று. இவற்றைக் கண்முன் கண்ட சுவாமிகள் 'ஆங்கிலியர் அந்தாதி' மூலம் தம் உயிர்க் கொள்கையான கொல்லாமையுணர்வை வெளிப்படுத்தினார். மக்களின் அறியாமையைப் போக்கிப் பிற உயிர்க்குத் தீங்கு செய்தலும், புலால் அருந்தும் புன்மைச் செயலும் இறைவனுக்கு உகந்தவை அன்று என்று கூறுமாறு புலவர்களுக்கு இவர் அறிவுறுத்தினர். இப்படிச் சுவாமிகளின் கொல்லாமைக் கோட்பாடு பல அடித்தளங்களிலிருந்து உருவாகி வளர்ந்துள்ளது.

## ஒப்பற்ற மனித நேயம்

பிறருக்கு உதவுதல்; பிறர் படும் துன்பத்தில் பங்குகொள்ளல்; இன்னலைப் பகிர்ந்து கொண்டு ஆறுதல் கூறுதல்; இரங்குதல் என்னும் பண்புகள் அருளாளர்க்கு இயல்பாய் அமையும்! அன்பின் அடிப்படையில் இது தோன்றுவது!

*''ஒத்த தறிவான் உயிர்வாழ்வான் மற்றையான்*
*செத்தாருள் வைக்கப் படும்''*

**(திருக்குறள், 214)**

என அமையும் குறளறத்தின் வேரிலிருந்து தளிர்த்து முளைத்தெழுவது மனிதநேயமாகும். இம்மனித நேயம் வண்ணச்சரபர் உள்ளத்திலே ஆழமாக வேர்விட்டிருந்தது. இன்று உலகில் அடுத்துக் கெடுப்போரும், உடன் இருந்தே குழி பறிப்போரும் பெருகிவிட்டனர். இதனால் மனித உறவுகள் அறுபட்டுப் போகும் நிலை - குடும்ப உறவில் விரிசல்கள் ஏற்படும் நிலை

தலைவிரித்தாடத் தொடங்கிவிட்டது. பிற நாட்டார் ஆட்சியில் இவை முளைவிடத் தொடங்கிய காலகட்டத்தில் சுவாமிகள் வாழ்ந்தமையினால் மனிதநேயம் குறித்துப் பேசவேண்டிய சூழ்நிலை ஏற்பட்டது.

*"நல்லது செய்தல் ஆற்றீ ராயினும்*
*அல்லது செய்தல் ஓம்புமின் அதுதான்*
*எல்லாரு முவப்ப தன்றியும்*
*நல்லாற்றுப் படூஉ நெறியுமா றதுவே"*

**(புறம், 195)**

என்பது சங்கச் சான்றோர் நரிவெரூஉத்தலையார் சொல்லிச் சென்ற மனிதநேயம். "தனக்கு ஒருகண் போனாலும் குறையில்லை, அடுத்தவனுக்கு இரண்டு கண்களும் போகவேண்டும்" என்று வஞ்சனையுடன் செயற்படுவார் பல்கிப் பெருகிவிட்டனர். எனவே இவற்றைத் தடுத்துச் சமுதாய உறவும் குடும்ப உறவும் சீராக நின்று நிலைக்கச் சுவாமிகள் அன்றே எண்ணினார்!

### மழை பொழியப் பாடுதல்

திருநெல்வேலி நகரில் கண்டியப்பேரி என்ற ஒரு குளம் உள்ளது. வயல்களுக்கு நீர்பாய்ச்சவிடாமல் 'வெட்டுப்பட்ட விரலுக்குச் சுண்ணாம்புகூடத் தர' எண்ணாத முரட்டுத் தன்மையின் முழுத்தோற்றமான முத்துக்கிருட்டிணன் என்பான் தடுத்தான். அவனிடம் சுவாமிகளின் தம்பியோ 'இன்று மழை பொழியும் பார்!' என்றார். இதனைக் கேட்ட சுவாமிகள் மழைப்பதிகம் பாடினார்; அன்றே மழை பொழிந்தது!

*"கட்டிப்பொன் காய்க்குமெழிற் கண்டிகைப்பே ரிக்குமுத்துக்*
*கிட்டிணன்பால் எம்பி கிளத்தியசொல் - முட்டி*
*முழங்காது மாரி முனுமுணென்று பெய்யும்*
*வளங்காணச் செய்ததல்ல வா?"*

**(தனிப்பாடல் திரட்டு, 160)**

எனச் சுவாமிகள் 'வேண்ட முழுதும் தந்த' முருகப்பெருமானுக்குப் பாமாலையில் நன்றியுமு தெரிவித்துக் கொண்டார் ஆமாம்!

*"தமக்கென முயலா நோன்றாள்*
*பிறர்க்கென முயலுநர் உண்மை யானே"*

**(புறம், 182)**

என்னும் இளம்பெருவழுதியின் நெறியில் தண்டபாணிசுவாமிகள் சமுதாய நலம் பேணியுள்ளார்.

### *பிறர்க்குதவும் பெருந்தகைமை*

சுவாமிகளின் சீடர் அரிகரபுத்திர முதலியார் நோயினால் துன்பப்பட்ட போது அவருக்குதவுமாறு இறைவனிடம்,

*"கிரியிறைபெற் றருள்பசு மைக்கிளிவலமுற் றலிர்தேவா!*
*கரிவதனத் தலைவா! எழிற் கலாபமயிற் பரியூர்வாய்!*
*பெரியவர்சொற் பணிவிடையிற் பிரியமுடைக் குணவானாம்*
*அரிகரபுத் திரமுதலிக் கருள்புரிதற் கிசைவீரே!"*

**(தனிப்பாடல் திரட்டு, 166)**

எனவேண்டிப் பாடினமை பிறர்க்குதவும் பெற்றியைக் காட்டும்!

மதுரைப்பாக்கம் துரைசாமி ரெட்டியாருக்கு மகப்பேறு உண்டாகுமாறு சுவாமிகள் வேண்டிப் பாடினார். இதோ அப்பாடல்:

*"சாம்பசிவ ரெட்டியன்பிற் றந்ததுரை சாமிரெட்டி*
*ஆம்பல்மலர் வாவியொன்றும் ஆலயமொன் றுஞ்செய்தால்*
*காம்பவிர்தோட் கன்னியொன்றும் காளையொன்றும்பெற்றிடுவான்*
*நாம்பகர்ந்த தல்லஇது நாமடந்தை சொன்னதுவே"*

**(மேலது, 183)**

வயலை உழுவதற்குக் காளையைத்தான் பயன்படுத்துவர்; ஆனால் திருமயத்தில் ஒருவன் பசுவைப் பூட்டி உழுதான். அது தவறு என்று சுவாமிகள் அவனைக் கடிந்தார்; இருந்தும் அவன் கேட்டானில்லை! இதனை அரசுதான் தட்டிக் கேட்க வேண்டும் என்கிறார் (மேலது, 218)

வண்ணச்சரபர் திருவரங்கத்தில் 'திருவரங்கத்திருவாயிரம்' அரங்கேற்றியபோது ஓர் இளம் பெண்ணைப் பாம்புதீண்டிற்று; அதனைக் கேட்டு வருந்திய வண்ணச்சரபர்,

*"அரங்கன் திருமுன்பு அமரும் கருடா!*
*இரங்கிப் பார்ப்பனப்பெண் ஏங்கச் - சிரங்கொண்ட*
*பொல்லா விடத்தைப் பொடியாக்கிப் பூவுலகோர்*
*நல்லான்என் றோதஅருள் நல்கு"*

**(மேலது, 228)**

என்று பாடி அப்பெண்ணை உயிர்பெற்று எழுமாறு செய்தார். மேற்கண்ட நிகழ்வுகள் யாவும் தண்டபாணிசுவாமிகளின் இளகிய மனப்பசுமையை - மனித உறவை - வலுப்பெறச் செய்யும் மனிதநேயப்பண்பைத் துலங்கிக் காட்டுகின்றன.

### பிறர்க்குதவும் பெருநலம்

திருவாமாத்தூரில் பரவியிருந்த கொடிய கொள்ளை நோயைப் போக்குமாறு காலனுக்கும் காலனாகிய சங்கரனிடம்,

*"பேதி உபாதியினாற் பீதிசெயும் தேவதையைச்*
*சேதி! மழுப்படையாற் சீக்கிரத்தில் - ஆதிக்கு*
*மூலம் எனவே முதற்றிருவா மாத்தூர்வாழ்*
*காலகா லா! சங் கரா"*

**(மேலது, 237)**

என்று வேண்டுவதும் மனிதநேயப் பண்பின் அடிப்படையிலேதான்! சுவாமிகள் பிறருக்கு உதவும் பெருந்தகைமை உள்ளம் கொண்ட பொதுநலத் தொண்டராக விளங்கியுள்ளார். இரக்கவுணர்வின் ஏற்றமும் பிறர்க்குதவும் பெருநலமும் பற்றி உரத்த சிந்தனை உடைய சமுதாயநலச் சிந்தனையாளராகச் சுவாமிகள் விளங்கினார்.

*"உயர்ந்த மாதவம் யாதென்று அலைய வேண்டாம்*
*உலகத்தீர் உணர்ந்த உண்மை உரைப்பக் கேண்மோ?*
*நயந்துயிர்கட்கு இடர்செய்யா விரதிய ராகி*
*ஞானமொடு கல்விநலம் நுணுகப் பெற்று*
*வயந்தழைக்கும் திருக்கைவேற் சேந்தன் வாழும்*
*மலைப்பழனி அடிவாரம் வந்து தங்கிப்*
*பயந்தவிர்க்கும் தியானம்செபம் பூசை செய்து*
*பைந்தமிறாற் பலபாடல் பகவர் தொன்றே!"*

**(பழனித் திருவாயிரம், கலம்பகம், 7)**

---

# 8

# புலமை வீச்சில் புதுமைப் பேச்சு

*"தொன்மையவாம் எனும்எவையும் நன்றாகா; இன்று*
*தோன்றிய நூல்எனும் எவையும் தீதுஆகா"*

**(சிவப்பிரகாசம், 12)**

என்னும் உமாபதிசிவாச்சாரியாரின் எண்ணத்திற்கு ஏற்பப் புலமை வீச்சில் புதுமைகளைக் கண்டு சொன்னவர் வண்ணச்சரபம் தண்டபாணிசுவாமிகள் ஆவார். ஆயினும் பழம் மரபுகளைப் போற்றுவதிலும் காலத்திற்கு ஏற்ற புதுமை எண்ணங்களையும் - புரட்சிக் கருத்துக்களைக் கூறுவதிலும் வண்ணச்சரபர் உயர்ந்து நிற்கின்றார். அவர் புதுக்கருத்தால் புது நூல்கள் இயற்றிய ஏந்தல்.

### பெண்கல்விக்கு வித்திட்ட பெருந்தகை

பெண்கள் வீட்டை விட்டே வெளியில் வரக்கூடாது என்று தடை விதிக்கப் பெற்றிருந்த பத்தொன்பதாம் நூற்றாண்டில் புதிய மறுமலர்ச்சிக் கருத்துகளைத் தமிழ்ச் சமுதாய முன்னேற்றம் கருதி வண்ணச்சரபர் 'வருக்கக்குறள்', 'மனுநெறித்திருநூல்', 'சத்திய சூத்திரம்', 'கௌமார முறைமை' போன்ற பனுவல்களில் முறைப்படுத்தி முன்மொழிந்துள்ளார்.

கல்வி இன்றேல் ஒரு சமுதாயம் வளர்ச்சியுறாது. ஆண், பெண் இருபாலாரும் கல்வி நலம் பெற்றால் குடும்பத்துடன் அச்சமுதாயம் முன்னேறும் எனச் சுவாமிகள் நம்பினார். வண்ணச்சரபர், கல்வி பெறாத ஆண், பெண் இருவரும் மக்களினம் இல்லை விலங்கினமே ஆவர் என்று 'மனு நெறித்திருநூ'லுள் கூறியுள்ளார்.

*"கல்வி அழகமையாக் காளையரும் கன்னியரும்*
*வல்விருகத் தாண்பெண் வகை"*

**(மனுநெறித்திருநூல், 16:10)**

என்பதே அக்குறள் வெண்பா. பெண் மக்களின் கல்வி பற்றிச் சுவாமிகள்,

*"கடக மதியனையாள் கண்ணருட்சீர்க் கல்வி*
*மடமை அகற்றும் மருந்து"*

**(மனுநெறித்திருநூல், 26:8)**

*"நாரியருங் கற்கை நலமென் றுரைக்குநரைப்
பாரில் இகழ்வார் பலர்"*

**(வருக்கக்குறள், 117)**

என வலியுறுத்தக் காண்கின்றோம். இக்குறளை ஊன்றி எண்ணினால் அவர் காலத்தில் வாழ்ந்த பலர் பெண்கள் கல்வி கற்கவேண்டும் என்று கூறுவோரை இகழ்ந்து பேசியுள்ளமை பெறப்படும். சுவாமிகளின் அறச்சிந்தனையின் அடித்தளத்திலிருந்து எழும் புதுமை வீச்சு அன்று புரட்சிப் பொறியாக விளங்கிற்று எனலாம்.

### மறுமணம் பற்றிய சிந்தனை

நம் தமிழ்ச் சமுதாயத்தில் ஒரு பெண்ணுக்கு இளம் வயதிலே திருமணம் நிகழ்ந்து, கணவனை இளம் வயதிலேயே அப்பெண் இழந்து கைம்மை வாழ்வு நோற்க நேர்ந்தது. இக்கொடுமைகளைக் கண்ட வண்ணச்சரபர் மனம் துடித்தார். பாடல்களில் தம் கருத்தைச் சொல்லி வெடித்தார். மகளிர் மறுமணம் செய்து கொள்ளுதல் என்பதை ஏற்றுக் கொள்ள முன்வராத அந்தக் காலத்தில் சுவாமிகள் மிகுந்த துணிவோடு,

*"நூலிழந்தும் கேளிச்சை நூறாதாள் மற்றுமொரு
தாலிகட்டிக் கொள்ளத் தகும்"*

**(வருக்கக்குறள், 121)**

என்று ஆணித்தரமாக அறிவு கொளுத்தினார்.

கணவனை இழந்த பெண்கள் காம வேட்கையினால் கெட்டுப் போகாமல் தடுத்து நிறுத்த எண்ணிய சுவாமிகளின் புரட்சி எண்ணம், மறுமணம் செய்து கொள்ள வலியுறுத்துகின்றது. பத்தொன்பதாம் நூற்றாண்டில் முகிழ்த்து மலர்ந்த சமுதாயச் சீர்திருத்த எண்ணம்,

*"மகப்பேறு மணம்சாவு முதல வாய*
*வகைகளுக்கும் விதிகள்பல வகுத்தார் முன்னோர்*
*அகத்தோங்கும் பொருளளவிற் செயலே நன்றாம்*
*அதுகிடக்க; நூலிழந்திட்டு அனங்கன் அம்பால்*
*மிகச்சோரு மடநல்லாள் கலவி வேட்டு*
*மேவுகருப் பங்கெடுக்கும் வினையை எண்ணில்*
*சகத்தோர்கள் அறியமற்றோர் கொழுநன் தன்னைச்*
*சார்ந்திருக்கச் சொன்னமுறை தவறா காதே"*

**(கௌமார முறைமை, கருமகாண்டம், 23)**

என்னும் சுவாமிகளின் பாடலில் வெளிப்படுகின்றது. மகளிரின் உளவியல் பாங்கை அறிந்து பேசும் வண்ணச்சரபரின் புதுமைச் சிந்தனையுடன்,

*"காதல் சுரக்கின்ற நெஞ்சத்திலே கெட்ட*
*கைம்மையைத் தூர்க்கா தீர்-ஒரு*
*கட்டழகன் திருத்தோளினைச் சேர்த்திடச்*
*சாத்திரம் பார்க்கா தீர்"*

***(பாரதிதாசன் கவிதைகள் முதல் தொகுதி, ப.107)***

என்று பிற்காலத்தில் பாடிய பாரதிதாசனாரின் சிந்தனை ஒப்பு நோக்கத்தக்கது.

### கலப்பு மணத்தைக் குறிப்பாய்ச் சுட்டல்

இன்று சமயம் விட்டுச் சமயம், சாதி விட்டுச் சாதி, நாடு விட்டு நாடு என்ற வகையில் காதல் திருமணங்கள் நடைபெறுகின்றன. சுவாமிகள் காலத்திலும் இத்தகைய கலப்பு மணங்கள் நிகழ்ந்தன போலும்! ஒரு மனப்பட்ட காதலர்க்குச் சமயம், சாதி, பணம், நாடு ஆகியன ஒரு பொருட்டல்ல என்பதனை உணர்ந்து கலப்பு மணங்களைச் சுவாமிகள் வரவேற்றுப் பாடுகின்றார்.

*"தவமும் சமயமும் சாதியும் பொருளும்*
*அங்கசன் நெடுங் கணைக்கு ஆற்றாது அலமரும்*
*மயலாற் கழிவது மாநிலத் தியல்பே"*

***(அறுவகை இலக்கணம், 322)***

என்று அவர் பாடிச் சாதி ஒழிப்புக்கு வித்திட்டுள்ளார்.

### தமிழ் அறியாத் தெய்வத்தைச் சாடுகிறார்

ஆறு கடவுளர்களையும் ஆயிரமாயிரம் பாடல்களால் பாடி மகிழ்ந்த தண்டபாணிசுவாமிகள், தமிழ்ச்சுவையை அறியாத் தெய்வம் இங்கு தமிழ்நாட்டில் இருக்குமானால், அது தமிழ்ச்சுவை அறிந்த பேயைவிடக்(அலகை) கீழானது என்று கடுஞ்சொற்களால் கனல் தெறிக்கப் பாடிய துணிச்சலுடையவர். இதோ அந்நூற்பா:

*"தமிழ்ச்சுவை அறியாத் தெய்வம் உளதெனில்*
*அஃதுணர் அலகையில் தாழ்வெனல் அறமே."*

***(அறுவகை இலக்கணம், 672)***

### புலமையைப் போற்றும் புதுமை

வண்ணச்சரபர் 72 சருக்கங்களில் 'புலவர் புராணம்' இயற்றியுள்ளார்; அகத்திய மாமுனிவர் சருக்கம் தொடங்கிக் கண்கண்ட புலவர்சருக்கம் வரை புலவர்தம் வரலாற்றைச் செய்யுளில் பாடித் தம் புலமை வீச்சைக்

காட்டியுள்ளார். "புலவர் புராணத்துள் மூன்று இசுலாமியப் புலவர்கள் பற்றிப் பாடியுள்ளதன் வாயிலாக இவருடைய பரந்த மனப்பான்மை நன்கு புலப்படும். மேலும்,

*"எக்குலத் தெவர்ஆ னாலும் இயலருட் புலமை வாய்ந்த*
*பக்குவர் என்னிற் பேசும் பண்பிநூற்குரிய தாமால்"*

***(புலவர் புராணம், 2826)***

என்று காரணம் கூறி, சையது மொய்தீன், உமறுப்புலவர், சவ்வாதுப்புலவர் ஆகிய மூவர்தம் தமிழ்ப்பணியைப் போற்றியுள்ளார்.

காசுக்காகப் புலமையை விற்கக் கூடாது என்ற அழுத்தமான கொள்கை உடையவர் தண்டபாணிசுவாமிகள். புலவர்கள் தங்களுக்குள் பொறாமையால் புழுங்கி முரண்படுதல் கூடாது என்று பேசி நெறிமுறை காட்டும் புதுமை வியந்து போற்றும் தகைத்து.

*"சேவித் தொருவர்பின் செல்வார் புலமையிற்*
*பாடல் விற்றலையார் பரிசுகே டினிதே"*

***(அறுவகை இலக்கணம், 703)***

*"வில்லேற்றுந் தேர்ந்தசில வேந்தரிடம் மிக்கதமிழ்ச்*
*சொல்லேற்றத் தோர்போய்த் தொழா தருள்வாய்"*

***(வெண்பாமாலை)***

எனவும் இவர் கூறுவனவற்றிற்கு ஆணிவேர்,

*"மிடுக்கிலாதானை வீம னேவிறல்*
*விசய னேவில்லுக் கிவனென்று*
*கொடுக்கி லாதானைப் பாரி யேயென்று*
*கூறி னுங்கொடுப் பார்இலை*
*பொடிக்கொள் மேனியெம் புண்ணி யன்புக*
*லூரைப் பாடுமின் புலவீர்காள்"*

***(தேவாரம், 7565)***

என்று சுந்தரமூர்த்தி நாயனார் பாடியதே ஆகும்.

*"வம்மின் புலவீர்! நும்மெய் வருந்திக் கைசெய்துய்ம் மினோ*
*இம்மன்னுலகில் செல்வரிப்போ தில்லை நோக்கினோம்*
*நும்மின்கவி கொண்டு நும்நும் இட்டாதெய்வ மேத்தினால்*
*செம்மின் சுடர்முடி என்திரு மாலுக்குச் சேரும்"*

***(நாலாயிரம், 3214)***

என்று நம்மாழ்வாரின் வழியை வண்ணச்சரபர் ஏற்றுப் புலவர்களுக்கு அறிவுறுத்தக் காண்கின்றோம்.

### *மாற்றாரையும் போற்றும் மனநலம்*

தமிழ் நெடுங்கணக்கில் எ,ஒ. இவற்றின் தலையில் குறில் எனச் சுட்டப் புள்ளி வைத்து எழுதினர் முன்பு. இதனை மாற்றியவர்களைச் சுவாமிகள் மனநிறைவோடு பாராட்டுகின்றார்.

*"எகர ஒகர உயிர்மிசை ஒற்றின்*
*புள்ளி வைத்தமை பொறாஅது ஒருவினர்*
*வாழி என்றே வழுத்துதும் யாமே"*

***(அறுவகை இலக்கணம், 49)***

இவ்விரு உயிர் எழுத்துகளின் குறில், நெடில் வடிவங்களை மாற்றியவர் வீரமாமுனிவராவார். பெயர் சுட்டாமல் அவர் செலலை ஏற்றுப் பாராட்டும் சுவாமிகளின் மனப்பண்பு போற்றத்தக்கது.

'முசுகுந்த நாடகம்' என்ற நாடகத்தையும், 'சத்தியவாசகம்' என்னும் உரைநடை நூலையும் வண்ணச்சரபர் இயற்றியுள்ளமையும் அவருடைய புதுமைப் பேச்சிற்குச் சான்றுகளாகும்.

*"புதுநூற்கள் புதுக்கருத்தால்*
*பொதுவகையால் தரவேண்டும்*
*புலவ ரெல்லாம்"*

***(தமிழியக்கம், ப.18)***

# 9

# சிந்தையை மகிழ்விக்கும் விந்தைகள்

*"சென்ற காலத்தின் பழுதிலாத் திறமும்*
*இனிஎதிர் காலத்தின் சிறப்பும்*
*இன்றெ முந்தருளப் பெற்ற பேறிதனால்*
*என்றைக்கும் திருவருளு டையேம்"*

***(பெரியபுராணம், திருஞானசம்பந்தர் புராணம், 659)***

என்னும் அருளாளர்களின் மரபு வழியில் வந்தவர் வண்ணச்சரபர். அவர் வாழ்வில் நிகழ்ந்த நிகழ்வுகளை எண்ணி அசைபோடுவதில் ஒருவகை மகிழ்ச்சி இருக்கத்தான் செய்யும்!

### *1. தோற்றப் பொலிவின் ஏற்றம்*

திருநெல்வேலியிலிருந்து தண்டபாணிசுவாமிகள் வடதிசைத் தலவழிபாடு செய்யப் புறப்பட்டு வந்தார். அப்போது அவர் திரு அயிந்திபுரம் என்னும் திருமாலவன் தலத்திற்கு வந்து திருக்கோயிலுக்குள் நுழைந்தார். அறுவகைச் சமயமும் ஒரே தன்மையுடையன என்பதால் ஆறுசமயக் குறிகளும் தமது மேனியில் தெரியுமாறு அணியும் வழக்கத்தின்படி அவற்றை அணிந்து கொண்டு அத்திருக்கோயிலுக்குள் சென்றார். அதாவது உடல் முழுவதும் திருநீற்றைப் பூசித் தம்முடைய இரண்டு தோள்களிலும் வடகலை, தென்கலை நாமங்களையும் அணிவார். துளசி, அக்கமணிமாலை இவற்றைக் கழுத்தில் புனைந்து இலங்கோடு, கௌபீனம் பாதக்குறடுகளுடன் கையில் தண்டாயுதமும் கைக்கொண்ட தோற்றத்துடன் வழிபாடு முடித்து வெளியே வந்தார். வெளியே வரும் அவரைக் கோபுரவாயிலில் கண்ட வடகலைப் பிரிவு அந்தணர் இருவர், "எங்களுக்கு ஏற்பட்ட வினாவிற்கு விடை கூறுக" என்றனர். அவரும், "நேர்மையான வினாவிற்கு நேரான மறுமொழி கூறுவேன்" என்றார்.

"எங்கள் வடகலையை ஏன் இடது தோளில் அணிந்தீர்கள்?" என்று வினவினர். உடனே சுவாமிகள், "முதலிரண்டு வினாக்களை விட்டுவிட்டு மூன்றாவதான வினாவைத்தானே கேட்டீர்கள்! எனவே உங்களின் உள்ளத்தில் திருநீற்றின் மீது உள்ள வெறுப்பை விடவும் தென்கலையின்

மீது மிகுந்த வெறுப்பு உள்ளதனை அறிந்து கொண்டேன்! (1) திருநீற்றைப் பூசி அதன் மேல் நாமம் இடாததனைக் குறித்தும் (2) நெற்றியில் திருமண் இடாதது பற்றியும் கேட்காமல் (3) இடப்பக்கத் தோளில் வடகலை நாமம் இட்டதனைக் கேட்டதனால் அறிந்து கொண்டேன்'' என்றார். வைணவர் இருவரும் அவரிடம் அம்மூன்றுக்கும் விடைகூறுமாறு வேண்டினர். சுவாமிகள் அவர்களுக்குப் பின்வருமாறு விடை கூறினார்: ''நாராயணனின் லீலை வடிவங்களே பத்து அவதாரங்களும் என்பதை நீங்கள் ஒப்புக்கொள்வீர்கள்! ஒரு பரம்பொருளின் வடிவமே சமயங்கள் ஆறும் என்று நானறிந்தேன். ஆதலால் திருநீறு, திருமண் இரண்டையும் சமமாகத் தரித்தேன். மேலும் நாம் கிழக்கு நோக்கி நின்று செயல்கள் செய்வதுதான் நம்மரபு. அப்படிக் கிழக்கை நோக்கி நின்றால் நம் வலக்கை தென்புறம் அமைவதால் அதில் தென்கலையையும் இடது தோளில் வடகலைத் திருநாமத்தையும் அணிந்து கொண்டேன். நெற்றியில் ஏதேனும் ஒரு குறியைத்தான் அணியவேண்டும். திருநாமத்தில் ஏதேனும் ஒன்றை நெற்றியில் அணிந்ததால் அரை வைணவன் ஆகிவிடுவேன். இரண்டு நாமங்களும் சமம் என்பதனை அறிந்த நான் அப்படி அணியேன்! உலகமெல்லாம் உண்டுமிழ்ந்த மாலவன் இந்த பேத வாதத்திற்கு அமையமாட்டான்'' என்று விளக்கம் கூறியபின் அவ்விருவரும் மன அமைதி பெற்றுச் சுவாமிகளுக்குப் பிரசாதங்கள் வழங்கிச் சிறப்பித்தனர்.

### *2. உலகளந்த உத்தமன்*

'தருமமிகு சென்னை' என்று போற்றப்பெறும் சென்னையில் கந்த கோட்டம் உள்ளது. அக்கந்தப்பெருமான் மீது வண்ணச்சரபர் பண்ணார் பைந்தமிழில் ஒரு பிள்ளைத்தமிழ் பாடி அதனை அரங்கேற்றி விரிவுரையும் நிகழ்த்தி வந்தார் ஒரு சமயம். சுவாமிகளின் அருந்தமிழ்ப் பொழிவின் நுட்பத்தையும் நிரந்தினிது சொல்லும் திறத்தினையும் பலரும் வியந்தனர். அப்படிச் சுவைத்த வைணவ அன்பர் ஒருவர் முருகன் கோயிலின் வாயிலிலேயே நின்று நாடோறும் கேட்டு வந்தார். ஒருநாள் பொழிவு முடிந்து வெளியில் வந்தபோது சுவாமிகளின் அணுக்கத் தொண்டர் ஒருவரிடம் அந்த வைணவர், ''சுவாமிகளின் பாடலும் விளக்கமும் மனத்தைக் கவர்கின்றன. ஆனால் இது சைவக் கோயிலாக இருப்பதனால் உள்ளே வந்து கேட்பதற்கு எனக்குத் தடையாயிருக்கிறது'' என்றாராம். இச்செய்தியைச் சுவாமிகளிடம் அணுக்கத் தொண்டர் சொன்னார். அதனைக் கேட்ட சுவாமிகள் மகிழ்ந்தார். ''நான் இப்போது கூறுவதினை அந்த அன்பரிடம் கூறுக'' எனறார். ''திருமால் வாமனனாக வந்து மாவலிச் சக்கரவர்த்தியிடம் மூன்றடி மண்கேட்டு உலகை அளந்தபோது, இந்தக்

கந்தசாமி கோயிலைச் சேர்த்து அளந்தாரா? இல்லை விட்டுவிட்டு அளந்தாரா?'' என்று சொல்லி மறுமொழி கேட்டு வருமாறு பணித்தார். வைணவ அன்பரிடம் அணுக்கத் தொண்டர் சுவாமிகள் கூறிய வினாக்களைச் சொன்னாரோ இல்லையோ மறுநாள் தொடங்கிச் சுவாமிகளுக்கு முன்னாலேயே அமர்ந்து பொழிவைக் கேட்டு மிகவும் மகிழ்ந்தாராம் அவர்! இப்படிப் பிறரைத் தம் கருத்துக்கு இணங்க வைக்கும் சுவாமிகளின் சதுரப்பாடு எண்ணி மகிழ்தற்குரியதாகும்.

### 3. இடும்பனுக்கு இட்ட கட்டளை

சுவாமிகள் ஒருமுறை பழனிமலையில் முருகனை வணங்கச் சென்றார். அப்போது இடும்பன் கோயிலில் பலியிடுவது பற்றிப் பிறர் கூற அறிந்தார். உயிர்க்கொலை புரிவதனைத் தவிர்க்கப் பாடுபட்ட தண்டபாணிசுவாமிகள், இடும்பனைக் கண்டு ஒரு வெண்பாவில் அறிவுரை சொல்லிக் கட்டளை இடுகின்றார்.

*''பாடுமன்பர் போற்றும் பழனிமலைப் பாதியில்நின்று*
*ஆடும் இடும்பா! அறையக்கேள்! -நீடும்*
*கொலைகண்டு மாமிசம்உட் கொண்டுவக்க வேண்டாம்*
*நிலைகண்டு மெய்யருளில் நில்''*

***(தனிப்பாடல் திரட்டு, 195)***

இவ்வெண்பாவைச் சுவாமிகள் பாடிய பின்பு அங்கு பலியிடுவது நிறுத்தப்பட்டதாம்.

சுவாமிகள் ஒற்றியூர் சென்றிருந்த போது அங்குள்ள காளி கோயிலில் கொலை நடப்பதனை அறிந்து ஒரு வெண்பாவைப் பாடி அங்கே நிகழ்ந்து வந்த கொலையையும் நிறுத்தியுள்ளார். அப்பாடல் இதோ:

*''ஒற்றியூர்க் காளி! உனக்கேனோ ஊன்விருப்பம்?*
*வெற்றிமழு வோன்விருப்பு வேண்டாமோ-சிற்றுயிரைக்*
*கொல்வார்க்கும் இன்பம் கொடாதான் அவன்கண்டாய்!*
*நல்வார்த்தை சொன்னேனிந் நாள்''*

***(தனிப்பாடல் திரட்டு, 193)***

இவ்வாறு சுவாமிகள் சிற்றுயிர்க்கு உற்ற துணைவராக இருந்து பல கோயில்களில் பலியிடும் தீய பழக்கத்தைத் தடுத்து நிறுத்தியுள்ளார்.

### 4.குமரவேளிடம் குறுக்குக் கேள்வி

ஆமாத்தூரிலே குடிகொண்டுள்ள ஆறுமுகன் திருவிழாவின் போது ஒருமுறை வள்ளி,தெய்வானை உடன் இல்லாமல் வீதியுலா வந்தான். இதனைக் கண்ட தண்டபாணிசுவாமிகள்,

*"மாமாது கேள்வன் விழியாற் பயந்து மருவுமின்னார்*
*தாமா தரித்தரு கேயிருந் தாரைத் தணந்துவிட்டுத்*
*தீமாச் செகுக்க வடிவேல் பிடித்துத் தெருவில் வந்தாய்!*
*ஆமாதை வாழ்குகனே! இது காண்நல் அதிசயமே!*

**(தனிப்பாடல் திரட்டு,132)**

என்று குறுக்கு வினாக் கேட்டு வியக்கின்றார்

### 5.பிழையான பாட்டைக்கேட்ட முருகன் நோய்தீர்த்தல்

பிழையான பாடலைப்படிக்க நேர்ந்தால் பழந்தமிழ்ப் புலவர் சாத்தனார் எழுத்தாணியைக் கொண்டு தம்முடைய தலையிலே குத்தி வருத்திக் கொள்வாராம். ஆனால் ஆறுமுருகனோ அப்படிச் செய்யவில்லை. அவன் செய்த செயலைப் சுவாமிகள் மொழியிலே காண்போம்.

திருவேரகத்தில் ஓர் இறையன்பன் முருகனிடம் தன் வயிற்று வலிநீங்க வேண்டி அருணகிரிநாதரின் திருப்புகழைப்பாடினான். அப்பாடலின் எழுத்து ஓசை எல்லாம் பிழையாகுமாறு பாடினான். அது துன்பத்தேள் வந்து கொட்டுவது போலிருந்தது. பிழையைப் பொறுத்துக் கொள்ள முடியாத முருகன் அன்றிரவு அவனுடைய கனவில் தோன்றி, "என் தொண்டனின் தமிழ்ப் பாடலைச் சிதைக்காதே! இன்றோடு உன் வயிற்று நோய் தீர்ந்து போகும்" என்றானாம். புலவர்புராணத்தில் வரும் அப்பாடல் நகைச்சுவை மெய்ப்பாட்டுடன் அமைகிறது.

*"ஏரகத்தில் ஒருவயிற்று வலிக்காரன்*
*திருப்புகழால் எழுத்தோ டோசைச்*
*சோரமுறத் துதிசெய்தான்; அவன்கனவிற்*
*குகன்திகழ்ந் 'தென் தொண்டன் பாடல்*
*சீரழியேல் இன்றுடன்உன் நோய்தீர்ந்தது'*
*எனப்பகர்ந்து திருத்தி செய்தான்;*
*சாரமுறத் துதிப்பார்க்கென் பயன்தருவா*
*னோஉணர்மின் சகத்துள் ளோரே"*

**(புலவர் புராணம், 1142)**

### *6. உருண்டை ஒன்றுதான்*

குமாரபுரியில் சண்முகசுவாமிகளுடைய தவச்சாலையிலே வண்ணச்சரபர் ஒரு முறை தங்கியிருந்தார். அப்போது தில்லைத் திருவாபிரம் பதிப்பிக்கப் பெற்றது. அப்பனுவலின் இறுதியில் வரும் திருப்புகழ்ப் பாடலில் ''பெருமானே!'' என்ற விளியுடன் சுவாமிகள் முடித்திருந்தார். இப்பனுவலை அரங்கேற்றினார்; அப்போது அன்பர் ஒருவர் ஐயம் ஒன்றை எழுப்பினார். ''அருணகிரிநாதர் திருப்புகழில் 'பெருமாளே' என்று வருமாறு பாடியுள்ளார். தாங்களோ இந்தத் திருப்புகழில் 'பெருமானே' என்று பாடியுள்ளீர்கள்! இரண்டிற்கும் என்ன வேறுபாடு?''எனக் கேட்டார். இதற்குச் சுவாமிகள் ''ஓர் உருண்டைதான்!'' என்று எளிதில் விடை கூறி விந்தையை ஏற்படுத்தினார். ளகரத்திற்கும் னகரத்திற்கும் இடையிலே ஒரு சுழிதானே வேறுபாடு! இதனை அந்த அன்பர் அறியவில்லை! சுவாமிகள் ''பெருமாள் பெருகிய மாட்சியுடையவன்; பெருமான் பெருகிய மேன்மையினன்; இரண்டுக்கும் பொருள் ஒன்றேயாகும்'' என்று அவருக்குத் தெளிவுபடுத்தினாராம்!

### *7.சொல்வலைச் சிற்பி*

திருவள்ளுவரைச் 'சொல்வலை வேட்டுவர்' எனச் சிறப்பித்துரைப்பார். அதனைப் போல் தண்டபாணிசுவாமிகள் சொல்வலைச் சிற்பியாக இருந்து பாடல்களில் பற்பல நயங்களைச் செதுக்கியுள்ளார். சுவாமிகள் ஓராண்டின் பன்னிரண்டு திங்களின் பெயர்களும் வருமாறு ஒரு வெண்பாப் பாடியுள்ளார். அது,

*''ஆடிப்பின்னே ஆவணிபோம் அப்பாற் புரட்டாசி*
*தேடிப்போம் ஐப்ப சிகார்த்திகைபோம்-நாடிவரும்*
*மாரிகழி தைமாசி பங்கூனி சித்திரையின்*
*நேரியவை காசிஆ னி.''*

**(தனிப்பாடல் திரட்டு, 312)**

என்பதே அவ்வெண்பா. இங்கு மாரிகழி என்பது மார்கழியையும், பங்கூனி என்பது பங்குனியையும் குறிக்கும்.

### *8.இந்தியில் பாடிய செந்தமிழ்*

வண்ணத் தமிழ்ப்பாக்களை வடித்துத் தந்த வண்ணச்சரபர் சொற்சித்திரங்களையும் செதுக்கித் தந்துள்ளார். அம்மட்டோ! அவர் குமரகுருபரர் தில்லி அரசரிடம் இந்துஸ்தானியிலே பேசியது தெரியும் என்பதனை உறுதிப்படுத்துவதுபோல் சுவாமிகள் இந்தி மொழியில் இரண்டு பாடல்களைப் பாடியுள்ளார். அதில் ஒன்றை இங்கே காண்போம்:

*"அத்மியாஞ்சொப் மேரேபாஸ் ஆனாசா னாதேரா*
*கொத்பாமிஞ் சேவோனா கோடேபர்க் - கத்லம்பே*
*பாலா வடாய்முர்கை பக்கரா சங்காத்ஷோக்*
*சோலாரூப் வாலாபாத் சுன்"*

***(தனிப்பாடல் திரட்டு, 394)***

"குதிரையின்மீது (இங்கே மயில்) வருகின்ற பெருமானே! என் வார்த்தைகளைக் கேட்டு அருளுவாயாக!" என்னும் கருத்தில் இப்பாடல் அமைகின்றது. இந்திச் சொற்களைக் கொண்டு இயற்றப்பட்ட சொற்சித்திரம் இது என்பது விந்தைதானே!

## *9. திருமாலே நீர் தூங்குவதேன்?*

தண்டபாணிசுவாமிகள் சமயப் பொதுமை உணர்வுமிகக் கொண்டவர் அவர் வைணவக் கடவுளாகிய திருமாலைப்பற்றிப் பாடிய பாடல்கள் பலவுள. அவற்றுள் ஒன்று திருவனந்தபுரத்து அறிதுயில் கொண்டிருக்கும் மாலைப் பற்றியது. திருமழிசை ஆழ்வார் தம் அருமை மாணவன் கணிகண்ணன் நாடு கடத்தப்பட்டவுடன், காஞ்சித் திருக்கோயிலில் உள்ள பெருமாளையும் தமக்குப் பின்னால் எழுந்து வந்து விடுமாறு சொல்லிப் போகின்றார். பாம்பணைப்பள்ளியில் துயில் கொண்டிருக்கும் திருமாலும் திருமழிசைப் புலவன் பின்னால் போகின்றார். இதனை,

*"கணிகண்ணன் போகின்றான் காமருபூங் கச்சி*
*மணிவண்ணா நீகிடக்க வேண்டா - துணிவுடைய*
*செந்நாப் புலவனும் போகின்றேன் நீயுமுன்றன்*
*பைந்நாகப் பாய்சுருட்டிக் கொள்"*

***(ஆழ்வார்கள் வைபவம், ப. 98)***

எனவரும் பாடலால் அறிந்துணர முடிகின்றது. 'திருமழிசையின் செந்தமிழ்ச் சொல்லுக்குக் கட்டுப்பட்ட மணிவண்ணனே! என்னாவால் எடுத்துரைக்கும் இனிய தமிழ் கேட்டும் உறங்கிக் கொண்டிருக்கின்றாயே!' என்று திருவனந்தைத் திருமாலைத் துணிவுடன் வேண்டுகின்றார் தண்டபாணி சுவாமிகள்,

*"முன்னால் ஒருவன் மொழிந்த தமிழ்ப் பாடலுக்காப்*
*பின்னாலே போனதுண்மைப் பேச்சென்றால் - என்னாவாற்*
*சொல்லும் தமிழ்கேட்டும் தூங்குதற்கு ஞாயமுண்டோ?*
*நல்லனந்தை நாரா யணா"*

***(தனிப்பாடல் திரட்டு, ப.45)***

### 9. சூரன் மிகப் பொல்லான் போலும்

தண்டபாணிசுவாமிகள் முருகப் பெருமானிடம் அளவிறந்த ஈடுபாடு கொண்டவர். முருகப் பெருமானின் திருக்கோவில்களில் ஐப்பசித் திங்களில் சுக்கில பட்சத்தில் கந்தசட்டி விழா நடைபெறும். முருகவேள் சூரபதுமனை வீழ்த்திய நாள் இது. கந்தசட்டி அன்று சூரசம்மாரம் நடைபெறும். இதனைக் கந்தபுராண உபதேச காண்டம் விரித்துரைக்கும்.

திருக்குற்றாலக் குறவஞ்சியிலே வரும் குறவன் உடன் வரும் குளுவனைப் பார்த்துப் பேசுவதாகப் பாடல் ஒன்றில் இக்கந்தசட்டி விழா பேசப்படுகிறது. ''ஏ! குளுவா! இங்கு வரும் கொக்குகளை வலையிலே தட்டி வீழத்தலாமோ என்று நீ தயங்காதே! நம் குலமுதல்வன் குமரவேள் கொக்கு வேட்டை ஆடி நமக்கு வழி காட்டியுள்ளார். அவர் ஆடிய முதல் வேட்டையே கொக்கு வேட்டைதான். அக்கொக்கை வேட்டை ஆட ஆறுநாள் தொடர்ந்து திரிந்தார். ஆறாம் நாள் அக்கொக்கை அடித்தார். அடித்த கொக்கை அவித்துச் சாறாக்கிச் சட்டியிலே வைத்தார்கள். சட்டியில் வைத்த சாற்றை வேதியரும், சைவர்களும், முனிவர்களும் விரும்பி ஏற்றனர். ஆகவே நாமும் கொக்கு வேட்டை ஆடுவோம்'' என்றான் குறவன். ஆம்! இங்கே ''கொக்கு'' என்பது மாமரமாக நின்ற சூரபதுமனையே ஆகும். சட்டியில் வைத்த சாறு என்பது ஆறுநாள் விழாவைக் குறிக்கும்; சாறு என்றால் விழா என்று பொருள்.

இவ்வாறு கந்தர்சட்டி ஆறாம் நாள் நடைபெறவேண்டிய சூரசம்மாரம் திருவாமாத்தூரிலே ஓராண்டு பெரும் மழையினால் எட்டாம் நாள் நடைபெற்றது. இதனை அறிந்த தண்டபாணிசுவாமிகள் ஒரு பாடல் பாடினார். 'எல்லா ஆண்டுகளிலும் வருகின்ற சூரன் போல் அல்லாமல் இவ்வாண்டில் வந்த சூரன் வலிமையுடன் போர் செய்தான். அவன் சட்டி அன்று மடியாமல் எட்டாம் நாள் மடிந்தான். இதற்கு ஏதும் ஞாயம் உண்டோ?' என்று வினவும் தன்மையில் அமைகிறது அவருடைய தனிப்பாடல் ஒன்று.

*''இவ்வருடச் சூரன்மிகப் பொல்லான் போலும்*
*இதற்குமுந்தும் வருடத்துச் சூரர் எல்லாம்*
*அவ்வவ்வரு டத்தில்வந்த கந்த சட்டி*
*அதில்மடிந்தார்; இவன்றான்அட் டமிவந் துற்றும்*
*வெவ்வலியாற் போர்செய்கின்றான் இதற்கோர் ஞாயம்*
*வேறிருந்தால் இக்கணமே விளம்ப வேண்டும்*
*பௌவவுடைப் புவிமுகம்நேர் ஆமாத் தூரின்*
*பரமனெற்றிக் கனல்விழியாற் பயந்த சேயே!''*

**(தனிப்பாடல் திரட்டு, 133)**

எட்டாம் நாள் நடைபெற்ற சூரசம்மாரத்தைக் கவிதை நயத்துடன் நகைச்சுவை உணர்வுடன் கூறியுள்ள திறம் எண்ணி மகிழத்தக்கது.

### 10. காளமேகத்திற்கு விளக்கம்

ஒருமுறை திருமலைராயனின் அவைக்குச் சென்றார் காளமேகப் புலவர். அவையில் வீற்றிருந்த புலவர்கள் செருக்குற்றுத் தம்மைக் கவிராயர்கள் என்று இறுமாந்து கூறிக்கொண்டனர். அம்மட்டோ! காளமேகப் புலவரை ஏளனமும் செய்தனர். இதனைக் கண்ணுற்ற காளமேகம் பொழியத் தொடங்கிற்று. கவி என்றால் குரங்கு என்றொரு பொருள் உண்டு. கவிராயர் என்றால் குரங்குகளின் தலைவர்கள் என்று பொருள் வரும். திருமலைராயன் அவையினை அணிசெய்த கவிராயர்களைப் பார்த்து, "வாலைக் காணோம்? நீண்ட வயிற்றைக் காணோம்? முன்னால் இரண்டு கால்களைக் காணோம்? குழிந்த கண்களையும் காணோம்? இப்படிப்பட்ட அடையாளங்கள் இல்லாத கவிராயர்களே!" என்று அவர் பாடியவுடன் அவையே அடங்கிப் போய்விட்டது. சிரித்த புலவர்களின் தலைகள் கலையிழந்து தொங்கின! இதோ காளமேகத்தின் பாடல்,

*"வாலெங்கே நீண்ட வயிறெங்கே முன்னிரண்டு*
*காலெங்கே உட்குழிந்த கண்ணெங்கே - சாலப்*
*புவிராயர் போற்றும் புலவீர்காள் நீவிர்*
*கவிராயர் என்றிருந்தக் கால்"*

**(காளமேகம் பாடல்கள், புலியூர்க்கேசிகன் உரை, ப. 37)**

இப்படிப் பாடிய காளமேகத்தின் குரலுக்கு விளக்கம் தருவார் போலத் தண்டபாணிசுவாமிகள் ஒரு பாடல் பாடியுள்ளார். சொல் விளக்கமாக அமையும் அதனைக் காண்போம்:

*"வாலுடனே நீண்ட வயிறுடனே மற்றிரண்டு*
*காலுடனே உட்குழிந்த கண்ணுங்கேள் - ஓலையினில்*
*ஊன்றிக் கரம்கண், நடு ஒண்வயிறு, கைவிரல்கள்*
*ஏன்றவிரு கால், நுனிவா லே"*

**(தனிப்பாடல் திரட்டு, 315)**

சுவாமிகள் காளமேகத்தின் கடுகடுத்த சொல்லுக்கே ஒரு புதிய விளக்கம் கூறித் தம் புலமைச் சித்திரத்தை வெளிப்படுத்தி விடுகின்றார். பனை ஓலையில் எழுத்தாணியை ஊன்றி எழுதினமையால் பள்ளம் ஏற்படுகின்றது. அவையே உட்குழிந்த கண்கள் என்று விளக்கம் சொன்னார். உட்குழிந்த கண்ணுக்கு விளக்கம் ஓலையினில் ஊன்று அக்கரம் கண் என்பதாகும். ஏட்டில் நடுவிடமே நீண்ட வயிறாகும் என்றார். ஏட்டின் நுனிப்பகுதியே வாலாகும் என்பது தண்டபாணிசுவாமிகளின் புது விளக்கம்.

ஏட்டில் எழுதும்போது இடது கை விரல்கள் ஓலையைத் தாங்குகின்றன. அவ்வாறு தாங்கும் விரல்களே கால்கள் ஆகும் என்றார். இப்பாடல் காளமேகத்தின் பாடலுக்குப் புதிய விளக்கம் தந்து நிற்கிறது.

### *11. கோட்டூர்ச் சைவன் கொடுத்த விருந்து*

உலகியலில் அன்றாடம் நடைபெறும் நிகழ்ச்சிகளையும் கூடப் பாடிச் சிறப்பித்த பெருமை தண்டபாணிசுவாமிகளுக்கு மிகவும் உண்டு. கோட்டூரில் வாழ்ந்த ஒரு சைவ சமய அன்பர் சுவாமிகள்பால் அன்பு கொண்டு, தொடுத்த தென்னை ஓலையில் இன்முகத்துடன் இனிய சுவைமிக்க உணவினை இட்டுப் பேணினார். சோறு இட்டார்; இலைக்கறி வைக்கப்பட்டது; சுண்டைக்காய் பரிமாறினார்; பருப்பு இட்டார்; குழம்பும் ஊற்றினாராம் அச்சைவ அன்பர். இச்செய்தியைச் சுவாமிகள் செந்தமிழ்ப் பாடல் ஒன்றில்,

*"கோட்டூரில் சைவன்முகம் கோணாமற் கூடத்தில்*
*ஈட்டுதென்னை ஓலைஇலை கொணர்ந்து - போட்டெனக்குச்*
*சோறும் இலைக்கறியும் சுண்டைக்கா யும்பருப்புச்*
*சாறுமிட்டுப் பெற்றான் தவம்"*

**(தனிப்பாடல் திரட்டு, 229)**

இவ்வாறு கோட்டூர்ச் சைவன் அளித்த விருந்தைத் தண்டபாணிசுவாமிகள் நயந்தோன்றக் கூறி மகிழ்ந்தார்.

### முடிவுரை

*"உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிதல்*
*அனைத்தே புலவர் தொழில்"*

**(திருக்குறள், 394)**

என்னும் குறள் வழியில் சுவாமிகள் புலமைச் செறிவுடன் பொதுமை நலம் கருதிப் பல்வகைப் பனுவல்களையும், இறையுணர்வுப் பதிகங்களையும் இயற்றித் தமிழ் மொழியை வளப்படுத்தியுள்ளார். சமுதாய நலனிலும் மறுமலர்ச்சியிலும் அழுத்தமான ஈடுபாடு காட்டிய சுவாமிகள் கொல்லாமை மற்றும் புலால் உண்ணாமைக் கோட்பாடுகளை வள்ளுவ வழியில் வலியுறுத்தியவர். பத்தொன்பதாம் நூற்றாண்டில் சைவ, வைணவ சமயத்தினர் தங்களுக்குள் ஒற்றுமை உணர்வு இன்றி நெல்லிக்காய் மூட்டையை அவிழ்த்து விட்டதுபோல் பிளவுபட்டுப் பிரிந்து கிடந்தனர். இதனைக் கண்ட வண்ணச்சரபம் தண்டபாணிசுவாமிகள் ஆறு சமயத்தவர்களையும் உறவுகொள்ள வைத்து இணைக்க வேண்டிப் பெரும்

முயற்சி எடுத்துக் கொண்ட சமய நல்லிணக்கச் சிந்தனையாளர் ஆவார். அவருடைய பெருமையைப் புகழவந்த உவமைக் கவிஞர் சுரதா,

*"அருணகிரி நாதருக்கு விழாவுண் டானால்*
*அவர்போலும் முருகனருள் பெற்று வண்ணச்*
*சரபமெனப் பெரியோரால் புகழப் பெற்ற*
*தண்டபாணி சுவாமிக்கேன் விழாக்கள் இல்லை?*
*திருவருளைப் பெற்றாரை மதித்தல் போன்று*
*சித்தனைவா திகளையும்நாம் மதித்தல் வேண்டும்*
*அருமருந்து மாந்தர்க்குத் தேவை யென்றால்*
*ஆரமுதும் மாந்தர்க்குத் தேவை யன்றோ?"*

***(உவமைக் கவிஞர் சுரதா, தேன்மழை, ப.202)***

என உணர்ந்து நினைந்து போற்றுவது போல் பன்முகச் செல்வராகிய வண்ணச்சரபரை நாமும் வியந்து போற்றித் தொழுவோம்!

---

# வண்ணச்சரபரின் படைப்புகள்

| வரிசை எண் | நூற்பெயர் | பாடல் எண்ணிக்கை |
|---|---|---|
| | **சூரியன்** | |
| 1. | இரவி எழுபது | 72 |
| 2. | சூரியமூர்த்தி எழுகூற்றிருக்கை | 2 |
| 3. | சூரியமூர்த்தி பதிகம் | 10 120 |
| 4. | சூரியமாலை | 32 |
| 5. | வெண்பா | 2 |
| | **சிவன்** | |
| 6. | சிவபெருமான் ஏகபாதத்தந்தாதி | 32 |
| 7. | சிவபெருமான் ஒன்பதுகூற்றிருக்கை | 2 |
| 8. | சிவபெருமான் சதகம் | 102 |
| 9. | சிவபெருமான் பதிகம் 9 | 108 |
| 10. | சிவபெருமான் பதிக மணிமாலை | 300 |
| 11. | சிவபெருமான் வெண்பா | 4 |
| | **சக்தி** | |
| 12. | அம்பிகை எழுகூற்றிருக்கை | 2 |
| 13. | அம்பிகை ஏழு பதிகம் | 79 |
| 14. | அம்பிகை மருந்து கொடுத்த பதிகம் | 12 |
| 15. | அம்பிகை பதிகம் 5 | 60 |
| 16. | ஆணையிட்டழைத்த சரசுவதி பதிகம் | 12 |
| 17. | ஆணையிட்டழைத்த திருமகள் பதிகம் | 12 |
| 18. | கலைமகள் பதிகம் 3 | 36 |
| 19. | காமாட்சி வெண்பா | 1 |
| 20. | குஞ்சரி பஞ்சகம் | 7 |
| 21. | சக்தி கவச நூல் | 102 |
| 22. | சக்தி பஞ்சகம் | 7 |
| 23. | திரிபுரசுந்தரி பதிகம் | 12 |

| | | |
|---|---|---|
| 24. | திருமகள் பதிகம் 3 | 36 |
| 25. | தெய்வயானைப் பதிகம் | 12 |
| 26. | பூமாதேவி பதிகம் | 12 |
| 27. | வள்ளித்தாய் பதிகம் | 12 |
| 28. | வள்ளி பஞ்சகம் | 7 |
| 29. | வள்ளி பதிகம் | 12 |

## திருமால்

| | | |
|---|---|---|
| 30.* | அரியேகபாதத்தந்தாதி | 32 |
| 31. | திருமாலந்தாதி | 102 |
| 32. | திருமால் எழுகூற்றிருக்கை | 2 |
| 33. | திருமால் தெய்வீகப் பதிகம் 1 | 12 |
| 34. | திருமால் துயில் நீங்கு பதிகம் 1 | 12 |
| 35. | திருமால் பத்துப் பதிகம் | 112 |
| 36. | திருமால் பதிகம் 7 | 84 |

## விநாயகர்

| | | |
|---|---|---|
| 37.* | கணபதி மாலை | 102 |
| 38. | பிரணவ விநாயகர் பதிகம் | 12 |
| 39. | மணிமுத்தாநதி விநாயகர் வெண்பா | 1 |
| 40. | விநாயகர் ஐந்து பதிகம் | 57 |
| 41. | விநாயகர் எழுகூற்றிருக்கை | 2 |
| 42. | விநாயகர் பதிகம் 5 | 60 |

## முருகப் பெருமான்

| | | |
|---|---|---|
| 43. | அண்டவாதமும் சளிப்பும் நீங்க வேண்டு பதிகம் | 13 |
| 44. | அயிலணிகைப் பெருமைக்காரன் வகுப்பு | 2 |
| 45. | எண்கூற்றிருக்கை | 2 |
| 46. | எழுகூற்றிருக்கை | 2 |
| 47. | ஏகத்தாள் இதழகலந்தாதி | 13 |
| 48. | ஏடணை தீர்க்கவேண்டு பதிகம் | 13 |
| 49. | ஏழிளையனார் திருப்புகழ் | 9 |
| 50. | கங்கைப் பதிகம் (முருகன்) | 13 |
| 51.* | கந்தனைத் திருடன் என்ற பதிகம் | 13 |
| 52.* | கந்தனை நல்லவன் என்ற பதிகம் | 13 |
| 53. | கடன் தீர்த்த முருகன் பதிகம் | 13 |
| 54. | கலிவிடந்தாதி | 102 |

| | | |
|---|---|---|
| 55. | கிணற்றுப் பதிகம் (முருகன்) | 13 |
| 56. | கீர்த்தனை | 20 |
| 57. | கௌமார தீபம் | 18 |
| 58.* | கௌமாரத்தொகை | 14 |
| 59. | கௌமாரநூல் | 12 |
| 60. | கௌமாரவிநோதம் | 25 |
| 61. | கௌமாரலகரி | 102 |
| 62. | சுப்ரமணிய நூல் | 32 |
| 63. | சண்முகச்சிவன் பதிகம் | 13 |
| 64. | சிங்காரவேலர் வேண்டுகோட் பதிகம் | 13 |
| 65. | சித்திரத்துறை சிவகுருபரன் பதிகம் | 13 |
| 66. | சிவகுருபரன் பதிகம் | 13 |
| 67. | செம்பொனந்தாதி | 102 |
| 68. | தலையணிச் சீரிதழகல் அந்தாதி | 102 |
| 69. | திருச்செந்தூரான் தேடிவந்த பதிகம் | 13 |
| 70. | திருக்கைவேற் சேவகன் பதிகம் | 13 |
| 71. | திருப்புகழ் | 107 |
| 72. | திருப்புகழ் | 2 |
| 73. | தேள் விடந்தீர்த்த பதிகம் | 13 |
| 74. | தூதுவிட்ட பதிகம் | 13 |
| 75. | நீட்டுரமாலை | 34 |
| 76. | படைவீட்டுப் பதிகம் 36 | 468 |
| 77.* | படைவீட்டுத் திருப்புகழ் | 38 |
| 78. | பற்றொழிய வேண்டுபதிகம் | 13 |
| 79. | பூமிதேவிப் பதிகம் (முருகன்) | 13 |
| 80. | பெரிய குருபரன் பதிகம் | 13 |
| 81. | பொதுத் தெய்வப் பதிகம் (முருகன்) | 13 |
| 82.* | போற்றிப் பனுவல் | 8 |
| 83. | மலைநாட்டுக் குகன் பதிகம் | 13 |
| 84. | முருகன் கௌமார அந்தாதி | 102 |
| 85. | முருகன் பதிகம் 82 | 106 |
| 86. | முருகன் பதிக வருஷம் | 722 |
| 87.* | முருகன் கலிவெண்பா | 1 |
| 88.* | முருகன் வெண்பா | 2 |
| 89.* | முருகானந்த லகரி | 102 |
| 90. | வகுப்பு | 1 |
| 91. | விடுகவிகள் | 8 |

| | | |
|---|---|---|
| 92. | வெண்பா | 19 |
| 93. | வெள்ளைப்பூ தந்த குகன் பதிகம் | 13 |
| 94. | வேலாயுத வண்ணப்பதிகம் | 13 |

**சமயாதீதம்**

| | | |
|---|---|---|
| 95. | எழுகூற்றந்தாதி | 87 |
| 96. | சண்மத கௌமார சிலேடைப் பதிகம் 6 | 72 |
| 97. | சமயாதீதத் திருப்புகழ் | 105 |
| 98. | சமயாதீதப் பதிகம் | 17 221 |
| 99. | சமயாதீத வண்ணப் பதிகம் | 2 26 |

**சமரசம்**

| | | |
|---|---|---|
| 100. | அரன், அரி சிலேடைப் பதிகம் | 12 |
| 101. | ஏழாயிரப்பிரபந்தம் | 7008 |
| 102. | கலிநீக்க வேண்டு சமரசப்பதிகம் | 13 |
| 103. | கலியறச் சொன்ன பதிகம் | 13 |
| 104. | சந்தக்கலித்துறை யந்தாதி | 32 |
| 105. | சமரசத் தசாங்கக் கூற்றிருக்கை | 2 |
| 106. | சமரசப் பதிகம் | 16 |
| 107. | சமரசப் பதிகம், நாய்க்குருளைப் பதிகம் | 36 |
| 108. | சமரச முன்னிலை நூல் | 102 |
| 109. | தவளைப் பதிகம் | 13 |
| 110. | தெய்வப்பதிகம் | 13 |
| 111. | பெருமாளந்தாதி (முருகன், திருமால் சிலேடை) | 102 |
| 112. | பெருமானந்தாதி (சிவன், திருமால் சிலேடை) | 102 |
| 113. | பிணிதீர்த்த பதிகம் | 13 |
| 114.* | மொழிநெறி எழுபா | 9 |

**இலக்கணம்**

| | | |
|---|---|---|
| 115.* | அறுவகை இலக்கணம் | 7786 |
| 116.* | ஏழாம் இலக்கணம் | 318 |
| 117.* | வண்ணத்தியல்பு | 111 |

**பலவகை நூல்கள்**

| | | |
|---|---|---|
| 118. | அகத்தியர் பதிகம் | 2 26 |
| 119.* | அணிற்காத்த பதிகம் | 12 |

| | | |
|---|---|---|
| 120. | அபேத மாலை மாற்று | 1 |
| 121. | அரசாட்சி நூல் | 102 |
| 122.* | அரிஹரபுத்திரர் பதிகம் | 13 |
| 123.* | அருணகிரிநாதர் புராணம் | 441 |
| 124. | அருளாட்சி நூல் | 137 |
| 125. | அருளானந்தமூர்த்தி பஞ்சகம் | 7 |
| 126.* | ஆங்கிலியர் அந்தாதி | 102 |
| 127. | ஆயிரந் தீபம் | 13 |
| 128.* | ஆறெழுத்தலங்காரம் | 103 |
| 129. | இருவர் இரட்டை மணிமாலை (சேரமான், ஔவை) | 22 |
| 130. | இன்னிசைப் பஃறொடைவெண்பா | 1 |
| 131. | ஈசான தேசிகப் பதிகம் | 12 |
| 132. | உண்மைப் பதிகம் | 12 |
| 133.* | எழுபா எழுபது | 72 |
| 134. | ஏகபாதம் | 2 |
| 135.* | ஏகன் எழுபது | 72 |
| 136. | ஐந்துமுகச்சிவன் ஆறுமுகச் சிவன் | 13 |

**சிலேடைப்பதிகம்**

| | | |
|---|---|---|
| 137. | ஒருதொடைச் செய்யுள் நீரோட்டகக் குகனந்தாதி | 102 |
| 138. | ஒரு பொருள் விருத்தம் | 1 |
| 139. | ஔவையார் பதிகம் | 12 |
| 140. | கங்கை அந்தாதி | 1102 |
| 141. | கட்டளைக் கலித்துறை | 2 |
| 142. | கண்ணோய் தீர்த்த பதிகம் | 13 |
| 143. | கல்லுப்பெருமாள் காட்டுப் பெருமாள் பதிகம் | 13 |
| 144. | கல்விழுந்திடாதபடி காத்த பதிகம் | 13 |
| 145. | கவி எழுதல் விழைந்த பதிகம் | 12 |
| 146. | காப்பு மாலை | 5 |
| 147. | கிணற்றுத் திருப்புகழ் | 1 |
| 148. | கிணற்று வண்ணப்பதிகம் | 13 |
| 149. | கீர்த்தனைகள் | 9 |
| 150. | குகை நமசிவாயர் பதிகம் | 12 |
| 151. | குபேரன் பதிகம் | 12 |

| | | |
|---|---|---|
| 152. | குரு முன்னிலைநூல் | 38 |
| 153.* | குருநாதன் அந்தாதி | 102 |
| 154.* | குருபரதத்துவ காவியம் | 1261 |
| 155. | கருமுதற் பாசுரம் | 14 |
| 156. | குவிபா ஒருபஃது | 12 |
| 157. | கைக்கிளை மறுத்த பதிகம் | 12 |
| 158. | கைநோய் தீர்த்த பதிகம் | 13 |
| 159. | கொலைநீக்க வேண்டுபதிகம் | 13 |
| 160.* | கௌமார முறைமை (காண்டம் 3) | 308 |
| 161. | ஞான அந்தாதி | 32 |
| 162.* | சடகோபர் சதகத்தந்தாதி | 112 |
| 163. | சடகோபர் பத்து | 10 |
| 164. | சதகவுந்தி | 102 |
| 165. | சத்தசதகம் | 702 |
| 166. | சத்திய சாட்சிப் பதிகம் | 13 |
| 167.* | சத்திய சூத்திரம் | 122 |
| 168. | சத்திய முன்னிலைப் பதிகம் | 13 |
| 169.* | சத்திய வாசகம் | 122 |
| 170. | சத்துருசங்கர விருத்தம் | 18 |
| 171. | சமய சூத்திரம் | 51 |
| 172. | சரசுவதிபூரம் கடித்த பதிகம் | 12 |
| 173. | சற்குண, நிற்குண தனிப்பொருள் பதிகம் | 13 |
| 174. | சற்குரு கவிகள் | 3 |
| 175. | சற்குருபாதப் பதிகம் | 13 |
| 176. | சற்குரு விஜயம் | 169 |
| 177.* | சாத்தனார் அகவல் | 1 |
| 178.* | சித்தர் அந்தாதி | 102 |
| 179. | சித்தி விளையாடற் பதிகம் | 13 |
| 180. | சிவகுருநாத வெண்பா | 102 |
| 181. | சிவராத்திரி பதிகம் | 14 |
| 182. | சிவாயகுரு பதிகம் | 13 |
| 183. | சிறப்பு நூல் | 102 |
| 184. | சுரந்தீர்த்த பதிகம் 2 | 26 |
| 185. | சேரமான் ஆசிரியப்பா | 2 |
| 186. | தண்டபாணி யனுபூதி | 39 |
| 187. | தமிழ்க்கவிகள் உதிக்கும் வம்பு சகியாப் பதிகம் | 13 |

| | | |
|---|---|---|
| 188.* | தமிழலங்காரம் | 102 |
| 189.* | தமிழைத் துதித்த பதிகம் | 12 |
| 190. | தமிழ் விரும்பும் தெய்வம் இன்றித் தவித்த பதிகம் | 13 |
| 191. | தமிழ் வெறுத்த பதிகம் | 12 |
| 192. | தவப்பதிகம் | 13 |
| 193. | தனிக்குறில் வெண்பா | 1 |
| 194. | தனிநெடில் வெண்பா | 1 |
| 195. | தாழிசை | 1 |
| 196. | தானே தானான பதிகம் | 12 |
| 197. | திரிபு யமகக் கவி | 2 |
| 198. | திருக்கூட்டப் புகழ்ச்சி | 14 |
| 199. | திருப்பொதுச் சூத்திரம் | 9 |
| 200. | திருமலையம்மை கவி | 14 |
| 201. | திருமுலைப்பால் இரந்த பதிகம் | 12 |
| 202.* | திருமேனிச் சிவப்பு | 45 |
| 203. | திருவடி சூட்டிய பதிகம் | 13 |
| 204. | திருவருட் கண்ணி | 53 |
| 205. | திருவருட் சந்தனைப் பதிகம் | 13 |
| 206. | திருவருட் போதம் | 13 |
| 207. | திருவருள் நாட்டம் | 1020 |
| 208. | திருவருள் வழக்கு | 38 |
| 209. | திருவெண்பா | 212 |
| 210.* | தியானாநுபூதி | 37 |
| 211. | தெய்வக்கண்ணி | 122 |
| 212. | தெய்வங்கட்குத் தமிழாசை விளைத்த பதிகம் | 13 |
| 213. | தெய்வத் திருவாயிரம் | 1002 |
| 214. | தெய்வநாயகன் பதிகம் | 13 |
| 215. | தெய்வ மஞ்சரி | 34 |
| 216. | தெய்வ மஞ்சரி நூல் | 32 |
| 217. | தெய்வ வழக்கு | 104 |
| 218. | தெய்வவாழிப் பதிகம் | 13 |
| 219. | தெய்வாநுபூதி | 102 |
| 220. | தையச்சந்தக் கவி | 1 |
| 221. | நந்தனப் பாமாலை | 366 |
| 222. | நல்ல தெய்வங்கள் பதிகம் | 13 |

| | | |
|---|---|---|
| 223. | நவவீரர் பதிகம் | 13 |
| 224. | நாமாவளிப்பதிகம் (பொது) | 14 |
| 225.* | நானிலைச்சதகம் | 102 |
| 226. | நீரோட்டகத் தலைச்செய்யுள் அந்தாதி | 102 |
| 227. | நேரிசைப் பஃறொடைவெண்பா | 1 |
| 228. | பதிகவுந்தி | 13 |
| 229. | பரதெய்வ மகுட ஆசிரியப் பதிகம் | 13 |
| 230. | பரதேசிக் காவலன் பதிகம் | 13 |
| 231. | பரமகுருநாதன் பதிகம் | 13 |
| 232. | பல நாமக்காரன் வகுப்பு | 1 |
| 233. | பலிமறுத்த பதிகம் | 12 |
| 234. | பனை முறியப் பாடிய வெண்பா | 12 |
| 235. | பாடுந்தன்மை மறுத்த பதிகம் | 12 |
| 236. | பாறைக் கிணற்றந்தாதி | 102 |
| 237. | பாறையறும் பதிகம் | 13 |
| 238. | பிரணவாநுபூதி | 38 |
| 239. | பிரியாமை வேண்டுபதிகம் | 13 |
| 240.* | புலவர் கவி | 2 |
| 241.* | புலவர் புராணம் | 3003 |
| 242.* | பேரொலியலந்தாதி | 34 |
| 243. | பொதுநூல் | 102 |
| 244. | பொதுவான தெய்வ வகுப்பு | 1 |
| 245. | பொய்ப்புலவோர்பால் புகல் நவரத்னம் | 11 |
| 246. | பொருட்கலி முழுதும்போம் பதிகம் | 13 |
| 247.* | மயிலலங்காரம் | 102 |
| 248. | மரக்கல வருத்தப் பதிகம் | 13 |
| 249. | மருதன் காப்புப் பதிகம் | 13 |
| 250. | மழைப்பதிகம் | 13 |
| 251.* | மனுநெறித் திருநூல் | 1300 |
| 252. | மாணிக்கவாசகர் திரிபு, யமகம், பாடல் | 5 |
| 253. | மாலை மாற்று | 2 |
| 254.* | முசுகுந்த நாடகம் | 71 |
| 255. | முதலொலியல் அந்தாதி | 32 |
| 256.* | முத்தமிழ்ப் பாமாலை | 34 |
| 257. | முருகதாசர் அநுபூதி | 102 |
| 258. | மெய் வரோதய சதகம் | 102 |
| 259. | மெய்வழக்குப் பதிகம் | 13 |

| | | |
|---|---|---|
| 260. | மெய் வழக்கு மாலை | 14 |
| 261. | யாத்திரை துயர்தீரவேண்டு பதிகம் | 13 |
| 262.* | வடலூரார் வருகைப் பதிகம் | 12 |
| 263.* | வடலூரார் விணாப்பதிகம் | 12 |
| 264.* | வருக்கக்குறள் | 249 |
| 265. | வழக்குப் பதிகம் | 13 |
| 266. | விடுகவி | 10 |
| 267. | விடுகவி | 20 |
| 268. | விடுபாட்டு | 9 |
| 269. | விற்பனம் | 132 |
| 270. | வீரவாகுத்தேவர் பதிகம் 2 | 26 |
| 271. | வேண்டுகோள் மாலை | 18 |
| 272.* | வேலலங்காரம் | 102 |
| 273. | வேற்படைப் பதிகம் | 13 |

### தனிப்பாடல்

| | | |
|---|---|---|
| 274.* | தனிப்பாடல் திரட்டு | 210 |
| | மொத்தப்பாடல்கள் | 49,722 |

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் : (1839–1898) திருநெல்வேலி மாநகரில் தோன்றியவர். கௌமார நெறியை கருத்தூன்றி வளர்த்தவர். ஆதிசங்கரர் வழியில் 19–ஆம் நூற்றாண்டில் ஆறு சமயங்களையும் இணைக்க முனைந்த சமய நல்லிணக்கத் தோன்றல், 'அறுவகை இலக்கணம்', 'வண்ணத்தியல்பு', போன்ற இலக்கண நூல்களையும், 'புலவர்புராணம்', 'திருமகளந்தாதி', 'திருமால் ஆயிரம்', 'கணபதி ஆயிரம்', 'ஞாயிறு ஆயிரம்' எனப் பல நற்றமிழ்ப் பனுவல்களையும் படைத்த அருளாளர். ஆங்கில அரசின் கொடுமைகளைக் கண்டு மனம் வெந்து 'ஆங்கிலியர் அந்தாதி' பாடித் தம் எதிர்ப்பை புலப்படுத்திய நாட்டுப்பற்றாளர். மேலும் இவர் சிற்றிலக்கிய வகைகள் வாயிலாக இறையுணர்வுப் பாடல்களை இயற்றிய பெரும்புலமையாளர். இவர்தம் வாழ்வையும், வண்டமிழ்ப் பனுவல்களையும், இறை கொள்கைகளையும் உயிர் இரக்க உணர்வையும் அறிமுகம் செய்யும் நோக்கில் இந்நூல் எழுதப்பட்டுள்ளது.

முனைவர் ந. சொக்கலிங்கம் : மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் 25 ஆண்டுகள் பணியாற்றிய தமிழ்ப் பேராசிரியர். 'பாரதிதாசன் பாடல்களில் மரபும் புதுமையும்', 'மரபில் பூத்த மலர்கள்', 'சொன்னாலும் வாய் மணக்கும்', 'சொற் சித்திரங்கள்', 'தமிழியலும் தகவலியலும்' எனப் பல உரைநடை நூல்களை எழுதியவர். எளிய இனிய தமிழ் நடையில் 'வண்ணச்சரபம் தண்டபாணிசுவாமிகள்' குறித்து இந்நூலில் அறிமுகம் செய்துள்ளார்.

*Vannacharabham Dhandapani Swamigal* (TAMIL) Rs. 25.



*ISBN - 81-260-2378-3*